

கலீல் ஜிப்ரானின்

# ஞானமொழிகள்

## ஆத்ம தரிசனம்

ஆ.மா.சகதீசன்



ஆ.மா. சகதீசன். கலீல் கிப்ரானின் பித்தர் என்று கூறுவதை விடப் பக்தர் என்று கூறுவதே சரியாக இருக்கும்.

அவருக்கு கிப்ரானே தெய்வம். அவருடைய நூல்களைப் படிப்பதே ஆராதனை.

"கலீல் கிப்ரானே! உங்களை ஒரு தமிழனாக்கத் துடிக்கிறேன். தமிழ்த் தாய்க்கு உங்கள் நூல்கள் அனைத்தையும் அணிகலனாக்கி மகிழ வைக்க ஏங்குகிறேன்" என்கிறார் சகதீசன்.

அந்த ஏக்கம் வெறும் ஏக்கமாகவே நின்றுவிடாமல் கிப்ரானின் 20 நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். கிப்ரானை அதிகமாக மொழி பெயர்த்தவர் அவர்தாம்.

ஆ.மா. சகதீசனின் இந்த மொழி பெயர்ப்பு எளிய, அழகிய நடையில் அமைந்திருக்கிறது. அவருக்குத் தமிழ் இலக்கிய உலகு நன்றிக் கடன் பட்டிருக்கிறது.

*கவிக்கோ அப்துல் ரகுமான்*

கலீல் ஜிப்ரான்:

# ஞானமொழிகள், ஆத்மதரிசனம்

ஆங்கில நூல் தொகுப்பு :

ஜோசப் ஷீபென்

ஆசிரியர் :

தமிழில்:

ஆ.மா. சகதீசன்



1. The Wisdom of Gibran
2. The Mirrors of the Soul.

குமாரசாமி பதிப்பகம்

224, அன்னை சத்யா நகர், 6-வது தெரு,
நெசப்பாக்கம், மேற்கு கே.கே. நகர்,
சென்னை-600 078.

# நூல் விளக்கம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | கலீல் ஜிப்ரான்: ஞானமொழிகள், ஆத்மதரிசனம் |
| ஆசிரியர் | : | ஆ. மா. சகதீசன் |
| மொழி | : | தமிழ் |
| உரிமை | : | பதிப்பகத்தார்க்கு |
| நூல்வகை | : | ஞானமொழிகள் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | 2016 |
| புள்ளி | : | 11 |
| தாள் | : | 13.7 கி.கி. வெள்ளைத்தாள் |
| பக்கம் | : | 336 |
| அளவு | : | 1/8 டெம்மி |
| கட்டுமானம் | : | சாதாரண பைண்டிங் |
| வெளியீடு | : | குமாரசாமி பதிப்பகம்<br>224, அன்னை சத்யா நகர்,<br>6-வது தெரு,<br>நெசப்பாக்கம், மேற்கு கே.கே. நகர்,<br>சென்னை-600 078. |
| ஒளி அச்சு | : | புஷ்பலதா கிராபிக்ஸ்<br>மேற்கு மாம்பலம், சென்னை-33. |
| அச்சிட்டோர் | : | ரவி ராஜ் ஆப்செட்<br>சென்னை - 600 014. |

விலை : ரூ. 210

# பதிப்புரை

கலீல் ஜிப்ரான் அவர்களின் ஞானமொழிகள், ஆத்ம தரிசனம் என்னும் இந்த நூல் படிப்பதால் ஒவ்வொரு மனிதனும் வாழ்க்கையில் முன்னேற்றமடைய கடைபிடிக்க வேண்டிய அத்தனை அறிவுரைகளும் பொதிந்து உள்ளது. குறிப்பாக இன்றைய இளைஞர்கள் வயதானவர்களின் ஆலோசனைகளை, அறிவுரைகளை, புத்திமதிகளைக் கேட்டு, தெளிதல் வேண்டும். ஏனெனில் அவர்களின் கண்கள் பலப்பல ஆண்டுகளின் முகங் களைக் கண்டுள்ளன. அனுபவம் பெற்று முதிர்ச்சி அடைந்துள்ளனர். அவர்களின் காதுகள் வாழ்க்கையின் பலப்பல குரல்களைக் கேட்டிருக்கின்றன. அவர்களின் ஆலோசனைகள் உனக்குக் கசப்பாக இருந்தாலும், இனிக்கவில்லை என்றாலும், அவர்கள் சொற்களைக் கேட்டு சிந்திக்கவும் என கலீல்ஜிப்ரான் அவர்கள் ஞானமொழியில் குறிப்பிட்டுள்ளார்.

கலீல் ஜிப்ரானை முழுமையாக அறிந்து உணர வேண்டுமென்றால் அவர் நூல்கள் அனைத்தையும் படிக்க வேண்டும். அப்போதுதான் நாம் திருப்தி பெற முடியும்.

இந்த நூலை தமிழில் அழகாக மொழிபெயர்த்து நம் தமிழ் மக்களுக்கு அளித்த திரு.ஆ.மா. சகதீசன் அவர் களுக்கு நன்றி.

தமிழ் மக்கள் அனைவரும் படித்து பயன்பெறுமாறு வேண்டுகிறோம்.

அன்புடன்

பதிப்பகத்தார்

# Kahlil Gibran 1883 - 1931

"HIS POWER came from some great reservoir of spiritual life else it could not have been so universal and potent, but the majesty and beauty of the language with which he clothed it were all his own."

CLAUDE BRAGDON

poet, philosopher, and artist, was born in Lebanon, a land that has produced prophets. The millions of Arabic-speaking peoples familiar with his writings in that language consider him the genius of his age. But he was a man whose fame and influence spread far beyond the Near East. His poetry has been translated into more than twenty languages. His drawings and paintings have been exhibited in the great capitals of the world and compared by Auguste Radim to the work of William Blake.

இந்தத் தொகுப்பில்
மேற்கோள் காட்டப்படும்
கலீல் ஜிப்ரானின் நூல்கள்:

1. *முறிந்த சிறகுகள்* - Broken Wings
2. *ஜிப்ரானின் நீதிக்கதைகள்* - The Parables of Gibran
3. *ஊர்வலம்* - The Procession
4. *ஆத்ம தரிசனம்* - Mirrors of the Soul
5. *கடிதங்கள், உரையாடல்*
   - Correspondence & Conversation
6. *இதயத்தின் இரகசியம்* - The Secrets of Heart
7. *தன் ஓவியம்* - A self portrait
8. *ஆத்ம புரட்சி* - Spirit Rebellious
9. *ஜிப்ரானின் எண்ணங்களும் தியானமும்*
   - The Thoughts & Meditation
10. *ஜிப்ரானின் பொற்களஞ்சியம்* - A Treasury of Gibran
11. *கண்ணீரும் களிப்பும்* - Tears & Laughter
12. *ஆசானின் ஞானமொழி* - The Words of the Master
13. *ஆசானின் குரலொலி* - The Voice of the Master

அரபிய மொழியிலிருந்து
ஆங்கில மொழியாக்க ஆசிரியர்கள் :

1. *ஆந்தோணி ரிச்கலையாபெரிஸ்*
2. *அன்னி சலீம் ஓட்டோ*
3. *ஜோசப் ஷீபென்*
4. *ஹெச்.எம்.நஹமட்*
5. *ஜார்ஜ் கெய்ராலையா*
6. *ஆண்ட்ருகாரிப்*

# பொருளடக்கம்

1. கலீல் ஜிப்ரான் ஞான மொழிகள் ... 9
2. கலீல் ஜிப்ரான் ஆத்மதரிசனம்

1. இது இயலுமா? ... 176
It is all Possible?

2. ஜிப்ரானை உருவாக்கிய
சூழ்நிலையும் சுற்றுச்சூழலும் ... 180
The Environment
That Created Gibran

3. ஜிப்ரான் பிறந்த இடம் ... 189
The Birth Place of Gibran

4. எச்சரிக்கை ... 199
words of Caution

5. ஜிப்ரானின் இரட்டைத் தோற்றம் ... 208
Gibran's Dual Personality

6. ஜிப்ரானின் ஓவியமும் காவியமும் ... 230
Gibran's Painting and poetry

7. ஜிப்ரானின் தத்துவம் ... 236
The Philosophy of Gibran

8. ''உன் நாடு உனக்கென்ன செய்தது
என்று கேட்காதே!'' ... 262
can do for You!"

9. தனிமையும் ஒதுக்கிடமும் ... 272
Solitude and Seclusion

10. கடல் ... 276
The Sea

11. பெருங்கடல் (மகா சமுத்திரம்) ... 285
The Great Sea

12. ஏழு நிந்தனைகள், ஏழு கண்டனங்கள் ... 288
Seven Reprimands

13. சரித்திரத்தில் பதிவாகாத
ஓர் ஆண்டு காலத்தில் ... 289
During a year not
registered in History

14. ஜிப்ரானின் வாழ்க்கையில் பெண்கள்:
Thw women in the life of Gibran
கமீலா - ஜிப்ரானின் தாய் ... 291

15. மிக்சிலைன் ... 297
Micheline

16. மேரி ஹஸ்கல் அல்லது மேரி கொயூரி? ... 300
Mary E.Haskell or Mary Khoury?

17. பார்பரா யங் ... 302
Barbara Young

18. மரியானா ... 312
Mariana

19. மே செய்டா ... 314
May Ziadeh

20. ஸல்மா கராமி ... 322
Salma Karamy

21. கலீல் ஜிப்ரான் ... 325
(வாழ்க்கை வரலாறு)

# கலீல் ஜிப்ரான் ஞான மொழிகள்

Edited By :

JOSEPH SHEBEN

தொகுத்தவர் :

ஆங்கிலத்தில்:

ஜோசப் ஷீபென்

தமிழில்:

ஆ.மா. சகதீசன்

# A

## ACTION - செயல்

*மிகப்பெரிய அறிவைப் பெற்றும் சோம்பேறியாய் செயலற்று இருப்பதிலும், கொஞ்சம் அறிவுடன் செயலாற்றுவது சாலச் சிறந்தது.*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

*மேன்மையான பொருளில் நம்பிக்கை வைத்து, அதை செய்து நிறைவேற்றுவதே பலப்பரீட்சை. பெரும்பான்மையான வர்கள் கடலின் கர்ஜனை போல் பேசுவார்கள். ஆனால், அவர்களது வாழ்க்கை ஆழமற்ற குட்டையாய், தேங்கிக் கிடக்கும் சகதியாய் இருக்கும்; நாற்றமடிக்கும். பெரும் பான்மையான மக்கள் தங்கள் தலையை மலைச்சிகரத்திற்கும் மேலே உயர்த்துவர்;*

ஆனால் அவர்களின் உள்ளுணர்வு, ஆத்மா, குகைகளிலே கண்ணுக்குத் தெரியாமல் தூங்கிக் கொண் டிருக்கும்.

(இதயத்தின் இரகசியம்)

☆

## ADOLESCENCE - இளமை, விடலை

சாதாரணமாய், தூய்மையாய், இயற்கையாய் இல்லாமல் இருத்தல், மனிதனை ஒன்றுமற்றவனாய் செய்கிறது; அந்த வெறுமை அவனை சோம்பேறியாய், சிரத்தை அற்றவனாய், சிந்தனை அற்றவனாய் செய்துவிடுகிறது. சிலர் செத்தே பிறக்கின்றார்கள்; சிலர் உறைந்துபோன பிணமாய் வாழ் கின்றார்கள் என்பது உண்மையே; ஆனால் உணர்ச்சியுள்ள ஓர் இளைஞன் அதிகமாகச் சிந்தித்து, கொஞ்சமாய் தெரிந்து கொள்வது மிகவும் துரதிர்ஷ்டமான பிறவி; அவன் இந்த உலகில் இருபெரும் சக்திகளால் கிழிக்கப்படுகின்றான். முதல் சக்தி அவனை மிக உயரமாக ஏந்திச் சென்று, வாழ்க்கையின் அழகையெல்லாம், கனவு மேகங்களிடையே காண்பிக்கிறது. இரண்டாவது சக்தி அவனை இப்பூமியிலேயே கட்டி வைத்து, அவன் கண்களிலே புழுதியை நிரப்பி, பயத்தாலும் இருளாலும் அவனை அடக்கி வெற்றி கொள்கிறது.

(முறிந்த சிறகுகள்)

☆

## ADVICE - புத்திமதி - அறிவுரை

எவன் ஒருவன் மற்றவர் புத்திமதியை கேட்காதவனோ, அவன் ஒரு முட்டாள். அவனுடைய தவறுகள் உண்மையை உணர முடியாமல் கண்களை மறைக்கின்றன; அவனைக் கெடுத்து, திமிர்கொள்ளச் செய்து, இறுமாப்படைந்து, வாழும் மக்களுக்கு ஓர்

அபாயமானவனாக்குகிறது.

(ஆசானின் ஞான மொழி)

☆

## AFFECTION - நேசம்

இதயத்தின் அன்பு 'சிடார்' மரக்கிளைகள் போல் பலவாகப் பிரிந்து பரவுகிறது; அந்த மரத்தின் ஒரு பெரிய கிளை முறிந்து விழுமாயின் அதன் பலம் குறையும்; வருந்தும்; ஆனால் இறந்துவிடுவதில்லை. அதனுடைய உயிர்ச்சத்து அனைத்தையும் மீதமுள்ள கிளைகளுக்குக் கொடுக்கும்; ஏனெனில் அந்த கிளைகள் வளர்ந்து வெற்றிடங்களை நிரப்பும்.

(முறிந்த சிறகுகள்)

☆

## AGE - வயது - காலம்

வயதானவர்களின் ஆலோசனைகளை, அறிவுரைகளை, புத்திமதிகளைக் கேட்டு, தெளிதல் வேண்டும். ஏனெனில் அவர்களின் கண்கள் பலப்பல ஆண்டுகளின் முகங்களைக் கண்டுள்ளன. அனுபவம் பெற்று முதிர்ச்சி அடைந்துள்ளனர். அவர்களின் காதுகள் வாழ்க்கையின் பலப்பல குரல்களைக் கேட்டிருக்கின்றன. அவர்களின் ஆலோசனைகள் உனக்குக் கசப்பாக இருந்தாலும், இனிக்கவில்லை என்றாலும், அவர்கள் சொற்களைக் கேட்டு சிந்திக்கவும்.

(ஆசானின் ஞான மொழி)

☆

## AMBITION - முன்னேறும் ஆசை-உயர்நோக்கம்

என்ன நன்மை இருக்கிறது, உங்களை வேண்டுகிறேன் சொல்லுங்கள்! வாழ்க்கைச் சந்தையிலே, மற்றவரை

முழங் கையால் முட்டிச் செல்வதிலே, வாதிடும் சந்தடியில், குழப்பத்தில், எதிர்ப்பதில், ஆட்சேபிப்பதில், மறுப்பதில், முடிவற்ற விவாதங்களில் என்ன பயன்?

இருட்டிலே அகழெலி போல் மண் தோண்டி சிலந்தியின் நூலைப் பற்றிக்கொண்டு எப்போதும் முன்னேறும் ஆசையிலே நாசம் செய்து வாழ்வோர் எல்லோரும் இறந்தோரைச் சேருகிறோம்.

(ஊர்வலம்)

☆

## AMERICANS - அமெரிக்கர்கள்

அமெரிக்கர்கள் எல்லாம் பலம்மிக்க மக்கள்; அவர்கள் சோர்வடைவதில்லை; தூங்குவதில்லை; கனவு காண்பதில்லை; எடுத்த காரியத்தைக் கைவிடுவதில்லை; சாதித்தே தீர்வார்கள். அமெரிக்கர்கள் யாரையாவது வெறுப்பார்களேயானால் அவர் களை உதாசீனம் செய்வதாலேயே கொன்றுவிடுவார்கள்; அவர்கள் ஒருவரை விரும்பி நேசிப்பார்களானால் அவர்கள் மேல் அன்பு, ஆசை, காதல் எல்லாம் பொழிவார்கள்.

(சுயதரிசனம், நீதிக்கதை)

☆

## ANCESTRY - பரம்பரை

ஒரு மனிதன் தன் பரம்பரை பிறப்பால் மட்டும் உயர்ந்த, பெருமைமிக்க, கம்பீரமான, உயர்குடிப் பிறப்பினனாய் ஆகிவிடுவதில்லை. உலகச் சரித்திரத்தில் எத்தனை பிரபுக்கள், பெருமகனார்கள் கொலைகாரர்களின் வழித்தோன்றல்கள் தெரியுமா?

(ஆத்மாவின் கண்ணாடி)

☆

## ANTHROPOMOREPHISM - கடவுளுக்கு மனிதத் தோற்றம் - கடவுளின் மனித உருவம்

*மலைகள், மரங்கள், ஆறுகள் தங்கள் தோற்றங்களை காலத்திற்கும், பருவங்களுக்கும் தக்கவாறு மாற்றிக்கொள் கின்றன. மனிதன் தன் அனுபவத்திற்கும், உணர்ச்சிகளுக்கும் தகுந்தபடி மாறுவதுபோல. மிக உயர்ந்த 'பாப்லர்' மரம் (சவுக்கு மரம்போல்) பகல் நேரத்தில் ஓர் மணப்பெண் போல இருக்கிறது; மாலையிலே ஒரு புகைத்தூண் போலக் காட்சிதரும்; பிற்பகலில் மிக உயரமாய் மனிதன் அடைய முடியாத கற்பாறைக் கோட்டையாய், இரவிலே பரிதாபமான ஏழை போல் தோற்றமளிக்கும். இதற்கு பூமியே படுக்கை, ஆகாயமே அதன் போர்வை. காலையிலே மின்னி ஜொலிக்கும் அருவி, முடிவின்மையைப் பற்றி பண்பாடும். நீரோடை மாலையிலே கண்ணீர் ஆறாய், குழந்தையைப் பறிகொடுத்த தாய் ஓலமிட்டு அழுவது போல் மாறிவிடும்.*

*(முறிந்த சிறகுகள்)*

☆

## APPEARANCE - தோற்றம்

*ஒரு பொருளின் தோற்றம் அதன் உணர்ச்சி பாவங்களுக்குத் தக்கபடி மாறும்; அதில் நாம் அழகையும், மாய் மந்திரத்தையும் காண்கிறோம். ஆனால் அழகும், மாயமும் நம்முள்ளேயே இருக்கிறது.*

*(முறிந்த சிறகுகள்)*

☆

*இதயத்தில் உள்ள உணர்ச்சியின் (ஆத்மாவின்) நோக்கம் மூடி மறைக்கப்பட்டுள்ளது; அதன்*

வெளித்தோற்றத்தைக் கொண்டு நாம் தீர்ப்பு கூற முடியாது.

*(ஜிப்ரானின் பொற்குவியல்)*

☆

## ART - கலை

கலை என்பது கலைஞனின் கற்பனைக்கும், ரசிகன் பார்வைக்கும் இடையே நேரடியான தொடர்பை அறிவிக்க வேண்டும். இந்த காரணத்திற்காகவே நான் முடியுமான வரையில் ரசிகனின் கண்களுக்கு அதிக வேலை அளித்து, அதிகமான விவரங்களைக் கொடுத்து குழப்புவதைத் தவிர்க் கிறேன். அப்போதுதான் ரசிகனின் கற்பனை, எண்ணங்கள் அதிக தூரமும், பரப்பும் கொண்டு அலையும். மனித உருவ அமைப்பு களைப் பொறுத்த வரை, கலை உருவாகி தன்னைத்தானே விளக்கிக் கொள்ள நிர்ப்பந்திக்கப்படும். அவை மிக அழகான உருவ அமைப்புகள்; இல்லையேல் கலையின் நோக்கமே தோல்வியடையும்.

*(நீதிக்கதைகள்)*

☆

உண்மையிலேயே கடவுள்தான் மனிதனை உற்பத்தி செய்தாரா? அல்லது மனிதன்தான் கடவுளை உண்டாக்கினானா? கற்பனைதான் ஒரே ஒரு சிருஷ்டிகர்த்தா; உற்பத்தியாளர். அவனுடைய தெளிவான, மிக நெருக்கமான வெளிப்பாடுதான் கலை; உற்பத்திதான் கலை. ஆம் கலையே வாழ்வு; வாழ்வே கலை. மற்ற எல்லாம் சாமான்யமான, வேற்று உவமைகள்; ஒப்பிடுதல் ஆகும்.

*(ஜிப்ரானின் நீதிக் கதைகள்)*

☆

*கலை என்பது தெரிந்ததைக் கொண்டு தெரியாததை அறிய, எடுத்து வைக்கும் முதல் அடி.*

*(ஆத்ம தரிசனம்)*

☆

## ARTIST - கலைஞன் - ஓவியன்

*நான் என் கலைக்கே ஒரு துரோகியாவேன்- எப்போது? நான் என் ஓவியங்களுக்காக உட்காரும் பெண்ணின் கண்களைக் கடன் பெறுவேனானால்! உன் உள்ளே மறைந்திருக்கும் ஆத்மாவை அப்படியே உண்மையாகப் பிரதிபலிக்கும் அதி அற்புதமான கண்ணாடிதான் முகம். ஓவியனின் தொழில் அதைக் கூர்ந்து தெரிந்து அப்படியே ஓவியமாக வரைவதுதான்; இல்லையேல் அவன் கலைஞன், ஓவியன் என்று அழைக்கத் தகுதி அற்றவன்.*

*(ஜிப்ரனின் நீதிக்கதைகள்)*

☆

## AUTHORITY - அதிகாரம்

*சகோதரனே! சுயநலம்தான் கண்மூடித்தனமான, தானே உயர்ந்தவன் என்ற இறுமாப்பைக் கொடுக்கிறது. அந்த உயர்ந்தவன் என்ற இறுமாப்பு, தன்னுடைய சாதி, இனம் என்ற திமிரைத் தோற்றுவிக்கிறது. இனத் திமிர் அதிகாரத்தைத் தருகிறது. அளவுக்கு மீறிய அதிகாரம் மற்றவரை அடக்கவும், கீழ்ப்படுத்தவும், பேதப் படுத்தவும், சச்சரவு செய்யவும் வழி வகுக்கிறது.*

*ஆத்மா ஞானத்தின் சக்தியை நம்புகிறது. அறியாமையோ அதிகாரத்தின் நீதி, நியாயத்தை நம்புகிறது; வாள் ஏந்தி தற்காப்பு செய்வதை அதிகாரம் பறிக்கிறது; அறியாமையையும் அடக்கு முறையையும் பலப்படுத்துகிறது.*

*இத்தகைய அதிகாரத்திமிர்தான் பாபிலோனை அழித்தது; ஜெருசலத்தின் அடித்தளத்தையே அசைத்தது; ரோமாபுரியை அழிந்த இடிபாடுகளாய் விட்டுச் சென்றது; இந்த அதிகாரம்தான் குற்றவாளிகளைப் பெரிய மனிதர்களாக்கி, எழுத்தாளர்களை அவர்கள் பெயருக்கு மரியாதை கொடுக்கச் செய்து, சரித்திர ஆசிரியர்களை அவர்களின் மனிதத் தன்மையற்றச் செயல்களை யெல்லாம் புகழச் செய்தது.*

*(கண்ணீரும் களிப்பும்)*

# B

## BARRENNESS - மலட்டுத் தன்மை

**உ**லகில் மலர்கள் பிறந்ததிலிருந்து எத்தனை மலர்கள் மணமின்றி வாடிவிட்டன? வான வெளியிலே மிதக்கும் மேகக்கூட்டம் எத்தனை, மழை பொழியாது கலைந்து கரைசின்றன? கடல் ஆழத்திலே விளையும் சிப்பிகளிலே எத்தனை சிப்பிகள் முத்தின்றி மலடாகின்றன!

(ஜிப்ரானின் கருவூலம்)

☆

## BEAUTY - அழகு-வசீகரம்-இனிமை

அழகு என்பது உள் ஆத்மாவை வசீகரிப்பது, ஈர்ப்பது, கவர்வது. அழகு கொடுக்கத்தான் விரும்புமே அன்றி, பெற்றுக் கொள்ள முனையாது. நீ அழகை சந்திக்கும்போது, உன்னுடைய உள்மனத்திலே இருக்கும் கைகள் விரிந்து வரவேற்று, இதய சாம்ராஜ்யத்திற்குள் அழைத்து வருவதை உணர்வாய். அழகு ஓர் இன்பமும் துன்பமும் கலந்த அதி அற்புதமான உணர்வு; அழகு

பார்க்க முடியாதது. ஆனால் உன்னால் புரிந்து கொள்ள முடியும்; அது ஓர் பேச்சற்றது. ஆனால் உன்னால் கேட்க முடியும்; அழகு புனிதத்திலும் புனிதமானது; அழகு உன்னிலே ஆரம்பமாகி, உன் உலகக் கற்பனைகளுக்கும் அப்பால்தான் விரிவடைந்து முடிகின்றது.

(கண்ணீரும் களிப்பும்)

☆

உங்களுக்கு மனித இனத்தால் போதிக்கப்பட்ட பலப்பல மத நம்பிக்கைகளால் தொல்லையும் தொந்தரவும் ஏற்பட் டுள்ளதா? நீங்கள் முரண்பட்ட நம்பிக்கைகள் எனும் பள்ளத்தாக்கில் உங்களையே இழந்து விட்டீர்களா? மதத்திற்கும் அரசியலுக்கும் எதிரான கொள்கைகளிலே, மதபோதத்தில் இவற்றில் கொண்டுள்ள சுதந்திரம், தாழ்மையுடன் கீழ்ப்படிதல் எனும் அடக்கத்தைவிட கனம் குறைந்தது என்று நினைக் கின்றீர்களா? மாறுபட்ட கருத்துச் சுதந்திரம், சமயத்திற்கேற்ற சாதுர்யத்துடன் பலப்படுவதை விட பாதுகாப்பானது என்கின்றீர்களா?

அப்படியானால் நீங்கள் அழகை உங்கள் மதமாக்கிக் கொள்ளுங்கள்; அழகை பக்தியோடு கடவுள் என்று வழிபடுங்கள்; அழகுதான் கடவுளின் மிகவும் குறைவற்ற கைவினைப் பொருள்; அழகானது கண்களால் பார்த்து, தெளிவாக உணரக்கூடியது. கடவுள் தன்மையுடன் விளையாடி, அதை ஒரு போலியாக மோசம் செய்வதைத் தூக்கி எறி; பேராசை, கர்வம், திமிர் எல்லாம் கூட்டி வஞ்சிப்பதை வெறுத்து ஒதுக்கு; ஆனால் அழகின் தெய்விகத் தன்மையில் நம்பிக்கை கொள்; அதுதான் நீ வாழ்க்கையை வழிபட, ஆராதிக்க ஆரம்பிப்பதன் முதற்படி; அதுவே உன் இன்பப் பசிக்கு ஊற்று.

நீ அழகின் முன் தியானம் செய்; உன் பாபங்களைச் சாந்தப்படுத்தும்; அழகு உன் இதயத்தை பெண்மணிகளின் சிம்மாசனத்திற்கு அருகே கொண்டு செல்லும்; பெண்கள்தாம் உன் அன்பைப் பிரதிபலிக்கும் கண்ணாடி; இயற்கையின் வழியிலே உனக்கு போதிக்கும் இதயத்தின் ஆசிரியர்; இயற்கையே உன் வாழ்க்கையின் வீடு.

(ஆசானின் ஞான மொழிகள்)

☆

நம் உள் உணர்வுகள்தான் அழகைப் புரிந்து கொள்ள முடியும்; அழகுடன் வாழ்ந்து வளர முடியும்; அழகு நம் மனத்தைத் தடுமாறச் செய்யும், விடுவிக்க முடியாத புதிர் ஆக்கும்; அழகை நாம் வார்த்தைகளால் விவரிக்க முடியாது. பார்ப்பவர், பார்க்கப்படுபவர் ஆகிய இருவரிடமும் தோன்றும் உணர்ச்சி; உண்மையான அழகு ஓர் ஒளிக்கதிர், அது புனிதத்தினும் புனிதமான உள்ளுணர்விலிருந்து வெளிப்பட்டு ஒளியைப் பரப்புகிறது; உடம்பை பிரகாசிக்கச் செய்கிறது. எப்படி பூமியின் ஆழத்தில், உயிர்ச்சத்து வெளியாகி மலர்களுக்கு மணமும், வண்ணமும் தருகின்றதோ அப்படியேதான் அழகும்.

(முறிந்த சிறகுகள்)

☆

அழகு, மகிழ்ச்சிக்கும் துக்கத்திற்கும் இடையே ஒலிக்கும் இன்ப இசை; அழகு, புனிதத்திலும் புனிதமானதிலிருந்து உற்பத்தியாகி, நம் கற்பனைக்கும் அப்பால் முடிவடைகிறது.

(ஜிப்ரானின் நீதிக்கதைகள்)

☆

அழகு முகத்தில் இல்லை.
அழகு இதயத்தில் உள்ள ஒளி.

(ஆத்மாவின் கண்ணாடி)

☆

## BEING - நிலைத்திருத்தல்

*ஆத்மாவின் கண்ணாடி கற்பனையை பிரதிபலிக்காது. கண்ணாடியின் முன் எந்த ஒரு பொருள் உள்ளதோ அதைத்தான் பிரதிபலிக்கும். ஓர் அமைதியான ஏரியில் நீர்ப்பரப்பில், ஆழத்தில் ஒரு மலையின் நிழலையோ, உருவத்தையோ பிரதிபலிக்காது, அது அருகில் நிலைத்திருந்தால் தவிர. ஒரு மரத்தின் ஓவியத்தையோ, முகில் மிதக்கும் அழகையோ ஏரியின் அருகில் இருந்தாலன்றி பிரதிபலிக்காது. வெளிச்சம், ஒரு பொருள் இருந்தால்தான் அதன் நிழலை பூமியின் மேல் தவழ விட முடியும். எதையும் நாம் பார்க்கவோ, கேட்கவோ, உணரவோ முடியாது, அது உண்மையில் நிலைத்திருந்தால் அன்றி!*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

## BELIEVER - நம்புவோன்

*ஒரு பொருள் இருப்பது தெரிந்தால் அதை நீ நம்புகிறாய். உண்மையான நம்பிக்கையாளன் தன் ஆத்மாவின் பகுத்துணரும் சக்தியால் பார்க்கின்றான்; உலகின் பரப்பிலே துருவி ஆராயும் நிபுணனால் தன் கண்களால் காண முடியாது; ஆனால் அவனால் தன் உள்மன எண்ணங்களால் அறிந்து உணர முடியும்; வெளியில் ஆராய்ச்சி செய்பவன், தான் சேகரித்த எண்ணங்களைக் கொண்டு, கோரிக்கை விடுத்து புரிந்துகொள்ள முடியாது.*

*நம்பிக்கை மிக்கவன் தன் ஆழ்ந்த உணர்ச்சிகளால் அறிவால் ஞானத்தால் புனிதமான உண்மை நிலையை அறிமுகப்படுத்திக் கொள்கிறான். இந்த ஞானம்*

மற்றவர்கள் உபயோகிப்பதிலிருந்து வேறுபட்டது. ஒரு நம்பிக்கை மிக்கவன் தன் அறிவை, ஞானத்தைத் தன்னைச் சுற்றிலும் உள்ள ஒரு மதில் சுவராக பார்க்கிறான்; அவன்-தன்னுடைய பாதையில் நடக்கும்போது, ''இந்த நகருக்கு வெளியேறும் வழியில்லை; ஆனால் இது முழுமையாக உள்ளேயே இருக்கிறது;'' என்று நினைக்கின்றான். ஒரு பக்தன் எல்லா இரவிலும் பகலிலும் வாழ்கின்றான்; நம்பிக்கையற்றவன் ஒரு சில மணிகளே வாழ்கிறான்.

(இதயத்தின் இரகசியம்)

☆

## BODY - உடல்-உடம்பு-மெய்-தேகம்

எவன் ஒருவன் உடம்பிலிருந்து ஆத்மாவைவெட்டிப் பிரிக்க முயற்சி செய்கின்றானோ அல்லது ஆத்மாவிலிருந்து உடம்பை பிரிக்க முயற்சிக்கின்றானோ அவன் தன் இதயத்தை உண்மையிலிருந்து வெகு தூரத்திற்கு விலக்கிக் கொள்கின்றான். மலரும் அதன் மணமும் ஒன்று; குருடன் மலரின் எழிலையும் அதன் வண்ணத்தையும் மறுக்கின்றான். ஏன் எனில் அவனுக்கு மலரிலே மணம் ஒன்றுதான் இருக்கிறது. அதுவே காற்றிலே கலக்கின்றது என்று நம்புகிறான். மூக்குப் பொடி போட்டவன் மலர்களைப் பார்த்து இவற்றுக்கு உருவ அழகும், வண்ணமும் தான் இருக்கின்றது. இதற்கு மணமே இல்லை போலும் என்று நினைக்கின்றான்.

(இதயத்தின் இரகசியம்)

☆

வாழ்க்கை ஆடைகள் அற்றது, நிர்வாணமானது. ஓர் நிர்வாணமான உடம்புதான் வாழ்க்கைக்கு உண்மையான, கம்பீரமான புகழ்மிக்க அறிகுறி. நான் ஒரு மலையை ஒரு மனித உடல் குவியலாக வரைவேனானால், ஒரு

*நீர்வீழ்ச்சியை அதிரும் மனித உடம்புகளாக ஓவியம் தீட்டுவேனானால், அதற்குக் காரணம் இதுதான். நான் மலையைப் பார்க்கும்போதெல்லாம் அது ஓர் மனித உடல்களின் குவியலாக்கக் கற்பனை செய்கிறேன்; ஓர் நீர்வீழ்ச்சியில் துரிதமாக ஓடும் மின்சார ஓட்டமே வாழ்க்கை என நினைக்கின்றேன்.*

*(ஜிப்ரானின் நீதிக்கதைகள்)*

☆

*(ஆ.மா.ச.குறிப்பு: ஜிப்ரானின் ஓவியங்கள் எல்லாம் மனித உடல்களைக் கொண்டே வாழ்க்கையின் பல்வேறு தத்துவங் களை விளக்கும்படி உள்ளன. எல்லாம் நிர்வாணமானது. ஒரே ஓர் ஓவியத்தில் கூட அவர் மனித உடம்பின் மேல் ஆடை அணிவிக்கவில்லை. அவருடைய எல்லா நூல்களிலும் மொத்தமாக 200 ஓவியங்கள் உள்ளன. அவருடைய ஓவியங் களுக்கு 'ஜிப்ரானின் நீதிக்கதைகள்' என்ற நூலில் விளக்கங்கள் எழுதப்பட்டுள்ளன. 'ஓவியமும் காவியமும்' நூல் விளக்கும்.)*

☆

## BOSTON - பாஸ்டன் நகர் (USA)

*பாஸ்டன் நகரை பழங்காலத்தே கலையும், விஞ்ஞானமும் வளர்ந்த நகரம் என்றனர்; ஆனால் இக்காலத்தில் அது ஒரு பரம்பரை வழக்கங்கள், தலைமுறைத் தத்துவம் கொண்ட நகரமாக விளங்குகிறது. இதில் வாழும் மக்களின் ஆத்மாக்கள் கற்களாக கடினப்பட்டு விட்டன; அவர்களுடைய சிந்தனை களும் நைந்து, கிழிந்து போன பழைய பழைய எண்ணங்கள். இங்குள்ள விசித்திரம் என்னவென்றால், கல்லான ஆத்மா வுடைய இவர்களின் கர்வமும் தற்புகழ்ச்சியும்தான்; பழைய, கிழிந்த, தேய்ந்த*

*இவர்கள் தாழ்வாய் தங்களை உயர்த்திக் கொண் டிருப்பதே!*

*(ஜிப்ரானின் கடிதங்கள்)*

☆

## BOUNTY - வெகுமதி-தானம்

*காதலுக்கும் அழகிற்கும் ஏங்கும் அழிவற்றப் பசியே, முடிவற்றப் பசியே என் வாழ்க்கையின் ஒரே ஆசை. இப்போது நான் உணர்கின்றேன், எவன் ஒருவனிடம் இந்த வெகுமதி உள்ளதோ அவன் மிகவும் துர்பாக்கியசாலி; ஆனால் என் ஆத்மாவிற்கு வீணையின் நாதத்தைவிட, புல்லாங்குழல் இசையை விட காதலர்களின் அழுகை ஆறுதல் அளிக்கின்றது; இன்பம் கொடுக்கிறது.*

*(ஜிப்ரானின் கொற்களஞ்சியம்)*

☆

## BRAVERY - வீரம் - தைரியம்

*வீரம் ஓர் எரிமலை; தடுமாற்றம், தயக்கம் எனும் விதைகள் அந்த எரிமலையின் வாய் விளிம்புகளில் வளர்வதில்லை.*

*(ஆத்மாவின் கண்ணாடி)*

☆

## BROTHER HOOD - சகோதரத்துவம்

*சகோதரனே! நான் உன்னை நேசிக்கின்றேன்; ஏன் எனில் நீ பலமிக்க அடக்கு முறைக்காரனின் முன் பலமற்றவன்; பேராசை கொண்ட பணக்காரனின் முன் நீ ஓர் ஏழை. இதற்காக நான் கண்ணீர் விட்டு உனக்கு ஆறுதல் கூறுகின்றேன்; என் கண்ணீருக்குப் பின்னாலிருந்து பார்க்கும்போது நீதியின் அணைப்பிலே நீ*

*சிரித்துக்கொண்டு, உன்னை தண்டித்தவர்களை மன்னித்து மகிழ்ந்திருக்கின்றாய்; நீ என் சகோதரன்; நான் உன்னை நேசிக்கின்றேன்.*

*(களிப்பும் கண்ணீரும்)*

☆

*என் அன்புச் சகோதரனே! நான் உன்னை மிகவும் நேசிக்கின்றேன். நீ யாராக இருந்தாலும் சரியே, நீ மாதா கோயிலில் பிரார்த்தனை செய்பவராயினும் கோயிலிலே எண் சாண் உடலும் தரையில் வீழ்ந்து வணங்குபவனாக இருப்பினும், மசூதியிலே மண்டி இட்டு வழிபாடு செய்பவனாயினும் எனக்கு எல்லாரும் ஒன்றே; அனைவரும் சகோதரர்களே!*

*நீங்களும் நானும் ஒரே நம்பிக்கையின், மதத்தின் குழந்தைகள். பரம்பொருளின், சர்வ வல்லமை வாய்ந்த தெய்வத்தின் அன்புக் கரங்களின் விரல்கள் போல் விரிந்த மதமார்க்கங்கள் எல்லாம் அனைவரையும் அணைக்க நீள்கிறது; அனைவரின் ஆத்மாவிற்கும் முழுத் தன்மையையும் அர்ப்பணித்து, அனைவரையும் ஏற்றுக்கொள்ள ஆவலுடன் ஏங்குகிறது.*

*(ஆசானின் ஞானமொழி)*

◉

# C

CHAINS - சங்கிலிகள்

*சங்கிலியால் பிணைக்கப்பட்டவரெல்லாம் பணிவ தில்லை. சில சமயங்களில் சங்கிலிகள் கழுத்து ஆரத்தை விட உயர்ந்தவை; பெருமை கொடுப்பவை.*

*(ஆத்மாவின் கண்ணாடி)*

☆

CHARITY - ஈகை, தருமம், கருணை

*உலர்ந்து, மெலிந்து கையேந்தி நிற்கும் வறியோனின் கைகளிலிடும் நாணயம்தான் உன் செல்வமிக்க இதயத்தையும் கடவுளின் கருணை தோய்ந்த இதயத்தையும் இணைக்கும் ஒரே பொன் சங்கிலி.*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

CHATTER - வாயாடி

*நான், கர்வத்தை வீரமென்றும், மென்மையைக் கோழைத் தனமென்றும் கருதும் மக்களை விட்டு விலகிச்*

*செல்கிறேன். வாயாடித் தனத்தையும் ஞானம் என்றும், மௌனத்தை, அறிவின்மை என்றும் கருதும் மக்களிடமிருந்து தூரம் ஒதுங்கி விடுகிறேன்.*

*(ஆத்மாவின் கண்ணாடி)*

☆

## CHILDHOOD - குழந்தைப் பருவம்

*குழந்தைகள் விரும்பும் ஒவ்வொன்றும் இதயத்தின் சாம்ராஜ்யத்திலே கிழ வயது வரை இருக்கிறது; வாழ்க்கையில் மிகவும் அழகான ஒன்று என்னவென்றால் நம் ஆத்மா எப்போதும் நாம் விரும்பி இன்பம் அனுபவித்த இடங்களின் மேல் எல்லாம் பறந்து கொண்டே இருக்கும்.*

*(ஜிப்ரானின் கடிதங்கள்)*

☆

## CHURCHES - மாதா கோயில்- கிறிஸ்து கோயில்- தேவாலயம்

*ஓ ஏசுவே! இந்த மாதா கோயில்களைத் தங்களின் பெருமைக்கும் புகழிற்கும்தான் கட்டியிருக்கின்றார்கள். இந்தக் கோயிலிலே பட்டாலும் உருக்கிய பொன்னாலும் உன்னை அலங்காரம் செய்திருக்கின்றார்கள். தாங்கள் தேர்ந்தெடுத்த ஏழைகளின் கிழிந்து கந்தலான ஆடையால் கடுங்குளிர் உள்ள இரவெல்லாம் துன்பப்படும் இந்த ஏழைகளின் உடலை மறந்துவிட்டார்கள்... அவர்கள் வானவெளியை மெழுகு வர்த்தியை உன் கோயிலிலே கொளுத்தி வெளியான புகையில் மறைத்து நிரப்பி விட்டார்கள்; உனக்கு எரித்த வாசனைப் பொருள்களின் மணம் காற்றிலே பரவி மணக்கிறது. ஆனால் உன்னை உண்மையாய் நம்பிக்கையுடன் தொழுத பக்தர்களை ரொட்டியின்றி தவிக்க விட்டு ஒதுக்கிவிட்டார்கள். தங்கள்*

குரலை கடவுளின் பாக்களைப் பாடி, புகழ்ந்து பேசி, தங்கள் காதுகளையே செவிடாக்கிக் கொண்டார்கள். ஆகவேதான் அவர்களுக்குக் கைம்பெண்களும் அநாதைளும் தேம்பி அழுது, புலம்பி, ஓலமிடும் ஓசை கேட்கவே இல்லை.

ஓ என்றும் வாழும் ஏசுவே! நீங்கள் மறுபடியும் இந்த பூவுலகிற்கு வாருங்கள்! உங்கள் புனிதமான கோயிலிலிருந்து உங்கள் பக்தியை வியாபாரப் பொருளாக்கி விற்கும் வைதீகர் களை, குருக்களை, பாதிரிகளை, முல்லாக்களை எல்லாம் விரட்டுங்கள். இவர்கள் கோயில்களை, மசூதிகளை, மாதா ஆலயத்தை, புத்த, ஜைன ஆலயங்களை இருட்டுக் குகைகளாக மாற்றிவிட்டார்கள். அங்கே அக்குகைகளிலே விரியன் பாம்பு களும் பொய்மையும், கபடமும், வெளிவேஷமும் பாசாங்கும்தான் ஊர்ந்துகொண்டு குவிந்து நெளிகின்றன.

உங்கள் அன்பு, கருணை, தயை, பாசம், பக்தி எல்லாம் எங்கே?

(இதயத்தின் இரகசியம்)

☆

## CITIZENSHIP - நாட்டுமக்கள்-நகரவாசிகள்

ஒரு நல்ல குடிமகனாக இருப்பதெப்படி? மற்ற மக்களின் உரிமைகளை ஏற்றுக்கொள்வது, தன்னுடைய உரிமையை நிலைநாட்டுவதற்கு முன்னமே! ஆனால் எப்போதும் உன் உரிமையை உயிரென உள்ளத்தே போற்றுங்கள்.

உன்னுடைய கைகளாலேயே அழகானதை உபயோக மானதை உருவாக்க வேண்டும். மற்றவர் உருவாக்கியதை, ரசித்துப் போற்றிப் புகழ வேண்டும். அவர்கள் அதை பக்தியாலும், காதலாலும்தான் செய்திருக்கின்றார்கள்

என்பதை உணர வேண்டும்.

உன் உழைப்பால், உன் உழைப்பால் மட்டுமே உற்பத்தியைப் பெருக்க வேண்டும்; நீ உற்பத்தி செய்ததில் மிகமிகக் குறைவாகவே செலவு செய்ய வேண்டும்; அப்போதுதான் உன் குழந்தைகள் நீ இல்லாமல் இருந்தாலும், உயிர்துறந்தாலும் நாட்டின் உதவியை நாடி சார்ந்து நிற்கமாட்டார்கள்.

(ஆத்மாவின் கண்ணாடி)

☆

## CITY - நகரம்

பேரிரைச்சல்மிக்க நகர மக்களே! நீங்கள் இருட்டறையில் நெளிகின்றீர்கள்; துக்கம், துன்பம், துயரத்தை நோக்கி வேகமாக ஓடுகின்றீர்கள்; எப்போதும் பொய்யையே பிரசாரம் செய்கிறீர்கள். அறிவற்று, மூடத்தனமான பேச்சுகளையே பேசுகின்றீர்கள்; எப்போதும் அறியாமையிலேயே ஆழ்ந்து ஊறிக் கிடக்கின்றீர்கள்

எவ்வளவு நாட்களுக்கு இந்த நிலை? நீங்கள் அழுகி நாறிப்போன இந்த சாக்கடைச்சகதியிலே எவ்வளவு காலம் உழன்றுகொண்டே நறுமணம்மிக்க நந்தவனத்தைப் புறக்கணிப் பீர்கள்? இயற்கை அழகின் பட்டாடைகள்அழகாக விதவிதமாக நெய்ந்து குவிந்திருக்கும்போது ஏன் குறுகிய மனப்பான்மை யெனும் கிழிந்து கந்தலான உடையை அணிந்து கொண்டிருக் கிறீர்கள்? ஞான ஒளி மங்குகிறது; அறிவுச்சுடர் ஒளி குன்றுகிறது; இதுதான் நீ எண்ணெய் ஊற்றி பிரகாசிக்கச் செய்யத்தக்க தருணம். உண்மையான செல்வ மாளிகை இடிந்து குப்பை மேடாக்கப்படுகின்றது; இதுதான் அதை சீர்செய்து, செப்பனிட்டு, வசதியாக்கி,

பாதுகாக்க வேண்டிய நேரம். அறியாமை எனும் திருடர்கள் உன் அமைதிப் பொற்களஞ்சியத்தை கொள்ளைகொண்டுவிட்டனர்; இதுவே அவற்றை திரும்பவும் பெற்று சீராக்க வேண்டிய சரியான சமயம்.

நகர மக்களே! என்ன செய்யப்போகிறீர்கள்?

(களிப்பும் கண்ணீரும்)

☆

## CIVILIZATION - நாகரிகம்

கிழக்கிந்திய நாடுகளின் துன்பம், துயரம், துக்கம்தான் உலகத்தின் துன்பமாகும். நீங்கள் மேற்குநாட்டு நாகரிகம் என்பது என்ன தெரியுமா? சோகமான வஞ்சகம், துன்பமான மோசம் இவற்றின் பலப்பல கற்பனைத் தோற்றங்கள், ஆவிகள், பிசாசுகள் இவற்றில் ஒன்றுதான் மேற்கு நாகரிகம்.

(இதயத்தின் இரகசியம்)

☆

புதியன கண்டுபிடித்தலும், முதலாவதாகக் காணலும், மனித உடலிற்கு கேளிக்கை, களியாட்டம்,சௌகரியம் செய்தல் போன்றது, அது களைப்படைந்து சோர்ந்திருக்கும் போதும், தூரத்தை வெற்றிகொண்டபோதும், கடலை ஆக்கிரமித்து ஆட்சி செய்தபோதும் இவை வெறும் பொய்யான வெற்றிகள். ஏனெனில் அவை ஆத்மாவை திருப்திபடுத்தவில்லை; இதயத்திற்கு உணர்வூட்டவில்லை; நம் உள்ளுணர்வை உயர்த்த வில்லை; ஏனெனில் அவை இயற்கையிலிருந்து வெகுதூரத்தில் உள்ளன.

மனிதன் அறிவு அல்லது ஞானம் என்று அழைக்கும் கொள்கைகள், கோட்பாடுகள், அமைப்புகள்,

*தத்துவங்கள், கட்டுக்கோப்புகள் எல்லாம் அதைக் கலை என்றும், அறிவு என்றும் அழைத்தாலும் அவை மனிதனுக்குப் பூட்டப்பட்ட பொன்விலங்குகள், காலிலே கட்டப்பட்ட பொன் சங்கலிகள் தான். அவற்றை மனித இனம் இழுத்துக்கொண்டே இங்கும் அங்கும் நடமாடும் போது, அதன் மினுமினுப்பிலும், ஒலிக்கும் ஓசையிலும் மகிழ்ந்து போகின்றன.*

*பலப்புல ஆண்டுகளுக்கு முன்பிருந்தே மனிதன் கஷ்டப்பட்டு கட்டிய கூண்டுகளின் கம்பிகள்; அவனுக்குத்தான் அதன் உள்ளிருந்து கொண்டே கூண்டைக் கட்டிக் கொள் கின்றோம் என்று தெரியாமல் போய்விட்டது; தான் கட்டிய கூண்டிலேயே அவன் ஆயுள் கைதியாய், கால காலமாய், முடிவற்ற காலம்வரை கைதியாகவே வசிக்கின்றான்.*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

## CLERGYMAN - பாதிரியார்

*பாதிரியார் என்பவர் யார் தெரியுமா? தெய்வ நம்பிக்கைமிக்க பக்தர்களின் எலும்புக்கூடுகளின் மேல், புதைகுழியின் மேல், கட்டப்பட்ட அக்கோயில்தான் மாதாகோயில்; ஏசுவின் ஆலயம். அதன் பாதுகாவலர் பாதிரியார்.*

*(ஆத்மாவின் புரட்சி)*

☆

## CONCEALMENT - மறைத்தல்-மறைந்திருத்தல்

*உன் தீவிர உணர்ச்சிகளை மறைத்துவை; உன் நோயே உனக்கு மருந்து; ஏனெனில் ஆத்மாவிற்குக் காதல் என்பது ஒரு மதுக்கோப்பை போன்றது; நீ பார்ப்பது ஓர்*

*நீரைப்போன்றதுதான், ஆனால் அதனுள் மறைந்திருப்பது போதை.*

*உன் தொல்லைகளை, தொந்தரவுகளை மறைத்து வை. அப்போதுதான் வானமே இடிந்து வீழ்ந்தாலும், கடல் பொங்கி சீறினாலும் நீ பத்திரமாய், பாதுகாப்பாய் இருப்பாய்.*

*(ஆத்மாவின் கண்ணாடி)*

☆

## CONSCIENCE - மனசாட்சி

*மனசாட்சி ஒரு பலமற்ற நீதிபதி; பலமின்மை தன் அதிகாரமற்றவை, நீதித் தீர்ப்பு வழங்க, செயல்பட ஏவுகிறது.*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

## CONTENTMENT - திருப்தி-உள்ளநிறைவு

*நீ எப்போதும் ஒரு பகுதியாக மட்டும் திருப்தி அடையாதே. முழு திருப்தி ஏற்பட வேண்டும்; எவனொருவன் வாழ்க்கையின் வசந்தத்தைக் குடிக்கும்போது ஒரு ஜாடி நிறைய குடிக் கின்றானோ அவன் மறுபடியும் இரு ஜாடி நிறைய தேடிச் செல்வான்.*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

## CONTRADICTION - கருத்து வேறுபாடு-முரண்பாடு

*கருத்து வேறுபாடு என்பது அறிவின் கீழ்மட்ட தரம்.*

*(ஆத்மாவின் கண்ணாடி)*

☆

## COUNSEL - ஆலோசனை - புத்திமதி

என் சகோதரர்களே! ஒருவர் மற்றவரின் ஆலோசனையை நாடுங்கள்; அதில்தான் தவறிலிருந்து தப்பிக்க வழி இருக்கிறது. பலனற்ற, செய்த குற்றத்திற்காக வருந்த அவசியம் இராது. பல பேருடைய ஆலோசனையும் அறிவுரையும் உனக்குக் கொடுங் கோன்மையைத் தாங்கும் கவசம் ஆகிறது. நாம் ஓரிருவரிடம் ஆலோசனை கேட்கும்போது நாம் நமக்கு ஏற்படும் பகைவர்களின் எண்ணிக்கையைக் குறைத்து விடுகிறோம்.

(ஆசானின் ஞான மொழி)

☆

என் ஆத்மாவே என் ஆலோசகன்; எனக்கு நாவால் கூறப்படாத, தொண்டையால் உச்சரிக்கப்படாத குரல் ஒலிகளைக் கேட்க கற்பித்துள்ளது. என் ஆத்மா எனக்கு ஆலோசனை கூற முற்படும் முன்பு நான் மிகவும் மந்தமாக, கேட்கவியலாதவனாக, அழகையும் பொய்யையும், கலகம், குழப்பம் இவற்றையே எண்ணி பிரதிபலித்துக் கொண் டிருந்தேன். ஆனால் இப்போது நான் மௌனத்தையும், சாந்தமாகக் கேட்கவும், காலத்தின் பாடல்களைக் கூட மௌனத்தின் மூலமாகவே கேட்டு உணரவும் முடிகிறது. அந்த காலப் பாடல்கள், வானத்தை மட்டும் உயர்த்தி ஜெபிக்க, முடிவின்மையின் இரகசியத்தையும் விரித்துக்காட்டுகிறது.

(ஆத்மாவின் கண்ணாடி)

☆

## COUNTRY LIFE - கிராமப்புற வாழ்க்கை

நகரத்தின் பரபரப்புமிக்க, படாடோபமான வாழ்க்கை யிலே இயந்திரம்போல் உழன்று கொண் டிருக்கும் நமக்கு நாட்டுப்புற, கிராமப்புற, மலைப்பாங்கான பிரதேச

வாழ்க்கை என்ன என்றே தெரியாது. நாம் நகர வாழ்வெனும் வெள்ளத்திலே அடித்துச் செல்லப்படு கிறோம். அமைதியான, ஓசை நயம்மிக்க, சாதாரண கிராமப்புற வாழ்க்கையின் இன்பத்தை மறந்துவிட்டோம்.

இயற்கையின் பருவமாறுதல்களுக்கேற்ப இலையுதிர் காலத்திலே அறுத்து, மாரிக்காலத்தே ஓய்வெடுத்து, இயற்கையைப் பின்பற்றி வாழ்ந்த அமைதியை இழந்தோம். கிராம மக்களைவிட நகர மக்கள் பொன்னும், வெள்ளியும் குவித்துக்கொண்டு பணக்காரராய் இருக்கலாம்; ஆனால், அவர்கள் உணர்ச்சியிலே உயர்ந்த செல்வந்தர்கள். நாம் விதைப்பதை நாமே அறுக்க மாட்டோம். ஆனால், அவர்கள் விதைப்பதையே அறுவடை செய்கிறார்கள். நாம் லாபத்தின் அடிமைகள்; அவர்கள் திருப்தியின், போதுமென்ற மனத்தின் குழந்தைகள். நம் வாழ்வெனும் கோப்பையிலிருந்து, கசப்பும், விரக்தியும் கலந்த, பயமும், சோர்வும் சேர்ந்த வெறுப்பான பானத்தைக் குடித்துக் கொண்டே இருக்கின்றோம்; ஆனால், அவர்கள் தூய்மையான வாழ்க்கையின் திருப்தியை, நினைத்த தெல்லாம் நிறைவேறும் தேன்குடத்தையே குடித்துக் கொண் டிருக்கின்றனர்.

*(சிந்தனைகளும் தியானமும்)*

☆

## COURAGE - தைரியம்-துணிவு

மரணம் எனும் பிசாசைப் பார்த்த ஆத்மாவிற்குத் திருடர் களின் முகத்தைப் பார்த்து பயப்படாது. மின்னுகின்ற போர்வாள்களே, தன் தலைக்குமேல் வீறுகொண்டு, காலடியிலே இரத்த ஆறு ஓடக் கண்ட போர்வீரனுக்கு, கற்களை அவன் மேல் தெருவிலே

*வீசுகின்ற குழந்தைகளுக்கா பயப்படுவான்?*

*(முறிந்த சிறகுகள்)*

☆

## COURSER - பந்தயக் குதிரை

*என் ஆத்மா இரவின் பந்தயக் குதிரை போன்று வாழ்கின்றது; அது வேகமாக ஓடஓட, பொழுது புலர்வதை வேகமாக நெருங்குகிறது.*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

## CREEDS - மதம்-சமயக் கோட்பாடு

*மக்களின் மதங்கள் தோன்றுகின்றன; பின்பு இரவிலே மறையும் நிழல்போல் அழிகின்றன.*

*(ஜிப்ரானின் ஊர்வலம்)*

☆

## CRIMINALS - குற்றவாளிகள்

*நலிந்த, ஏழை குற்றவாளிகட்கு குறுகிய சிறையான மரணம் காத்திருக்கிறது.*

*ஆனால், மரியாதை, கௌரவம், கீர்த்தி, நற்பெயர், புகழ், மகிமையெல்லாம் காத்திருக்கிறது. யாருக்கு? உனக்குமில்லை எனக்குமில்லை. பொன்னும், பொருளும், பரம்பரைப் புகழும் மூடிமறைக்கும் குற்றங்களைச் செய்யும் அந்த பணக்காரனுக்கு! அரசியல் சூதாடிகள்!*

*(கலீல் ஜிப்ரானின் பொற்களஞ்சியம்)*

# D

## DARKNESS - இருட்டு - கெட்ட பெயர்

*கடவுள் உனக்கு நுண்ணறிவையும், புத்திசாலிதனத் தையும், ஞானத்தையும், புலமையையும் கொடுத்திருக்கின்றார். தெய்விகக் கருணை எனும் தீபஒளியை அணைத்துவிடாதே; தவறுகள், காமம் எனும் இருட்டிலே ஞானம் எனும் மெழுகு வர்த்தியை அணைத்துவிடாதே. மனித இனத்தின் பயணப் பாதையிலே விளக்கேற்றுகிறான், தீபம் ஏந்தி நிற்கும் அறிவாளி.*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

## DEATH - மரணம் - சாவு

*மனிதன் கடல் நுரையைப் போன்றவன். அது தண்ணீரின் மேல் மட்டத்திலே மிதக்கும். காற்று வீசும் போது மறைந்து விடும்; அது கடல் நீர் மேல் இருந்ததாகவே தெரியாது. அப்படித்தான் நம் வாழ்க்கையும் மரணம் எனும் காற்று அடித்தால்*

மறைந்துவிடுவோம்.

(ஆசானின் ஞான மொழி)

☆

நடைமுறை வாழ்க்கையின் உண்மைநிலை என்ன தெரியுமா? வாழ்க்கைதான். வாழ்க்கையின் ஆரம்பம் தாயின் கர்ப்பத்தில் தொடங்குவதுமில்லை. வாழ்க்கையின் முடிவு இடுகாட்டில் சவக்குழியில் முடிந்துவிடுவதும் இல்லை. மனித வாழ்க்கையில் கழியும் நூறு ஆண்டுகள், முடிவற்ற அமர வாழ்வில் ஒரே ஒரு விநாடிதான். இந்த உலகமும் இதில் உள்ள ஐம்பொருள்களும் (நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், நிலம் இவையே பஞ்சபூதங்கள்) மற்ற எல்லாம்கூட ஒரு கனவு போலத்தான்; எழுச்சி, மலர்ச்சியுடன் ஒப்பிடும்போது மரணம் எனும் பெரிய அதிர்ச்சி, பயம், திகில் எல்லாம் வெறும் கனவே.

(ஆசானின் ஞான மொழி)

☆

ஆத்மா என்பது ஆரம்ப நிலையில் உள்ள கருவாக மனிதனின் உடம்பில் இருக்கிறது. இறக்கும் நாள் அதன் மலர்ச்சி நாள்; உயிர்த்தெழும் நாள்; அது உழைப்பின் மிகப்பெரிய சகாப்தம்; அது உற்பத்தியின். தோற்றத்தின், செல்வச் செழிப்புள்ள மணித்துளி.

(ஜிப்ரானின் பொற்களஞ்சியம்)

☆

பூமியின் புதல்வனுக்கு மரணம் என்பது ஒரு முடிவு; ஆனால் ஆத்மாவிற்கு அதுவே ஆரம்பம்; வாழ்க்கைக்கு அந்த மரணமே வெற்றி.

(ஜிப்ரானின் பொற்களஞ்சியம்)

☆

மரணம் தொட்டுணரும் தன்மையை விலக்குகிறது.

*எல்லா நல்லவற்றின் எச்சரிக்கைகளை அல்ல. எவன் ஒருவன் ஒரு வசந்தத்திற்கும் மேல் வாழ்கின்றானோ அவனிடம் தெய்விக வாழ்க்கையைப் பல ஆண்டுகளாக வசந்தத்தில் வாழ்ந்தது போல பலனடைகிறது.*

*(ஜிப்ரானின் பொற்களஞ்சியம்)*

☆

*பெண்ணின் கர்ப்பப்பையில் இருக்கும் குழந்தை பிறந்த உடனே பூமியை அடையும். இதுவே மனிதனின் விதி; நாட்டின் விதி; சூரியன், சந்திரன், கிரகங்கள், நட்சத்திரங்கள் எல்லா வற்றின் விதியும் இதுவே.*

*(எழுத்திலும் பேச்சிலும்)*

☆

DESPAIR - நம்பிக்கையின்மை-விரக்தி

*இதயத்தில் தோன்றும் ஒவ்வொரு நீரோட்டத்திற்கும் விரக்தி ஓர் இறக்கம், வீழ்ச்சி. பொங்குதலின் நீர்வடிதல். விரக்தி என்பது பேசாத கருணை.*

*(ஜிப்ரானின் கடிதங்கள்)*

☆

*நம்பிக்கை இன்மை, விரக்தி கண்பார்வையை மங்கச் செய்து காதுகளை மூடிவிடுகிறது. நம்மால் தண்டனை தரும் கற்பனைத் தோற்றம் தவிர வேறு எதுவும் தெரியாது; நம் கலக்கமுற்றுத் துடிக்கும் இதயத்தின் ஒலியைத்தான் கேட்க முடியும்.*

*(முறிந்த சிறகுகள்)*

☆

DESPOT - கொடுங்கோலன்

*அறிவற்ற ஆட்சியாளர், நல்ல மனிதர்களைக் கைது*

செய்து தங்கள் கொடுங்கோல் ஆட்சியால் பெரும் கொடுமைகட்கு ஆளாக்குகின்றனர். ஒரு நாட்டை ஆளும், அடக்குமுறை நடத்தும், ஆட்சிப் பொறுப்பில் உள்ளோர், அடிமைப்பட்டு கிடக்கும் மக்களை சுதந்திரம் அடைய பாடுபடுபவரை துன்புறுத்துகின்றார்கள்.

(ஆத்மாவின் புரட்சி)

☆

## DESTINY - விதி

மனிதனுக்கு ஓர் விதி இருக்கிறது. அவன் சிந்தனையைத் தூண்டுகிறது, சொற்களையும்,செயல்களையும் உந்துகிறது. அது போதுமான அளவு இல்லையெனில் அவன் கால்களை விரும்பாத ஓரிடம் போய்ச் சேர நடக்க வைக்கிறது.

(ஜிப்ரானின் பொற்களஞ்சியம்)

☆

## DESTRUCTION - அழிவு-நாசம்

நான் ஒரு வெறியன்; நான் கட்டவும் விரும்புகிறேன்; இடிக்கவும் துணிகின்றேன். என் இதயத்தில் வெறுப்பு உண்டாகிறது; எதன்மேல்? குறை கூறுபவன் எதை புனிதமாக்குகிறானோ அதை, அவர்கள் உதாசீனம் செய்வதை நான் நேசிக்கின்றேன். நான் சில பழக்கவழக்கங்கள், பரம்பரை கோட்பாடுகள், மூட நம்பிக்கைகளை வேரோடு பிடுங்கி எறிவேன்; நான் அப்படிச் செய்ய சிறிதும் தயங்கமாட்டேன். என் புத்தகங்கள் எல்லாம் விஷம் போன்றவை; நஞ்சாக உள்ளதென்றபோது அவர்கள் தங்களைப் பற்றி உண்மையே பேசுகின்றார்கள். நான் கூறுவதெல்லாம் அவர்களுக்கு விஷம்தான். ஆனால், அவர்கள் தங்கள் சொற்களை பொய்யாக்கியது எப்போது என்றால் நான்

*விஷத்தோடு, தேனைக் கலக்கிக் கொடுக்கின்றேன் என்ற போதுதான். ஏனெனில் நான் எல்லோருடைய கண்களுக்குத் தெரியும்படியாக உள்ள கண்ணாடிக் கோப்பையிலிருந்துதானே சக்தியும் பலமும் நிரம்பிய நஞ்சைக் கொட்டிக் கொடுக்கின்றேன். என்னை ஒரு கொள்கைப் பிடிப்புள்ளவன் என்று கூறும் அம்மக்கள், நான் கண்ணாடிக் குவளையிலிருந்து ஊற்றித் தரும் விஷத்தை ஒதுக்கித் தள்ளுபவர்கள்; ஏனெனில் அவர்கள் வயிறு இந்த விஷத்தை ஜீரணிக்க இயலாது.*

*(சிந்தனைகளும் தியானமும்)*

☆

## DEVIL - பேய்-பிசாசு

*ஒரு லட்சம் குருட்டு நம்பிக்கையுள்ளவர்களை விட ஒரு நேர்மையான மனிதன் பேய் பிசாசுகளுக்கு மிகப் பெரிய அழிவை உண்டாக்குகிறான்.*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

## DICHOTOMY - இரண்டாய் பிரிதல்

*எவன் ஒருவனுக்கு அழகிய தேவதைகளையும் வாழ்க்கையின் கெடுதல்களிலே பேய், பிசாசுகளையும் பார்க்க வில்லையோ அவன் அறிவிலிருந்து வெகுதூரம் விலகிச் செல்கிறான்; அவனுடைய ஆத்மா அன்பே இல்லாமல் வெற்றிடமாய் இருக்கும்.*

*(முறிந்த சிறகுகள்)*

☆

## DIVINITY - தெய்விகம்

*மனிதனின் உண்மையான தன்மை தெய்விகம்.*

தெய்விகத்தை பொன்னுக்கு விற்க முடியாது; தெய்விகத்தை இக்காலத்தில் குவித்து வைக்கும் பொற்களஞ்சியம் போல் குவித்து வைக்கவும் முடியாது. பணக்காரன் தன் தெய்விகத் தன்மையை தூக்கி எறிந்துவிட்டான்; பொன்னையே நம்பி அதைப் பிடித்துத் தொங்குகின்றான்; இந்த காலத்தில் இளைஞர் களும் தெய்விகத்தை ஒதுக்கி கைவிட்டார்கள்; இன்பம் நுகரவும், சாதாரண கேளிக்கைகளில் மனதைப் பறிகொடுத்து திரியவும் முற்பட்டனர்.

(ஆசானின் ஞான மொழி)

☆

## DOCTORS - மருத்துவர் - வைத்தியர்

இந்த உலகம் உண்டான நாள் முதல் மருத்துவர்கள் மனிதனின் உடற் கோளாறுகளைச் சரி செய்ய முயற்சி செய்கின்றார்கள். சிலர் கத்தியைப் பயன்படுத்தினர்; மற்றவர் பல மருந்துகளை உபயோகித்தனர். ஆனால் கொள்ளை நோய்கள் சொல்ல முடியாத அளவிற்குப் பரவின. நான் விரும்புவது என்னவென்றால் நோயாளி தன்னுடைய துர்நாற்றம் வீசும் படுக்கையிலேயே படுத்துக் கொண்டு திருப்தி அடைய வேண்டும்; நீண்ட நாட்களாய் வாட்டும் புண்களை எண்ணித் தியானம் செய்ய வேண்டும்; அதை விடுத்து தன்னைப் பார்க்க வரும் ஒவ்வொரு பார்வையாளனின் கழுத்தையும் தன் உடைகளுக்கு அடியிலிருந்து நீட்டிப் பிடித்து அவனை மூச்சுத் திணற சாகடிக்கின்றான். இது என்ன ஏறுமாறு? வஞ்சகப் புகழ்ச்சி இது? கொடிய நோயுடைய நோயாளி டாக்டரைக் கொன்றுவிடுகிறான்; பிறகு கண்களை மூடிக் கொண்டு தனக்குத்தானே பிதற்றுகிறான். ''அவர் ஒரு மிகப் பெரிய மருத்துவர்.''

(இதயத்தின் இரகசியம்)

◉

# E

## EARTH - பூமி - உலகம் - தரை - மண்

*இந்த பூமி தன் வாயை அகலமாகத் திறந்து மனிதனை விழுங்கப் பார்க்கிறது; அவன் உண்டாக்கிய மாடமாளிகை, கூட கோபுரங்களையும் விழுங்கி விடுகிறது; இந்த பூமிதான் நம் ஆத்மாக்களை, உடம்பெனும் சங்கிலிக் கட்டுகளிலிருந்து விடுவிக்கிறது.*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

## EAST AND WEST - கிழக்கும் - மேற்கும்

*மேற்கு நாடுகள் கிழக்கு நாடுகளை விட உயர்ந்ததல்ல; மேற்கு நாடுகள் கிழக்கு நாடுகளை விடத் தாழ்ந்ததும் அல்ல; இந்த இரு திசை நாடுகளுக்கும் இடையில் உள்ள வித்தியாசம், சிங்கத்திற்கும் புலிக்கும் உள்ள வித்தியாசத்தை விட அதிகமானதல்ல. நான் சமூகத்தின் வெளிப்புறத்துக்கும் பின்னால் உள்ள ஒரு நியாயமான, தெளிவான, முழுமையான சட்டத்தைக் கண்டு பிடித்துள்ளேன்; அது என்னவென்றால் துன்பம்,*

துயரம், செழிப்பு, வளமை, அறிவீனம், தெளிவின்மை இவை அனைத்தையும் அது சமனப்படுத்துகிறது; ஒரு நாட்டை விட இன்னொரு நாட்டை மேன்மையானது என தேர்வு செய்வ தில்லை; அதுவும் இன்றி ஒரு மக்களினத்தை நசுக்கி அடக்கி இன்னோர் இனத்தை செழிப்பு மிக்கதாக்குவதில்லை.

(இதயத்தின் இரகசியம்)

☆

EDIFICE - மிகப்பெரிய மாளிகை

ஒரு மிகப்பெரிய மாளிகையைக் கட்டுவதற்குத் தன் வாழ்நாள் முழுவதும் கழித்த மனிதன் அதை விட்டுப் போக தகுதியுடையவனாகிறான்; அந்த மாளிகையே அவனுடைய சிறைச்சாலையானாலும் அதை ஒரே நாளில் உதறித் தள்ளுவது மிகவும் கடினம்.

(ஜிப்ரானின் கடிதங்கள்)

☆

EQUALITY - சமத்துவம்

மெலிந்த, நலிந்த மக்களினத்தின் திருடப்பட்ட சமத்துவத்திற்காக ஒரு மணி நேரம், அழுது, கண்ணீர் சிந்தி, ஓலமிட்டு, புலம்புவது, ஒரு நூறாண்டு காலம் பேராசையும், பலாத்காரமான ஆக்ரமிப்பும், கொண்டிருப்பதையிட உயர்ந்தது; கம்பீரமானது.

(களிப்பும் கண்ணீரும்)

☆

ETERNITY - முடிவின்மை - அழிவின்மை- நிலைத்தல்- சாசுவதம்

*உலகில் ஒவ்வொரு பொருளும் எப்போதும் நிலைத்திருக் கிறது; நிலைத்திருத்தல் இருப்பதே, முடிவின்மை இருப்பதற்கு சாட்சி. ஆனால் தன்னைத் தான் உணர்தல்; முழுமையான உயிர்ந்திருத்தலின் அறிவுதான் அது; மனிதனுக்கு இருக்கின்றதா அல்லது இல்லாமல் இருக்கின்றதா என்பதே தெரியாது. முடிவின்மை இருத்தல் மாற்றப்படுமானால், அது மிகவும் அழகாக மாற்றமடைய வேண்டும். அது மறைந்து போகுமானால் அது மறுபடியும் திரும்பி கம்பீரமான, பயபக்தியூட்டுகிற, மிக மிக மேலான உருவமாக, பொன்மையாக, விக்கிரகமாக, பிரதி பிம்பமாக தோன்ற வேண்டும்; அது தூங்குமானால் நல்ல புது எழுச்சி பெற்று கனவு காண வேண்டும்; ஏனெனில் மறுபடியும் பிறக்கும் போது முன்பிருந்ததைவிட மேலானதாக பிறக்கும்.*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

*யார் இந்த உலகில் முடிவின்மையை நாடுகின்றார்களோ அவர்களே முடிவின்மையை அடைவார்கள்.*

*(களிப்பும் கண்ணீரும்)*

☆

EVALUTION - பரிணாம வளர்ச்சி - மாற்றம் விருத்தியாதல் - உருமாற்ற வளர்ச்சி

*பரிணாம வளர்ச்சியின் சட்டம் மிகக் கடுமையான அடக்கி ஒடுக்கும் முகத்தோற்றம் கொண்டது; பயமும், அளவோடு அமைந்த மனம் கொண்டவர்கள் அதைக் கண்டு பீதியும் அச்சமும் அடைகின்றனர்; ஆனால் அதன் கொள்கை, கோட்பாடு, ஒழுங்கு அனைத்தும் மிகவும் நியாயமானவை; அதை ஊன்றிப் பிடித்து புரிந்து*

கொள்பவர்கள் மிகவும் சிறந்த அறிவாளிகள் ஆகின்றனர்; அதன் அறிவைப் பெற்று மக்கள் மிகவும் உயர்வடைகின்றார்கள்; அவர்கள் பெருமை, கம்பீரம், பேரின்பம் இவற்றை அடைகின்றார்கள்.

(சிந்தனைகளும் தியானமும்)

☆

## EXCESS - அதிகம் - மிகுதி - மிஞ்சும்

கொடுமை, கெடுதி, பாவம், துன்மார்க்கம் இவற்றுடன் போராடுவதில் அதிகமாக, மிகுதியாக போரிடுவது மிக மிக நல்லது; எவனொருவன் உண்மையைச் சொல்லும்போது உரக்கக் கூறாமல் மத்திமமாகச் சொல்கின்றானோ அப்போது அது பாதி உண்மையாகத்தான் காணப்படுகிறது. அவன் மற்ற பாதி உண்மையைக் கூறாமல் மக்களின் கோபத்திற்கு பயந்து, மூடி மறைத்து விடுகிறான்.

(சிந்தனைகளும் தியானமும்)

☆

சிந்தனையாளர்கள் என்னைப் பற்றி கூறும்போது நான் ஆச்சரியப்பட மாட்டேன். ஏன்? ''ஜிப்ரான் எதிலும் மிகைப் படுத்தி கூறுபவன்; அவன் வாழ்க்கையின் தழும்புகளை, மடிப்பை தையல்களைக் கொண்டு அதைப் பற்றி ஓலமிட்டு புலம்பி, துக்கத்தால் துடித்து முறையிடுவான்''

(சிந்தனைகளும் தியானமும்)

☆

EXILE - நாடு கடத்தல்-தேசப்பிரஷ்டம்

*அடிமைப்பட்டு, வாழ்வதினும் நாடு கடத்தப்படுவதே சிறந்தது என்று ஏற்றுக்கொள்ளாதவன், சுதந்திரத்தின், எந்த அளவு கோலாலும், கடமை, உண்மை, என்ற பண்பின் அளவாலும், சுதந்திரமானவன் என்று சொல்ல முடியாது.*

*(ஆத்மாவின் புரட்சி)*

☆

EYE -கண்

*கண்கள் செய்யப்பட்ட எந்தெந்த பொருள்களின் சேர்க்கை நிலையானது என்று ஒத்துக் கொள்ளுபவனைக் கண்டு பரிதாபப்படுகின்றேன். ஆனால் அதே சமயத்தில் கண்ணை ஒரு கருவியாக, சாதனமாக உபயோகித்துக் கொள்ளும் பார்வைப் பொருள்கள் நிலையானது என்பதை சந்தேகிக்கின்றேன்.*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

*மனிதனின் கண்கள் ஒரு பொருளைப் பெரியதாக்கிக் காட்ட வல்லது; அது பூமியை, இருப்பதை விட மிகப் பெரியதாகக் காட்டுகிறது.*

*(ஆத்மாவின் கண்ணாடி)*

◉

# F

## FACE - முகம் - தோற்றம் - எதிர்த்து நில்

உள்ளத்திலே உள்ள அழுத்தத்தைக் காட்டும் பார்வை முகத்தின் அழகை அதிகமாக்குகிறது. முகம் எவ்வளவு துன்பம், துக்கம், துயரம், வலி இவற்றைக் காண்பித்தால்கூட; ஆனால் முகம், மௌனமாக இருக்கும்போது மறைந்திருக்கும் புதிர்கள் அழகானதல்ல என்று சொல்லுவதில்லை; அதன் உடல், அமைப்பு, பொருத்தம் (அங்க லட்சணம்) எப்படி இருந்தாலும் பரவாயில்லை. அந்த மதுவின் வண்ணம் கண்ணாடிக் கோப்பையின் வழியாகத் தெரிந்தால் ஒழிய, அக்கோப்பை நம் உதடுகளை கவர்ந்து ஆசைக் காட்டி வசீகரிப்பதில்லை.

(முறிந்த சிறகுகள்)

☆

## FAITH - நம்பிக்கை - மதம் - ராஜ விசுவாசம்

நம்பிக்கை மிக்கக் கரங்களால் கதவைத் தட்டினால் எல்லோருக்கும் கடவுள் திறக்கின்றார். கடவுள் உண்மையை அடைவதற்கு ஏராளமான, கதவுகளை அமைத்திருக்கின்றார். தட்டுங்கள் திறக்கப்படும்.

(முறிந்த சிறகுகள்)

☆

## FAME - புகழ் - கீர்த்தி

*நம் வாழ்க்கையில் ஏதோ ஒன்று புகழை விட மிகவும் உயர்ந்தும், சிறந்தும், கம்பீரமாகவும், கீர்த்தி பெற்றும் இருக்கிறது; இந்த ஏதோ ஒன்று தான் செயற்கரிய செய்து புகழ், கீர்த்தி, உயர்வு, சிறப்பு அனைத்தையும் குவிக்கிறது.*

*(ஜிப்ரானின் கடிதங்கள்)*

☆

## FATE - விதி - மரணம்

*சூழ்நிலை நம்மை குறுகிய வழியிலே துரத்தி, விதி வெட்டி வீழ்த்துகிறதே! விதியின் வழிகளை நாம் மாற்ற முடியாதே! பலவீனம், மனோ தைரியத்தைக் கொன்று தின்கிறதே! நமக்கே சாக்கு போக்கு கூறி ஒத்தாசை செய்து விதி நம்மைக் கொன்றுவிட உதவுகின்றோம்.*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

*வாழ்க்கை நம்மை ஏந்தி ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்திற்கு எடுத்துச் செல்கிறது. விதி நம்மை ஓர் இலக்கிலிருந்து இன்னொன்றுக்கு நகர்த்துகிறது. நாம் வாழ்க்கைக்கும் விதிக்கும் இடையில் அகப்பட்டுக் கொண்டு நடுவழியில் எது தடையாகவும், இடையூறு ஆகவும் நிற்பதை மட்டும் காண் கின்றோம்; மிகவும் வேதனையுடன் ஓலமிட்டுப் புலம்புவதைக் கேட்கின்றோம்.*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

## FEAR OF DEATH - மரண பயம்

*மரண பயம் ஓர் மாயத்தோற்றம்*

*முனிவரின் மார்பிலே புகலிடம் தேடும்*
*எவன் ஒருவன் ஒரு வசந்தகாலம் வாழ்கிறானோ*
*அவன் காலா காலமாய் வாழ்ந்ததை ஒப்பும்.*

*(ஜிப்ரானின் ஊர்வலம்)*

☆

## FERTILITY - செழிப்பு

*உடம்பு ஆத்மாவின் கர்ப்பப்பை. அதில் ஒரு பருவம் வாழ்கின்றது. ஆத்மா ஒருமுறை பறக்க முன்னேறினால் கர்ப்பப்பை மறுபடியும் முளைக்கச் சுருங்குகிறது.*

*(ஜிப்ரானின் ஊர்வலம்)*

☆

## FIRST LOVE - முதற் காதல்

*ஒவ்வோர் இளைஞனும் முதற் காதலை ஞாபகப்படுத்திக் கொண்டு அந்த இன்பமான காலத்தை மறுபடியும் பெற முயல்கிறான்; அந்த எண்ணமே அவன் ஆழ்ந்த உணர்வுகளைத் தூண்டுகிறது; அதன் மாயத் தோற்றத்தில் உள்ள கசப்பான அனுபவங்களையும் மீறி ஒருவித இன்ப உணர்வை உண்டாக்குகிறது.*

*(முறிந்த சிறகுகள்)*

☆

## FOLLY - அறிவீனம் - முட்டாள்தனமான செய்கை

*அறிவற்றவன் அறிவீனத்தைத்தான் பார்க்கிறான். பைத்தியக்காரன் பைத்தியத்தைத்தான் காண்பான். நேற்று நான் ஒரு முட்டாளை நம்மிடையே உள்ள முட்டாள்களைக் கணக்கிடச் சொன்னேன். அவன் சிரித்து விட்டு சொன்னான் ''இதைச் செய்வது மிகவும் கடினம். இதற்கு வெகு காலமாகும்; அறிவாளிகளை மட்டும் எண்ணி விடுவது மிகவும் நல்லதல்லவா?''*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

*நான் ஒரு சமயம் ஒரு சிறந்த அறிவாளி சொல்லக் கேட்டேன். ''ஒவ்வொரு தீங்கிற்கும் பாவத்திற்கும் ஒரு பரிகாரம், குணப்படுத்தும் மாற்று உள்ளது; ஆனால் அறிவீனத்திற்கும் முட்டாள்தனமான செய்கைக்கும் ஏதுமில்லை; ஒரு பிடிவாதமான முட்டாள்களைக் கண்டித்தலும், மூடனுக்கு புத்திமதி கூறுவதும், நீர்மேல் எழுத்திற்கு நேர். ஏசுநாதர், குருடனை, பாரிச வாயுக்காரனை, பெருநோய் வந்தவனை, நொண்டியை எல்லாம் குணமாக்கினார்; ஆனால் முட்டாள் களைக் குணமாக்க முடியவே இல்லை.*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

## FORBIDDEN - தடுக்கப்பட்ட - அனுமதிக்காத

*ஒரு மனிதனை தடுக்கப்பட்ட பொருளைப் பார்க்காமல் இருக்கும்படி தடுத்து நிறுத்தினால் அவன் தனக்கே குற்ற மிழைத்துக் கொள்கிறான். அவனை அன்புக் கண்கொண்டு நோக்கு, அவன் தன்னுள்ளே கடவுளைக் காப்பாற்றுவான்.*

*(ஜிப்ரானின் பொற்களஞ்சியம்)*

☆

## FREEDOM - சுதந்திரம் - உரிமை வாழ்வு

*நான் சுதந்திரத்தைக் காதலிக்கின்றேன். உண்மையான சுதந்திரத்தின் மேல் காதல் என்பது வளரும் அறிவுடன் வளர்ந் துயர்கிறது; அடிமைத்தனம், அடக்குமுறை, கொடுங்கோன்மை இவற்றிற்கு மக்கள், தாள் வணங்கி சரணாகதியாகின்றனர்!*

☆

*கோரமான சிலைகளுக்கு மண்டியிட்டு வணங்குவார். இறந்த காலம் சிலைகளை நிற்க வைக்க, அடிமைகளின்*

உலர்ந்த உதடுகள் மெருகேற்ற, இன்று மக்கள் அடிமைகளாய் தவிக்கின்றனர்.

☆

நான் அந்த அடிமைகளைக் காலிக்கின்றேன்! என் சுதந்திரத்தின் காதலால் காதலிக்கிறேன்; அவர்கள் கண்மூடித் தனமாய் கொடிய மிருகங்களின் முகவாய்க்கு முத்தமிட்டனர். அமைதியாய் ஆனந்தமாய் எச்சரிக்கையின்றி சிரிக்கும் விரியனின் விஷத்தை உணராமல், தன் புதைக்குழியை, தன்னையே அறியாமல் தன் கைவிரல்களாலேயே தோண்டிக் கொண்டார்.

(இதயத்தின் இரகசியம்)

☆

பலமற்று அடிமையின் நிழலில் வாழ்வதினும், சுதந்திரத்திற்காக சாவதே பெருமை, கௌரவம்! வாழ்க்கை, மரணத்தைவிட பலமற்றது! மரணம், உண்மையை விட பலமற்றது! உண்மை வாளேந்தி, சாவை அணைப்பவன், உண்மையின் அழிவின்மையுடன் மரணமற்று என்றும் வாழ்கின்றான்!

(இதயத்தின் இரகசியம்)

☆

ஒரு சுதந்திரமானவன் தன் விவாதத்தால் தான் சிறைக் கைதியாக ஒரு சிறையையே கட்டுகிறான்! தன் உறவினரிடமிருந்து சுதந்திரமாகும்போது, அன்பின் கொஞ்சலுக்கும் சீராட்டலுக்கும் எண்ணங்களுக்கும் அடிமையாகிறான்.

(ஜிப்ரானின் ஊர்வலம்)

☆

சுதந்திரமற்ற வாழ்க்கை, ஆத்மா இல்லாத உடம்பை ஒத்தது, சிந்தனை அற்றச் சுதந்திரம், குழப்பமுற்ற உள்ளுணர்வு போன்றது.

வாழ்க்கை, சுதந்திரம், சிந்தனை இம்மூன்றும்

ஒன்றில் வாழ்வது; என்றும் வாழவல்லது; அதற்கு மரணமே இல்லை.

*(சிந்தனைகளும் தியானமும்)*

☆

சுதந்திரம் நம்மையெல்லாம் அழைக்கிறது; நாம் அதன் சுவையான உணவையும், உயர்ந்த திராட்சை ரசத்தையும் பருக அழைக்கிறது; நாம் அதனுடன் சாப்பிட அமர்ந்தால் நாம் உணவையெல்லாம் அப்படியே கவர்ந்து விழுங்கி விடு கின்றோம்.

*(ஆசானின் ஞான மொழி)*

☆

நீங்கள் என் கைகளிலே விலங்கிட்டு, கால்களிலே சங்கிலி யிட்டு கட்டி விடலாம்; என்னை இருட்டு சிறையில் அடைத்து கைதியாக்கி விடலாம்; ஆனால் என் எண்ணங்களை, சிந்தனை களை, ஞானத்தை ஒருபோதும் சிறையிட முடியாது; அவை என்றும் சுதந்திரமானவை.

*(விவாதங்கள் கடிதங்கள்)*

☆

## FRIENDSHIP - நட்பு - சினேகம்

முட்டாளுடன் நட்பு கொள்வது, குடிகாரனுடன் விவாதம் செய்வதை ஒக்கும்.

(ஆசானின் ஞான மொழி)

◉

# G

## GENTLENESS - இனிமை - சாது - பண்பு - மேன்மை - மென்மை

சிலருடைய பண்பும் இனிமையும் சிப்பிக்கு மேலும் பளபளப்பும் ஏற்றிய தன்மை போல், சகோதரனின் செல்வத்தில் தெரியாத கிடைத்தற்கு அரிய நல்முத்து தேவைப்படும். நீ பலவானைச் சந்தித்து அவன் பண்புள்ளவனாயும் இருந்தால் உன் கண்களுக்கு விருந்தாக்க வேண்டும். அவன் கம்பீரமானவன் பெருமை மிக்கவன்! குருடனும் அவன் பண்பைப் பார்க்க முடியும்.

(ஜிப்ரானின் ஊர்வலம்)

☆

## GIANTS - அரக்கன் - இராட்சசன்

நாம் வாழும் இந்த சகாப்தத்தில், கடந்த சகாப்தத்தில் வாழ்ந்த மிகப் பெரிய மனிதனை விட, உயர்ந்தவனாக இக்கால சாதாரண மனிதன் இருக்கின்றான். ஒரு காலத்தில் நம் மனத்தை ஆட்கொண்ட அதிசயங்களெல்லாம் இப்போது சாதாரணமாகி,

முக்கியத்துவத்தை இழந்து விட்டன. அலட்சியம், அசிரத்தை எனும் திரைகள் மூடிவிட்டன. ஒரு காலத்தில் நம்மை வட்டமிட்டுக் கொண்டிருந்த அழகான கனவுகள் நம் மனசாட்சியிலிருந்து பனிபோல விலகி விட்டன. அந்த இடங்களில் இப்போது, வீசும் புயல் போல், பொங்கும் கடல் போல், மூச்சு விடும் எரிமலை போல் மிகப் பெரிய அரக்கர்கள் உலவ ஆரம்பித்து விட்டனர்.

இந்த அரக்கர்கள் தங்களின் பெரும் போராட்டங்களுக்குப் பிறகு என்ன முடிவை இந்த உலகிற்குக் கொண்டு வரப் போகின்றார்களோ...?

உங்கள் நாடும் என் நாடும் என்ன கதிக்கு ஆளாகும்? இவற்றின் தலைவிதி என்னவாகும்?

இந்த சூரியனின் ஒளிக்கதிரின் கீழ் உண்டாக்கிய ஆண்களும் பெண்களும் தோன்றி வளர்ந்து, உருவாகிய, உயர்ந்தனவாகிய இந்த மலைகளும், பள்ளத்தாக்குகளும், சமவெளிகளும் எந்த அரக்கனின் ஆட்சிக்கு உட்படுமோ?

இந்த மக்களில் யார்தான் இரவும் பகலும் இந்த உலகின் தலைவிதி பற்றி எண்ணி எண்ணி இந்த அரக்கர்களின் ஆட்சியே அநாதைகளின் கைம் பெண்களின் கண்ணீரால் போதையேறியதி லிருந்து தப்ப முடியும்?

☆

GLORY - புகழ் - பெருமை - மகிமை

அழகையும், காதலையும் தேடி அலையும் ஒரு மணிநேர தியானம் ஒரு நூறாண்டு! தேடி அலைந்த புகழ், பெருமை, மகிமைக்கு நிகர். பயந்து நடுங்கும் பலமற்றோர், பலம் மிக்கவனுக்கு சேர்க்கும் இந்த மகிமையும் புகழும் என்ன?

(களிப்பும் கண்ணீரும்)

☆

*சகோதரனே! நீ புகழ், பெருமை, மகிமை எனும் சிம்மாசனத்திலே அமர்ந்திருப்பதையும், உன்னைச் சுற்றிலும் மக்கள் நின்று கொண்டு உன் துதி பாடுவதையும், உன் மாட்சிமை, ராஜ கம்பீரம், மேன்மையைப் பறைசாற்றி பிரசாரம் செய்வதையும், உன் ஞானத்தைப் போற்றிப் புகழ்வதையும், உன்னை ஒரு தீர்க்கதரிசியின் முன்னிலையில் உள்ள பேரறிவாளனாகப் பார்ப்பதையும், அவர்கள் உணர்ச்சி வசப்பட்டு சொர்க்கத்தின் வாசல் வரை உயருவதையும் நான் காண்கின்றேன்.*

*உன்னுடைய பிரஜைகளை நீ பார்க்கும் பார்வையில் நீயே அவர்களின் உடம்பில் உள்ள ஆத்மா என்றும் நினைக்கின்றாய்; உன் முகத்திலே, மகிழ்ச்சியும், அதிகாரமும், வெற்றியும் புன்னகை புரிவதைக் காண்கின்றேன்.*

*ஆனால் நான் மறுபடியும் உன்னைப் பார்த்தபோது நீ உன் தனிமையிலே தனியாக இருந்தாய்; உன் சிம்மாசனத்தின் அருகிலே நிற்கக் கண்டேன். ஒரு நாடு கடத்தப்பட்டவன் எல்லா திசைகளிலும் கையேந்தி நிற்பது போல், கண்ணுக்குத் தெரியாத பேய், பூதம், பிசாசுகளிடமிருந்துகூட கருணைகாட்டும்படி, அன்பு செய்யும்படி வேண்டி இரஞ்சுவதையும் கண்டேன்; நீ புகலிடம் தேடி அவர்களின் நட்பையும், அன்பையும், அரவணைப்பையும் யாசிப்பது போல், பிச்சை கேட்டு கெஞ்சுவது போல் கண்டேன்!*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

## GOD - கடவுள் - தெய்வம்

*மனிதன் ஆரம்பத்திலிருந்து தன்னைத்தானே,*

வணங்கி வழிபட்டு வந்தான்; தன்னை இதுவரை ஒருபட்டப் பெயரிட்டு அழைத்துக் கொண்டான்; இப்போது, தான் எனும் பொருளுடைய ஒரு சொல்தான் 'கடவுள்'

(இதயத்தின் இரகசியம்)

☆

உலகின் எல்லா மதங்களும் கடவுளை ஓர் ஆண்பால் உயிராகவே அழைக்கின்றன. என்னைப் பொறுத்தவரை கடவுள், தாய் என்பது போலவே தந்தை என்பதுமாகும். அவர் தாய் தந்தை இரண்டும் ஒன்றான ஒன்று **(Two-in-One)** பெண்கள் தாய்-கடவுள்; தந்தைக் கடவுளை நாம் மனத்தின் முன்பாகவோ, கற்பனையிலோ, எண்ணிப் பார்ப்பதிலோ அடையலாம். ஆனால் தாய் - கடவுளை நாம் இதயத்தின் மூலமாகவே அடைய முடியும்- காதல், அன்பு மூலம்தான்.

காதல் என்பது புனித திராட்சை ரசம்; அதைக் கடவுள் தங்கள் இதயத்திலிருந்து காய்ச்சி வடிகட்டி குளிரச் செய்து அதை மனிதனின் இதயத்திலே ஊற்றுகிறார். எவனொருவனின் இதயம் மிருக இச்சைகளிலிருந்து விடுபட்டு சுத்தம் செய்யப் பட்டுள்ளதோ அவர்களால்தான் சுவைத்து அதன் தூய்மையையும் தெய்விகத் தன்மையையும் அனுபவிக்க முடியும். தூய இதயம் சுவைக்கும் காதல் தான் கடவுளுடன் குடிக்கும் இதயமாகும். யார் அதை உலகில் உள்ள ஆசைகளுடன் சேர்த்து திராட்சை ரசத்துடன் குடிக்கிறார்களோ அவர்கள் நரகத்தில் உள்ள பிசாசு பேய் பூதங்களின் களியாட்டங் களுடன் குடிப்பவர் ஆவார்கள்.

(ஜிப்ரானின் நீதிக்கதைகள்)

☆

கடவுளைப் பற்றி குறைவாக பேசுவதே புத்திசாலித்தனம். கடவுளை நாம் புரிந்துகொள்ள முடியாது; ஒருவரைப் பற்றி மற்றொருவர் எளிதாக, அதிகமாக அறிந்துகொள்ள முடியும். இருந்தாலும் நான் விரும்புவது என்னவென்றால் 'நாம் கடவுளின் மூச்சும், மணமும் போல்! என்பதை நீங்கள் புரிந்து, தெரிந்து, அறிந்துகொள்ள வேண்டும். நாம் கடவுள். ஆம் இலைகள், மலர்கள், பழங்கள் அனைத்தும் கடவுளே!

(ஆத்மாவின் கண்ணாடி)

☆

GOLD - பொன்- தங்கம்

பொன், பொன்னைச் சேர்க்கும்; பிறகு அமைதியின்மையை உண்டாக்கும்; கடைசியாக துன்பம், துக்கம், துயரம் அனைத் தாலும் பிழிந்து, நசுக்கி விடும்.

(களிப்பும் கண்ணீரும்)

☆

ஒரு பணக்காரன் வாழும் வாழ்க்கை எப்படிப்பட்டது தெரியுமா? பொன்னையும் நவரத்தினங்களையும் குவித்து வைத்து இருப்பது, சுடுகாட்டில் பிணம் புதைத்த குழியில் நெளியும் புழுக்களை ஒத்ததாகும் என்பதே உண்மை. பொன் ஒரு பயத்தின் அறிகுறி.

(ஆசானின் ஞான மொழி)

☆

GOOD - நல்ல - நன்மை - அநுகூலம் - அழகு

மனிதனில் நல்லவை வெள்ளமாய்

*தடையின்றி ஓட வேண்டும்,*
*செய்யும் தீமையும் தீச்செயலும்*
*சவக்குழிக்கும் அப்பால் நிலைத்திருக்கும்!*
*காலம் சொக்கட்டான் காய்களை நகர்த்தும்*
*அது வஞ்சகம், போக்கிரி, மன்னன், பிரபு*
*அனைவரையும் உடைத்து உயிர்போக்கும்!*

*(ஜிப்ரானின் ஊர்வலம்)*

☆

## GOVERNOR - ஆளுநர் - ஆட்சித் தலைவர்

*நீங்கள் உங்கள் ஆட்சிக்கு உட்பட்ட மக்களை மிகவும் கீழ்த்தரமாக மதிக்கின்றீர்களா? உன்னுடைய சொந்த லாபத்திற்காக அவர்களைச் சுரண்டி கொள்ளை அடிக்கின்றீர் களா? அவர்களின் பொருளைக் கவர்வதற்கன்றி வெளியில் போகாமல் இருக்கின்றீர்களா? அப்படியானால் நீங்கள் நாட்டின் அறுவடைக் களத்திலே காணப்படும் களைகள், விஷப் பூண்டுகள், நச்சுப்பயிர்கள்.*

*நீங்கள் மிகவும் தெய்விகப் பணியாளராக மக்களின் நலனை நாடி விழிப்பாய் இருந்து அவர்களை நேசிக்கும் ஆளுநரா? அப்படியானால் நீங்கள் இந்த நாட்டின் தானியக் களஞ்சியத்தில் ஓர் நம்பிக்கையுள்ள ஆசி பெற்ற ஆட்சியாளர்.*

*(ஆசானின் ஞான மொழி)*

◉

# H

## HANDS - கைகள்

*மனிதனின் வாழ்க்கை எவ்வளவு சிறியது, அவன் கைகளை முகத்திற்கும் உலகத்திற்கும் இடையே வைத்து, தன் கைகளில் குறுகிய ரேகைகளைத் தவிர வேறு என்ன பார்க்கிறான்!*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

## HAPPINESS - மகிழ்ச்சி - திருப்தி- இன்பம்

*நான் என் தனிமையிலே மகிழ்ச்சியைத் தேடினேன். நான் அவளை மிகவும் நெருங்கி நகர்ந்தேன். என் ஆத்மா, என் இதயத்தினிடம் மிகவும் ரகசியமாய் குசுகுசுவென்று சொல்லிற்கு ''நீ தேடும் இன்பம் ஓர் கன்னிப்பெண், இதயத்தின் அடியிலே பிறந்து, வளர்ந்து, வாழ்கிறது. அது பிறந்த இடத்திலிருந்து வெளியே வராது!'' நான் திறந்து பார்த்தேன், அவள் இருக்கின்றாளா என்று தேடினேன்,*

அங்கு அவள் தொட்டிலும், ஆடைகளும் கண்ணாடியும்தான் அவள் ஆதிக்க எல்லையில் கண்டேன். அங்கே இன்பமோ, மகிழ்ச்சியோ இல்லவே இல்லை!

(இதயத்தின் இரகசியம்)

☆

நாம் தேடி அலையும் இன்பம் ஓர் மாயை, அதைத் தெளிவாக்கினால் கட்டாயம் சங்கடமாக்கும். ஆறு சமவெளியை நோக்கி ஓடுவதுபோல் இன்பம் வந்தவுடன் தாமதமாகி இருட்டாகிவிடும். மனிதனுக்கு இன்பம் அவன் மேலே உயர விரும்பி முயலும் போதுதான்; அவன் உச்சியை அடைந்தவுடன் குளிர்ந்து வேறொரு தூர தேசத்திற்குப் பறக்க ஏங்கினான்!

(ஜிப்ரானின் ஊர்வலம்)

☆

உலகத்தில் இன்பம் ஓர் கப்பற்படை, நகரும் பூதம், மனிதன் அதைப் பொன்னாலும், காலத்தாலும் வாங்க மன்றாடுகிறான். அந்த மாயக் கற்பனை உண்மையாக உயிர்ப் பெறும்போது மனிதன் அலுத்து ஓய்கிறான்.

(ஜிப்ரானின் பொற்களஞ்சியம்)

☆

## HARDSHIP - வருத்தம் - கொடுமை - கஷ்டம்

தைரியமாக தடைகளைத் தாண்டி, கஷ்ட நஷ்டமடைவது பின்வாங்கி, தோற்று அமைதியை, சாந்தியை நாடுவதை விடப் பெருமைமிக்கது; கம்பீரமானது. வண்ணத்துப்பூச்சி விளக்கைச் சுற்றி வட்டமிட்டு இறக்கும் வரை வலம் வருவது. புற்றீசல் ஓர்

இருண்ட வளையிலே உயிர் வாழ்வதை விட போற்றுதலுக்கு உரியது; புகழப்பட வேண்டியது.

(முறிந்த சிறகுகள்)

☆

## HATE - வெறுப்பு

நான் என்னைப் பாதுகாத்துக்கொள்ள வெறுப்பை ஓர் ஆயுதமாகப் பயன்படுத்துகின்றேன். நான் பலம் பொருந்தியவனாய் இருந்திருந்தால் எனக்கு இப்படிப்பட்ட ஆயுதம் தேவையாக இருக்காது.

(ஆத்மாவின் கண்ணாடி)

☆

## HEAVEN - சொர்க்கம் - வானுலகம்

தேவதைகள், துக்கம் விடும் கண்ணீர் துளியைக் கணக்கு வைத்திருக்கின்றாள்; சொர்க்கத்திலே சுற்றிப் பறக்கும் ஆத்மாவின் காதுகளில், நம் ஆசையினின்றும் அன்பினின்றும் தோன்றும் இன்பப் பாடல்களை முடிவில்லாமல் இசைத்துக் கொண்டே இருக்கின்றது.

இனி வருங்காலத்தில் நம் உணர்ச்சிகளின் அசைவுகளை உணரவும், நம் இதயத்தின் சலனத்தைக் கண்டு அறியவும் முடியும்.

நாம் நம்முள் இருக்கும் தெய்விகத் தன்மையின் பொருளைப் புரிந்துகொள்ளலாம். நாம் விரக்தியடைந்து தெய்விகத்தை இகழ்கின்றோம்; அலட்சியம் செய்கிறோம்; கேவலமாய் பேசுகின்றோம்.

(ஆசானின் ஞான மொழி)

☆

## HELL - நரகம்

*நரகம் என்பது கொடுமையில் இல்லை; வதைப்பதில் இல்லை; வெறுமையான இதயத்திலேதான் நரகம் இருக்கிறது.*

*(ஆத்மாவின் கண்ணாடி)*

☆

## HERD - மந்தை

*'அதோ ஓர் அறிஞன் செல்கிறான்' எனக் கூறாதே. அதோ ஒரு கம்பீரமான சேனைத்தலைவன்' என்றும் கூறாதே. மனிதனிலே சிறந்தவன் மந்தையில் இருக்கின்றான்; இடையனை வழி காட்டியாய் கேட்டு நடக்கிறான்.*

*(ஜிப்ரானின் ஊர்வலம்)*

☆

## HONOURS - கௌரவம் - கீர்த்தி - மரியாதை

*கௌரவம், என்பதே பொய்யான மாயத் தோற்றம். கடல் அலைமேல் உள்ள நுரைபோல் மறையும். பாதாம்மரம் தன் மலர்களை அடிமரத்தைச் சுற்றிலும் உள்ள புல்தரை மேல் தூவுமா? ஒருபோதும் அது பிரபுத்துவத்தைக் கோராது, புல்தரையின் வாழ்த்துகளை அலட்சியம் செய்யாது.*

*(ஜிப்ரானின் ஊர்வலம்)*

☆

## HOPE - நம்பிக்கை - எதிர்பார்த்தல்

*நம்பிக்கையை நாம் காடுகளிலே காண முடியாது! பாலைவனம் நம் நம்பிக்கையின்மையை ஓவியமாக்காது!*

## HUNGER - பசி - ஆசை

*ஒரு மனிதன் பசியால் வாடும்போது பாலையில் இருந்தாலும் காய்ந்த ரொட்டித் துண்டை தின்னுதற்கு மறுக்க மாட்டான்; சொர்க்கத்திலிருந்து உணவும், காடை, கவுதாரி கறியும் கொட்டாது.*

*(முறிந்த சிறகுகள்)*

☆

## HUSBAND - கணவன் புருஷன் - துணைவன்

*நீ செய்யும் குற்றங்களையெல்லாம் சட்டபூர்வமானது என்றும் மனைவி செய்யும் குற்றமெல்லாம் சட்டத்திற்கு அப்பாற்பட்டது எனவும் கருதுகின்ற கணவனா நீ? அப்படியானால் நீ கற்கால காட்டு மனிதனுக்கு, குகைகளில் வாழ்ந்து, தோலையே ஆடையாக உடுத்தி நிர்வாணத்தை மறைத்த மனிதனுக்குச் சமமானவன்.*

*இல்லையேல் நீ உன் மனைவிக்கு ஒரு நம்பிக்கை உள்ள நாணயமான துணைவனா? உன் மனைவி எப்போதும் உன் அருகிலே இருந்து கொண்டு, உன் எண்ணங்களை, வெற்றிகளை பரவசங்களை, சிந்தனைகளை பங்கிட்டு மகிழ்கின்றாயா? அப்படி அவளை நீ வளர்த்து நேசிக்கின்றாயா? அப்படியானால் நீ ஒரு நாட்டின் தலைவனாக காலைப்போதில் உடன் நடந்து, நீதி, நேர்மை, ஞானம், அறிவு, பகுத்தறிவு எனப் பகல்பொழுதை அடையத் தகுதியுள்ளவன்.*

*(ஆசானின் ஞான மொழி)*

◉

# I

## IDEAS - எண்ணம் - கருத்து - அபிப்ராயம்

ஒருவன் கற்பனை செய்து, திட்டமிட்டு எல்லா விதமான உண்மையான அமைப்புகளிலும், கோணங்களிலும் அலசி ஆராய்ந்து பார்த்தபின், செயல்படும்போது அதை முழுமையாக, மேலான அளவுகளும், வார்த்தை சாட்சியங்களும் சரியென நிரூபித்துக் காட்ட முடியாமல் போனால், அவன் என்ன நினைப்பான்? தன் எண்ணங்களும் கற்பனைகளும் சிந்தனைகளும் வெறும் உபயோகமற்ற பொருள்கள் என்றும், தான் மிகப்பெரிய குருடன் என்றும் நினைக்க மாட்டானா?

ஆனால் அவன் இதைப் பற்றி ஆழ்ந்து சிந்தித்து மிகவும் நம்பிக்கையுடன் தியானம் செய்து, நடந்ததையெல்லாம் அலசி ஆராய்வானானால் வானத்தில் பறக்கும் பறவைகள் எவ்வளவு நிசமோ அதேபோல் தன்னுடைய கருத்துகளும், சிந்தனைகளும் மிகவும் உண்மையானவை, திட்டப்படி நிகழக்கூடியவை என்று புரிந்துகொள்வான். ஆனால் அது இன்னும் பளிங்கு போல் தெளிவாகவில்லை. அவனுடைய எண்ணம்

*அறிவின் ஒரு பாகம்தான்; அதை எண்ணாலும் எழுத்தாலும் நிரூபிக்க முடியாது; அது மிக உயரத்தில் மிகப் பரந்த வெளியில் இருப்பதால் அதை நாம் கைதியாக்கி சிறையிலடைக்கவும் முடியாது; அது தெய்விகத்தில் மிக ஆழமாக ஊன்றி, படிந்திருக் கிறது; அது வாழ்க்கை நடைமுறைக்கு அடிபணியாது.*

*(இதயத்தின் இரகசியம்)*

*உலகில் உள்ள எல்லாவிதமான அழகுளும், மிக உயர்ந்த, பெருமைமிக்க, கம்பீரமான பொருள்களும் மனிதனில் தோன்றி ஒரு கற்பனையாலோ உணர்ச்சியின் உந்துதலாலோ உண்டானவைதான்; இன்று நாம் உலகில் பார்க்கும் எல்லாம் இதற்கு முன்பு இருந்த நம் மூதாதைகளால் செய்யப்பட்டவை தான்; அவையெல்லாம் ஒரு மனிதனின் மனத்தில் தோன்றிய எண்ணமாகவோ ஒரு பெண்மணியின் உள்ளத்தில் உதித்த ஒரு வேகமான உந்துதலாகவோதான் இருக்கின்றது.*

*ஆயிரமாயிரம் மக்களுக்கு இடையே வாழ்ந்த ஒரு மனிதனின் எண்ணம், கருத்து, அபிப்பிராயம்தான் மிகப் பெரிய புரட்சிகளைத் தோற்றுவித்து இரத்த ஆறுகளை ஓடவிட்டு மனிதனின் மனத்தை சுதந்திரத்தின் பக்கம் திருப்பி விட்டது. மக்களைக் கொள்ளை கொண்டு அழித்து நாசமாக்கிய பெரிய உலகப் போர்கள், மிகப் பரந்த சாம்ராஜ்யங்களையெல்லாம் அழித்துத் தரைமட்டமாக்கிய பெரும் போர்கள் எல்லாம் ஒரு தனிமனிதனின் மனத்திலே தோன்றி வளர்ந்த எண்ணங்கள்தான்.*

*மிகப்பெரிய, எல்லாம் வல்ல போதனைகள், ஞான மொழிகள் மனித வர்க்கத்தின் போக்கையே மாற்றி திசை திருப்பியதோ அந்த எண்ணங்கள் எல்லாம் ஒரு மகா மேதையை அவனுடைய சூழ்நிலை சுற்றச் சார்புகளிலிருந்து பிரித்து சிந்திக்க, எண்ண வைத்தவைதான்.*

ஒருவனின் எண்ணம் பிரமிட்களைக் கட்டியது; இஸ்லாம் மதத்தின் பெருமையை, கீர்த்தியை நிலைநாட்டியது; அலெக்சாண்டிரியாவின் மிகப்பெரிய புத்தக நிலையத்தை, கருத்துக் கருவூலத்தைக் கொளுத்தியது.

(முறிந்த சிறகுகள்)

☆

## IGNORANCE - அறிவீனம் - அறிவின்மை

அறிவின்மை குடியிருக்கும் வீட்டில், கண்ணாடி இருக்காது. உன் ஆத்மாவை அதில் பார்க்க முடியாது.

(இதயத்தின் இரகசியம்)

☆

கடந்கரையில் அலைகள் பின் வாங்கியபோது மணல் பரப்பில் ஒரு வரியை எழுதினேன். என் ஆத்மாவிலே, உள்ளத்திலே உள்ள உணர்வனைத்தும் அதில் வெளிப் படுத்தினேன். கடல் அலை மேலெழுந்து வீசியபோது வந்தேன்; படிக்க, சிந்திக்க, மனத்தை மேய விட்டேன். கடற்கரை மணலிலே நான் கண்டதென்ன? கற்றதென்ன? எல்லாம் என் அறிவீனமே!

(ஆத்மாவின் கண்ணாடி)

☆

## ILLNESS - நோய் - பிணி - வியாதி

நான் நோயுற்றிருப்பதிலே இன்பம் கண்டேன். இதில் உண்டாகும் இன்பம் மற்ற இன்பங்களில் இருந்து வேறுபட்ட விளைவுகளை நிகழச் செய்வது. நான் நோயைக் காதலிக்கக் காரணம் என்ன தெரியுமா? அதில் இருக்கும் ஒருவித அமைதி, சாந்தி, நிசப்தம்தான். நோயுற்றவனிடம் யாரும் நெருங்கி வந்து, கோரிக்கை, வேண்டுதல், கூட்டத்திற்கு தேதி, பார்த்துப்பேச வாய்ப்பு எதையும் கேட்டுத் தொந்தரவு செய்ய மாட்டார்கள். நான் வேறொரு விதமான இன்பத்தையும் இந்த நோயின் மூலம்

பெற்று மகிழ்ந்தேன்; அது மிகவும் முக்கியமானது, அளவிட முடியாதது. நான் உடல் நலத்துடன் இருந்தபோது இருப்பதை விட நோய் உற்றபோது மனத்தால் எண்ணக்கூடிய பொருள் களுக்கு மிகவும் நெருக்கமானேன்.

*(ஜிப்ரானின் கடிதங்கள்)*

☆

நான் நோயுற்றிருந்தால் டெலிபோன் மணி அடிப்பதிலும் மற்றவர் அதிக நேரம் பேசுவதிலிருந்தும் விடுதலை. நான் பிணியுற்று, தலையணையில் தலைபுதைத்து, கண்களை மூடி, என்னையே மறந்து, இவ்வுலகிலிருந்து விடுபட்டு, நான் தெய்விகக் காடுகள், பள்ளத்தாக்குகள் பனியும் மேக முத்திரைகள் போல் மூடியுள்ள மலைகள், சமவெளிகள் இவை அனைத்திற்கும் மேலே பறவைகள் போல் பறப்பதாக உணர் கின்றேன். என் இதயம் யாரையெல்லாம் மிகவும் மிகவும் நெருக்கமாக இணைந்து, அவர்களை அழைத்து பேசுவது போல் உணர்கின்றேன். அப்போது கோபமே இல்லை, அவர்கள் நினைப்பது போல் நானும் நினைத்து அவர்கள் உணர்வது போல் நானும் உணர்ந்து மகிழ்கின்றேன். சில சமயங்களில் அவர்கள் என் நெற்றியின் மேல் அவர் கைகளை வைத்து என்னை ஆசீர்வதிக்கின்றனர்.

*(ஜிப்ரானின் கடிதங்கள்)*

☆

## ILLUSION- மாயை - பொய்த்தோற்றம் - ஏமாற்றம்

மனிதனின் விருப்பு ஓர் நிழல், மனத்தில் அவன் சிந்திக் கின்றான், மனித இனத்தின் உரிமைகள் எல்லாம் இலையுதிர்கால இலை போல் உதிர்ந்து மக்கி விடுகின்றன.

☆

## IMAGINATION - கற்பனை

*எண்ணங்கள், கண்ணுக்குப் புலப்படும் இந்த உலகை விட, உயர்ந்த ஓரிடத்திலே வசிக்க இடம் உள்ளது. அதன் ஆகாயங் களில் சிற்றின்ப மேகங்கள் மூடுவதில்லை; கற்பனைக் கடவுளின் சாம்ராஜ்யத்தை அடைய பாதையைக் கண்டு விடுகிறது. பொருளால் ஆன இந்த உலகத்திலிருந்து ஆத்மா விடுதலை அடைந்த பிறகு வரும் அக்கற்பனையை மனிதன் ஒரு சிறு கண்ணோட்டத்தில் காண முடியும்.*

*(சிந்தனைகளும் தியானமும்)*

☆

*கற்பனையால் ஒரே தாண்டில் வாழ்க்கையின் மைய பாகத்தை அடைய முடியும். அளவிற்கு மீறி அதிகமாக வளர்ந்ததை கழட்டி எறியட்டும்; பிறகு அந்த அதிக வளர்ச்சியை எரித்து அதன் சாம்பலை, அதை உலகில் கொண்டு வந்தவரின் கண்களிலே தூவட்டும். இப்படித்தான் எல்லாவித கற்பனை களையும் செய்ய வேண்டும்.*

*(ஜிப்ரானின் நீதிக்கதைகள்)*

☆

## IMITATION - போலி – மற்றவர் போல நடிப்பது

*நகர மக்கள் பேரறிவு பெற்றவராய் பாசாங்கு செய்கின்றனர். ஞானி என நினைப்போ! அவர்கள் கற்பனை என்றும் பொய்யே. அவர்கள் போலியாய் நடிப்பதிலே வல்லவர்கள். அதுவே அவர்களுக்கு கர்வமளிக்க, அந்த பண்டமாற்றிலே லாபமும் இல்லை, நஷ்டமும் இல்லையன்றோ! முட்டாள் தன்னையே மன்னனென நினைப்பான். அவன் கனவையும் நினைவையும் மாற்றவே முடியாது. கர்வம் கொண்ட மடையன்தான் பார்க்கும், கண்ணாடியையே வானம் என நினைப்பான்; தன் நிழலையே நிலவு என நினைப்பான்; சொர்க்கத்திலே மின்னும் நட்சத்திரம் என்றும்*

*நினைப்பான் அன்றோ? எல்லாம் போலி.*

*(ஜிப்ரானின் பொற்களஞ்சியம்)*

☆

## IMMORTALITY - சிரஞ்சீவி - அழிவின்மை

*மண்ணுலகின் மகனுக்கு மரணம் ஓர் முடிவான நிலையே! ஆனால் வானுலகின் மைந்தனுக்கோ வெற்றியின் ஆரம்பம். கட்டாயம் அவன் வென்றே தீருவான். கனவிலே விடியலைக் கட்டி அணைப்பவன் என்றும் அழியாத சிரஞ்சீவியாவான். அவனே நீண்ட இரவெல்லாம் உறங்கினால் துக்கக் கடலின் ஆழத்திற்கே மறைந்திடுவான். எவன் தரையையே தழுவி அணைப்பவன் விழித்திருக்கும் போதே ஊர்ந்து முடிவு வரை நகர்வான். சமுத்திரத்தை எதிர்த்து வீரப்போர் புரிவான் வெற்றி கொள்வான்; காத்திருப்போன் சரிந்து வீழ்வான்; மரணமும் அப்படியே!*

*(ஜிப்ரானின் ஊர்வலம்)*

☆

*நான் மாண்பின்மைக்கு, அழிவின்மைக்குப் பேராசைப் படாமல் இருந்திருந்தால், காலமெல்லாம் பாடப்பட்ட பாட்டை நான் கற்றுக் கொண்டிருக்க மாட்டேன்.*

*நான் என்னையே தற்கொலை செய்து கொண்டிருப்பேன்; அப்போது என் சமாதியிலே என் சாம்பல்தான் மறைத்து வைக்கப்பட்டிருக்கும்.*

*வாழ்க்கை ஓர் இருள். அது காலையில் சூரியன் உதித்த வுடன் மறைந்து விடும்.*

*ஏங்கும் என் இதயம் கூறுகிறது. சுடுகாட்டிலே அமைதி வாழ்கிறது என்று.*

*எவனாவது ஒரு முட்டாள், உடம்பு அழிவது*

*போலவே ஆத்மாவும் அழிந்து விடுகின்றது என்று சொன்னால், இறந்த எதுவும் உயிர் பெற்று வருவதில்லை என்று கூறினால் அவனிடம் சொல்லுங்கள்; 'மலர் கருகி வாடிவிடுகிறது. ஆனால் விதை உயிருடன் நம்முன் தோன்றி வாழ்க்கை என்றும் நிலைத் திருக்கும்' என்ற இரகசியத்தைக் காட்டுகின்றது.*

*(ஆத்மாவின் கண்ணாடி)*

☆

## IMPERMANENCE - நிலை அற்றது

*மனித இனம் என்பது நீரோடையின் நீர் மேல் எழுதிய கவிதையை ஒத்தது.*

*(ஜிப்ரானின் ஊர்வலம்)*

☆

## INDICTMENT - குற்றம் சாட்டல்

*நான் என் கூப்பாடுகளை மகிழ்ச்சி மிக்க சிரிப்பிற்கு மாற்றிக் கொள்வேன்; குற்றச்சாட்டிற்கு பதில் புகழ்மாலை சூடு; அதிகமாக இருப்பதை மிதமானதாக்கு; நீங்கள் எனக்கு ஒரு நேர்மையான ஆளுநரைக் காட்ட முடியுமா? ஒரு நேர்மையான வழக்கறிஞரைக் காண்பிக்க முடியுமா? ஒரு பாதிரியாரைத் தான் பேசுவதைப் போல வாழ்க்கையில் பின்பற்ற முடிந்த ஒரு மதவாதியைத் தெரியுமா? தன்னையே கண்டுகொள்ளும் கண் களுடன் தன் மனைவியைக் காண முடிந்த ஒரு கணவனைக் காட்ட முடியுமா?*

*(சிந்தனைகளும் தியானமும்)*

☆

## INFINITE - எல்லையற்ற - முடிவற்ற

*எல்லையற்ற சொர்க்கத்திலே நாம் ஓர் மிகச் சிறிய அணு. கடவுளின் ஆணைக்கு நாம் கீழ்படிந்து*

*நினைப்பான் அன்றோ? எல்லாம் போலி.*

*(ஜிப்ரானின் பொற்களஞ்சியம்)*

☆

## IMMORTALITY - சிரஞ்சீவி - அழிவின்மை

*மண்ணுலகின் மகனுக்கு மரணம் ஓர் முடிவான நிலையே! ஆனால் வானுலகின் மைந்தனுக்கோ வெற்றியின் ஆரம்பம். கட்டாயம் அவன் வென்றே தீருவான். கனவிலே விடியலைக் கட்டி அணைப்பவன் என்றும் அழியாத சிரஞ்சீவியாவான். அவனே நீண்ட இரவெல்லாம் உறங்கினால் துக்கக் கடலின் ஆழத்திற்கே மறைந்திடுவான். எவன் தரையையே தழுவி அணைப்பவன் விழித்திருக்கும் போதே ஊர்ந்து முடிவு வரை நகர்வான். சமுத்திரத்தை எதிர்த்து வீரப்போர் புரிவான் வெற்றி கொள்வான்; காத்திருப்போன் சரிந்து வீழ்வான்; மரணமும் அப்படியே!*

*(ஜிப்ரானின் ஊர்வலம்)*

☆

*நான் மாண்பின்மைக்கு, அழிவின்மைக்குப் பேராசைப் படாமல் இருந்திருந்தால், காலமெல்லாம் பாடப்பட்ட பாட்டை நான் கற்றுக் கொண்டிருக்க மாட்டேன்.*

*நான் என்னையே தற்கொலை செய்து கொண்டிருப்பேன்; அப்போது என் சமாதியிலே என் சாம்பல்தான் மறைத்து வைக்கப்பட்டிருக்கும்.*

*வாழ்க்கை ஓர் இருள். அது காலையில் சூரியன் உதித்த வுடன் மறைந்து விடும்.*

*ஏங்கும் என் இதயம் கூறுகிறது. சுடுகாட்டிலே அமைதி வாழ்கிறது என்று.*

*எவனாவது ஒரு முட்டாள், உடம்பு அழிவது*

போலவே ஆத்மாவும் அழிந்து விடுகின்றது என்று சொன்னால், இறந்த எதுவும் உயிர் பெற்று வருவதில்லை என்று கூறினால் அவனிடம் சொல்லுங்கள்; 'மலர் கருகி வாடிவிடுகிறது. ஆனால் விதை உயிருடன் நம்முன் தோன்றி வாழ்க்கை என்றும் நிலைத் திருக்கும்' என்ற இரகசியத்தைக் காட்டுகின்றது.

(ஆத்மாவின் கண்ணாடி)

☆

## IMPERMANENCE - நிலை அற்றது

மனித இனம் என்பது நீரோடையின் நீர் மேல் எழுதிய கவிதையை ஒத்தது.

(ஜிப்ரானின் ஊர்வலம்)

☆

## INDICTMENT - குற்றம் சாட்டல்

நான் என் கூப்பாடுகளை மகிழ்ச்சி மிக்க சிரிப்பிற்கு மாற்றிக் கொள்வேன்; குற்றச்சாட்டிற்கு பதில் புகழ்மாலை சூடு; அதிகமாக இருப்பதை மிதமானதாக்கு; நீங்கள் எனக்கு ஒரு நேர்மையான ஆளுநரைக் காட்ட முடியுமா? ஒரு நேர்மையான வழக்கறிஞரைக் காண்பிக்க முடியுமா? ஒரு பாதிரியாரைத் தான் பேசுவதைப் போல வாழ்க்கையில் பின்பற்ற முடிந்த ஒரு மதவாதியைத் தெரியுமா? தன்னையே கண்டுகொள்ளும் கண் களுடன் தன் மனைவியைக் காண முடிந்த ஒரு கணவனைக் காட்ட முடியுமா?

(சிந்தனைகளும் தியானமும்)

☆

## INFINITE - எல்லையற்ற - முடிவற்ற

எல்லையற்ற சொர்க்கத்திலே நாம் ஓர் மிகச் சிறிய அணு. கடவுளின் ஆணைக்கு நாம் கீழ்படிந்து

அடிபணியாமல் இருக்க இயலாது.

நாம் நேசித்தால், நம் நேசம் நம்மிலிருந்து வருவதில்லை; நமக்காகவும் இல்லை. நாம் மகிழ்ச்சியுற்றால், அம்மகிழ்ச்சி நம்மில் இல்லை. அது வாழ்க்கையிலேயே இருக்கிறது. நாம் துன்பப்பட்டால், அந்த வலி நம் புண்ணில் இல்லை. ஆனால் அது இயற்கையின் இதயத்திலேயே இருக்கிறது.

(ஆசானின் ஞான மொழி)

☆

## INHERITANCE - பரம்பரை உரிமைப்பொருள்

எவன் ஒருவன் பரம்பரை செல்வத்தைப் பெறுகிறானோ அவன் ஏழை எளியோரின் பணத்திலே மாளிகை கட்டுகிறான்.

(ஆத்மாவின் புரட்சி)

☆

## INTOXICATION - போதை - வெறி - குடி மயக்கம்

குழந்தை தாயின் முலைப்பாலைக் குடித்து வளர்வதுபோல், மனிதன் மருந்தையும் மதுவையும் தேடுகின்றான். தேய்ந்து, குறையும் காலம் வரும் போதுதான் அவனை ஓய்வெடுக்க விடுகின்றார்கள்.

(ஜிப்ரானின் ஊர்வலம்)

☆

## ISLAND - தீவு

தனிமை எனும் கடலிலே வாழ்க்கை ஒரு தீவு. இத்தீவின் கற்பாறைகள்தான் நம்பிக்கை. அதிலே வளரும் மரங்கள்தான் கனவுகள், தனிமைதான் அதன் மலர்கள், அதன் நீரோடைதான் தாகம், தவிப்பு.

என்னுடன் வாழும் மக்களே! உங்கள் வாழ்க்கை ஓர்

தீவு, அது மற்ற தீவுகளிலிருந்தும் பிராந்தியங்களி லிருந்தும் பிரிக்கப் பட்டது. உன் கடற்கரையிலிருந்து எத்தனை கப்பல்கள் புறப்பட்டு தூர தேசங்களுக்குச் சென்றாலும், எத்தனை கப்பல்கள் உன் கடற்கரையை வந்தடைந்தாலும் நீ ஒரு தனித்த தீவு ஆகத்தான் இருக்கின்றாய்.

நீ இன்பத்திற்காக ஏங்கி, தனிமையில் துன்பத் தவிப்பைத் தாங்கி துயரமடைகிறாய். உன் உடன் வாழ்பவருக்கே தன்மையினின்றும் இரக்கத்திலிருந்தும் விலகியே நிற்கிறாய்.

(ஆசானின் ஞான மொழி)

# J

## JESUS - ஏசுநாதர் - ஜீஸஸ்

மானிட சமுதாயம் ஏசுநாதரை-நாசரத்தீனில் ஏழையாய் பிறந்து, துன்பப்பட்டு, துயருற்று, மக்களால் அவமானப்படுத்தப் பட்டு எல்லோராலும் கொடுமைப் படுத்தப்பட்டவராகவே கருதுகிறது.

ஏசுவை நினைத்து அனைவரும் பரிதாபப்படு கின்றனர். ஏசு சிலுவையில் அறையப்பட்டு எல்லா துன்பங்களையும் அனுபவித்தார் என்று மனித சமுதாயம் நம்புகிறது. இப்படிப் பட்ட மக்களிடம் ஏசுவிற்கு என்ன அளிக்கின்றார்கள்? அழுகையும், ஓலமும், புலம்பலும், கதறலும்தான். கடந்த பல நூற்றாண்டுகளாய் மனிதச் சமுதாயம் பலமின்மையை-நம்மை வாழ்விக்க வந்த ஏசுநாதர் என்று கூறி வணங்கி ஆராதிக்கிறது.

ஆனால் நாசனீனின் செல்வன் பலமற்றவனில்லை. அவர் பலவான், மிகவும் பலசாலி. ஆனால் மக்கள் பலத்தின் உண்மையான பொருளை அறிய, கேட்க மறுக்கின்றனர்.

ஏசுநாதர், ஒளி வட்டத்தின் இதயத்திலிருந்து வெளிவந்து, வீடுகளை அழித்து, அந்த இடிபாடுகளின் மேல் மடாலயங் களையும், பள்ளிகளையும் கட்ட முற்படவில்லை. பலமிக்க மனிதனை ஒரு பாதிரியாகவோ, துறவியாகவோ சந்நியாசி யாகவோ மாறும்படி தன் போதனையால் தூண்டவும் இல்லை. ஏசு இந்த பூமியில் ஒரு புத்துணர்ச்சியை உண்டாக்கவே வந்தார். மனிதனின் எலும்புகள் மண்டையோடுகளால் கட்டப்பட்ட கொடுங்கோலாட்சியின் அடித்தளத்தையே தாக்கும் சக்தியுடன் வந்தார். பலமற்றவனின் சவக்குழிகளின் மேல் கட்டப்பட்ட கம்பீரமான அரண்மனைகளைத் தகர்க்கவே வந்தார்;

ஏழைகளின் உடல்களின் மேல் கட்டப்பட்ட எல்லா சிலைகளையும் உடைத்து நொறுக்கவே வந்தார். ஏசுநாதர், மக்களுக்கு இடிந்து சரிந்த குடிசைகளுக்கும், இருண்ட சோகமான பொந்துகளுக்கும் இடையே மிகவும் அழகான அற்புதமான மாதா கோயில்களையும், தேவாலயங்களையும் கட்டுவதற்கு கற்றுக் கொடுக்க வரவில்லை. ஏசுநாதர் மனிதனின் இதயத்தைக் கோயிலாக மாற்றவும், ஆத்மாவை பலிபீட மாகவும், மனத்தை ஒரு பாதிரியாக மாற்றவே வந்தார்.

(இதயத்தின் இரகசியம்)

☆

கட்டாயம் நீ பிரார்த்தனை செய்ததெல்லாம் உன் வாழ்வின் கடைசி நாள் வரை நிலைக்கும்படியாகவே தொழுது இருக் கின்றாய்; இனிமேல் நீ மாதா கோயிலில் நுழைந்து பிரார்த்தனை செய்ய வேண்டாம்; நீ மிகவும் அன்பாக நேசிக்கும் ஏசுநாதர், தேவாலயத்தில் காணவில்லை; வணங்கும் இடங்கள் பலப்பல; ஆனால்

*உண்மையும் உணர்வும் கலந்து வணங்கும் மக்கள் மிக மிகக் குறைவானவர்களே!*

*(ஜிப்ரானின் நீதிக்கதைகள்)*

☆

## JOURNALIST - பத்திரிகையாளர்

*நீ கொள்கையை விற்று, அடிமைகளின் கடைத்தெருவிலே, கொலை, களவு, துரதிர்ஷ்டம், வீண் வம்புப் பேச்சு இவற்றை வியாபாரம் செய்யும் பத்திரிகையாளனா? அப்படியானால் நீ ஓர் பிணம் தின்னும் கரும் கழுகு !*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

## JUDGEMENT - நீதித் தீர்ப்பு

*அறிவாளி ஒருவனுக்கு நீதித்தீர்ப்பு செய்யும் திறமை இல்லையேல் அவன் ஆயுதமின்றி போர்க்களம் செல்லும் போர் வீரன் போலாவான்; அவனுடைய கோபம், சமூகத்தின் தூய நீர் ஊற்றையும் விஷமாக்கவல்லது; அவன் தூய நீர் நிறைந்த பானையிலே கற்றாழைச் சாற்றைக் கலந்தவன் போன்றவன்.*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

## JUSTICE - நீதி – நியாயம்

*பூமியின் மேல் நியாயம், ஓர் முகமதியனை, சொல்லைச் சரியாக உபயோகிக்கவில்லை என கதறச்*

செய்யும்; இறந்தவர்கள் இதற்கு சாட்சியானால், உலகின் நேர்மையை எண்ணி நகைப்பார்கள்.

சட்டத்தை மதிக்காத சிறு குற்றவாளிக்கு, சிறைக்கதவு திறக்கும்; தூக்கு கயிறு வரவேற்கும்! ஆனால் பெருங்கள்ளர்கள் கொள்ளையர்களை பொன்னும், பொருளும், மரியாதையும், கௌரவமும் வரவேற்கும்!

மலரைத் திருடினால் நாம் இழிவு என்போம்; பெரும் நிலப்பரப்பைத் திருடினால் தீரச்செயல் என்போம்! ஓர் உடம்பைக் கொன்றவனுக்கு தூக்கு தண்டனை! ஆத்மாவையும் உணர்ச்சியையும் கொல்வோன் தப்புகின்றான் தண்டனை ஏதுமின்றி!

(ஜிப்ரானின் ஊர்வலம்)

☆

கொலைகாரனைக் கொல்லும்போது நீதியும் நியாயமும் என்ன அதிகாரத்தைக் காட்டுகிறது? ஒரு நாடு அடுத்துள்ள நாட்டின் மேல் படையெடுத்து அதன் மக்களைக் கொன்று பொருளைக் களவாடும் ஒரு கள்வனுக்கு ஓர் பெரிய திருடன் தண்டனை தரும்போது நீதி என்ன செய்கிறது? பெரிய கொலைகாரன் ஓர் உயிரைக் கொன்ற ஒருவனை தூக்கிலிட்டு கொல்லும்போது அந்த அதிகாரத்தைப் பற்றி நீதியும் நியாயமும் என்ன நினைக்கிறது?

(களிப்பும் கண்ணீரும்)

☆

ஒரு மனிதன் வேறொரு மனிதனைக் கொல்லும்போது மக்கள் அவனைக் கொலைகாரன் என்கின்றனர். ஆனால் அரசன் ஒருவனைக் கொன்றால் அதுதான் அரசனின் நீதி என்கின்றனர்! ஒரு மடத்திலே ஒருவன் பொருளைக் கவர்ந்தால் அவனைத் திருடன் என்கின்றனர். ஆனால் அரசன் அவன் உயிரையே

*கொள்ளையிட்டால் அரசனுக்கு மிகவும் மரியாதையும் மேன்மையும் ஏற்படுகிறது! ஒரு பெண்மணி தன் கணவனைக் கைவிட்டால், துரோகம் செய்தால் அவளை விபசாரி என்று ஏசுகிறது. அவளை அரசன் நடுவீதியிலே நிர்வாணமாய் நடக்கச் செய்து கல்லெறிந்து அவளைச் சாகடித்தால், அரசனை, கௌரவமானவன் என்று போற்றுகிறது!*

*இரத்தத்தைச் சிந்துவது தடை செய்யப்பட்ட ஒன்று. ஆனால் இரத்தம் சிந்துவதை அரசனுக்கு மட்டும் உரிமையாக்கியது எந்த சட்டம்? ஒருவனின் பணத்தை அபகரிப்பது குற்றம்; ஆனால் ஒருவனின் உயிரையே போக்கி விடுவது கௌரவமான செயலா! கணவனுக்கு துரோகம் செய்து கைவிடுவது வேண்டுமானால் ஓர் அசிங்கமான செயலாக இருக்கலாம்; ஆனால் உயிருள்ள ஆத்மாவை கல்லெறிந்து கொல்வது அழகான காட்சியா?*

*இரத்தத்திற்கு இரத்தம், உயிருக்கு உயிர் என்று சொல்லி விடுவது சட்டமாகுமா? அப்படியானால் வஞ்சத்தை அதைவிட பெரிய வஞ்சத்தால் தோற்கடித்து அதையே சட்டம், ஆட்சியின் கண்ணியம் என்று சொல்லலாமா? சிறு குற்றங்களைப் பெரிய குற்றங்களால் வென்று இதுவே நீதி, நியாயம், நெறி என்று சொல்லலாமா?*

*(ஆத்மாவின் புரட்சி)*

☆

*நீதியினின்று பெறும் வெகுமதி, தர்மத்திலிருந்து உற்பத்தி யாகும் இன்பத்தை விட உயர்ந்தது.*

*(ஆசானின் ஞான மொழி)*

# K

## KIN - சுற்றத்தினர் - உறவினர்

*உன்னுடைய சொந்த சகோதரனை விட, உன்னைப் புரிந்து, தெரிந்து, அறிந்து கொண்டவன் மிகவும் நெருங்கிய உறவினன்! உன்னுடைய உண்மையான மதிப்பும், உன்னை நன்றாகப் புரிந்து கொள்ளுவதும் உன் உறவினரால் கூட தெரியாமல் புரியாமல் இருக்கலாம் அல்லவா!*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

## KINDNESS - அன்பு - இரக்கம்

*உணர்ச்சி மிக்க பெண்ணின் இதயத்திலிருந்தே மனித இனத்தின் இன்பம் பொங்கி வழிகின்றது. அவருடைய கம்பீரமான, மிக உயர்ந்த ஆத்மாவின் அன்பு, இரக்கம், பாசத்திலிருந்துதான் மனித இனத்தின் பிரியம் உண்டாகிறது.*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

*மக்களின் அன்பிலே ஒன்றுமில்லை! சிப்பிக்குள்*

*முத்துமில்லை! மதிப்புமிக்க ரத்தினமும் இல்லையே! வாழும் மனிதனில் இரு இதயம் வைத்தான். சின்னதிலே ஆழமான மென்மையை வைத்தான்! பெரியதாய் இருப்பினும் திண்மையை வைத்தான். அன்பு, எப்போதுமே ஒரு கேடயம் தான். தயாள குணம் எப்போதுமே மின்னும் வாள்தான்.*

*(ஜிப்ரானின் கருவூலம்)*

☆

## KINGDOM OF HEAVEN - சொர்க்க சாம்ராஜ்யம்

*மத நம்பிக்கைகளும், ஞான உபதேசங்களும் வீண்; மனிதனை இழிந்தவனாய், துர்பாக்கியனாய் செய்து விடுகிறது. நல்ல தன்மையே பொய்; அது அவனை துன்பத்திலும் துயரத்திலும் மூழ்கடிக்கிறது. மனிதன் வாழ்வின் குறிக்கோளோ இன்பமாக இருப்பதுதான்; மகிழ்ச்சிக்குப் பாதையிட்டு அழைத்துச் சென்று, எங்கெங்கு சென்றாலும் இந்தத் தத்தவத்தைப் பிரசாரம் செவ்வதே மனிதனின் பேரின்பம். இந்தப் பிறவியிலேயே எவன் ஒருவனால் சொர்க்க சாம்ராஜ்யத்தைக் காணமுடியவில்லையோ அவனால் வரப்போகும் வாழ்க்கை யிலும் இன்பம் காணமுடியாது. நாம் நாடு கடத்தப்பட்டு இந்த பிறவி எடுக்கவில்லை; நாம் கடவுளின் ஒன்றும் அறியாத உயிர்ப்பிராணியாய் தோன்றி இருக்கிறோம். நாம் எப்படி முடிவற்ற பரம்பொருளை வணங்கி வழிபடுவது என்பதைக் கற்றுக் கொள்ள வந்தோம்; அழகான இந்த உலக வாழ்க்கையிலே நம்மிலே மறைந்து பொதிந்து கிடக்கும் இரகசியங்களைத் தேடி அறியவே தோன்றியுள்ளோம்.*

*(ஆத்மாவின் புரட்சி)*

☆

## KINGDOMS - இராஜ்ஜியம்

*மனித சமுதாயம் பல இனங்களாக, குடியினராக பிரிக்கப் பட்டுள்ளது; அவர்கள் ஒவ்வொரு நாட்டையும், நகரையும் சேர்ந்தவர்களாக உள்ளனர். ஆனால் நான் எல்லா பிரிவினர் களுக்கும் புதியவனாக, அந்நியனாக இருக்கின்றேன்; எந்த குடியிருப்பையும் சேராதவனாக இருக்கின்றேன்; இந்த உலகமே (பிரபஞ்சம்) என் நாடு, இந்த மானிட சமுதாயமே என் இனம்.*

*மனிதன் பலமற்றவன்; அவர்கள் தங்களுக்குள்ளேயே பிளவு பட்டு பிரிந்து வாழ்வது துயரம் தருகின்றது; உலகமே மிகவும் குறுகிய கோட்பாடுகளைக் கொண்டுள்ளது. இதை நாம் வெட்டி, துண்டாடி, பிளவு செய்து மாகாணங்கள், இராஜ்யங்கள், சாம்ராஜ்யங்கள் என்று பிரிப்பது அறிவீனம்.*

*(களிப்பும் கண்ணீரும்)*

☆

## KNOWLEDGE - அறிவு - ஞானம்

*கற்றுணர்தல், பல பாதைகளைப் பின்பற்றும் நமக்கு அதன் ஆரம்பம் தெரியும். முடிவு தெரியாது. காலமும் விதியுமே அதன் வழிகளை ஆட்சி செய்யும். நமக்கோ அதன் விளைவிற்கு மேல் தெரியவே தெரியாது. அறிவினிலே சிறந்தது கனவே!*

*லாபமடைவோன் அதைக் கெட்டியாய் பற்றுகிறான். இகழ்ச்சிக்கு அவன் இரையாவதில்லை; கூட்டத்திற் கிடையே அமைதியாக நிந்தனைக்கும் தாழ்ச்சிக்கும் அடங்கி நகர் கின்றான்.*

*(ஜிப்ரானின் ஊர்வலம்)*

◉

L

## LAW - சட்டம்

சட்டம் என்றால் என்ன? சொர்க்கத்தின் ஆழத்திலிருந்து சூரியனுடன் சட்டம் வந்ததை யார் பார்த்தார்கள்? எந்த மனிதன் தன் கடவுளின் இதயத்தைக் கண்டான்? எந்த நாட்டில் தேவதைகள் அந்த நாட்டு மக்களுடன் நடந்து பிரசாரம் செய்தனர்? ''பலமற்றவர்களை வாழ்க்கையை அனுபவிப்பதி லிருந்து தடுத்து நிறுத்தியது; சட்டத்தை மீறுபவரை கூறான வாளால் வெட்டச் சொல்லிற்று; பாபிகளின் மேல் இரும்புக் கால்களால் மிதிக்கச் சொல்லிற்று?''

(ஆத்மாவின் புரட்சி)

☆

மனிதனால் புனையப்பட்ட கொடிய சட்டத்தின் நிர்ப்பந்தத் திற்கு ஆட்பட்டு உன் மனைவி மக்களைக் கைவிட்டு விட்ட போர் வீரனா நீ? நீ பேராசையால் உந்தப்பட்டவனுக்காக போர்க்களம் சென்ற போர் வீரனா நீ? இதைத்தான் உன் தலைவர்கள் 'கடமை' என்று தவறாகக் கூறுகின்றனரா?

நீ ஒரு சிறைக் கைதியா? உன்னை இருட்டுச் சிறையிலே அடைத்து வைத்துள்ளனரா? உன் குற்றம் என்ன? மக்களைச் சீர்திருத்துகிறோம் என்று சொல்லிக்கொண்டு லஞ்சம் பெற்று கொழுக்கும் இந்த இழிவானவர்கள் உன்மேல் சாதாரண குற்றம் சாட்டி கைதியாக்கி உன்னை தண்டித்து விட்டார்களா?

நீ ஓர் அழகான இளம்பெண்ணா? உன் மேல் கடவுள் அழகையெல்லாம் சொரிந்திருக்கின்றாரா? உன்னை இந்த பணக்காரர்கள் தங்களின் கீழான காம இச்சைக்கு இரையாக்கிக் கொண்டார்களா? உன்னை ஏமாற்றி உன் உடலை அபகரித்துக் கொண்டனர்! ஆனால் உன் இதயத்தை விலைக்கு வாங்க முடியவில்லை. கடைசியாக உன்னை துன்பத்திலும் துயரத் திலும் தவிக்க விட்டு விட்டார்களா? மனிதன் இயற்றிய சட்டங்களினால் தண்டிக்கப்பட்ட நீ ஓர் தியாகியா? துரதிர்ஷ்டம் பிடித்தவளா? ஆம் உன் கேவலமான நிலைக்குக் காரணம் என்ன? பலம் மிக்கவனின் அநியாயம் அநீதி; கொடுங் கோலனின் நீதியற்ற செயல்; பணக்காரனின் மிருகத்தன்மை; பேராசைக்காரனின் சுயநலம்; இவைதான் காரணம்.

(ஆசானின் ஞான மொழி)

☆

மனிதன் தன் கைகளாலேயே பலமற்றவனாகிறான்; கடவுளின் சட்டத்தை மாற்றி விட்டான். வாழ்க்கையைச் சிறையாக்கி விட்டான். சமூக சட்டங்கள் எனும் இரும்புச் சங்கிலியால் தன்னைத் தானே கட்டி பிணைத்துக்கொண்டான். தனக்கும், குழந்தைகட்கும் தன் மகன்களுக்கும் மிகப்பெரிய துன்பியல்களை ஏற்றுக் கொண்டான். இந்த பெரிய வேதனை களை உணரத் தொடர்ந்து மறுத்தான். பூமியின் மேல் சண்டை யெனும்

L

## LAW - சட்டம்

சட்டம் என்றால் என்ன? சொர்க்கத்தின் ஆழத்திலிருந்து சூரியனுடன் சட்டம் வந்ததை யார் பார்த்தார்கள்? எந்த மனிதன் தன் கடவுளின் இதயத்தைக் கண்டான்? எந்த நாட்டில் தேவதைகள் அந்த நாட்டு மக்களுடன் நடந்து பிரசாரம் செய்தனர்? ''பலமற்றவர்களை வாழ்க்கையை அனுபவிப்பதி லிருந்து தடுத்து நிறுத்தியது; சட்டத்தை மீறுபவரை கூறான வாளால் வெட்டச் சொல்லிற்று; பாபிகளின் மேல் இரும்புக் கால்களால் மிதிக்கச் சொல்லிற்று?''

(ஆத்மாவின் புரட்சி)

☆

மனிதனால் புனையப்பட்ட கொடிய சட்டத்தின் நிர்ப்பந்தத் திற்கு ஆட்பட்டு உன் மனைவி மக்களைக் கைவிட்டு விட்ட போர் வீரனா நீ? நீ பேராசையால் உந்தப்பட்டவனுக்காக போர்க்களம் சென்ற போர் வீரனா நீ? இதைத்தான் உன் தலைவர்கள் 'கடமை' என்று தவறாகக் கூறுகின்றனரா?

நீ ஒரு சிறைக் கைதியா? உன்னை இருட்டுச் சிறையிலே அடைத்து வைத்துள்ளனரா? உன் குற்றம் என்ன? மக்களைச் சீர்திருத்துகிறோம் என்று சொல்லிக்கொண்டு லஞ்சம் பெற்று கொழுக்கும் இந்த இழிவானவர்கள் உன்மேல் சாதாரண குற்றம் சாட்டி கைதியாக்கி உன்னை தண்டித்து விட்டார்களா?

நீ ஓர் அழகான இளம்பெண்ணா? உன் மேல் கடவுள் அழகையெல்லாம் சொரிந்திருக்கின்றாரா? உன்னை இந்த பணக்காரர்கள் தங்களின் கீழான காம இச்சைக்கு இரையாக்கிக் கொண்டார்களா? உன்னை ஏமாற்றி உன் உடலை அபகரித்துக் கொண்டனர்! ஆனால் உன் இதயத்தை விலைக்கு வாங்க முடியவில்லை. கடைசியாக உன்னை துன்பத்திலும் துயரத் திலும் தவிக்க விட்டு விட்டார்களா? மனிதன் இயற்றிய சட்டங்களினால் தண்டிக்கப்பட்ட நீ ஓர் தியாகியா? துரதிர்ஷ்டம் பிடித்தவளா? ஆம் உன் கேவலமான நிலைக்குக் காரணம் என்ன? பலம் மிக்கவனின் அநியாயம் அநீதி; கொடுங் கோலனின் நீதியற்ற செயல்; பணக்காரனின் மிருகத்தன்மை; பேராசைக்காரனின் சுயநலம்; இவைதான் காரணம்.

(ஆசானின் ஞான மொழி)

☆

மனிதன் தன் கைகளாலேயே பலமற்றவனாகிறான்; கடவுளின் சட்டத்தை மாற்றி விட்டான். வாழ்க்கையைச் சிறையாக்கி விட்டான். சமூக சட்டங்கள் எனும் இரும்புச் சங்கிலியால் தன்னைத் தானே கட்டி பிணைத்துக்கொண்டான். தனக்கும், குழந்தைகட்கும் தன் மகன்களுக்கும் மிகப்பெரிய துன்பியல்களை ஏற்றுக் கொண்டான். இந்த பெரிய வேதனை களை உணரத் தொடர்ந்து மறுத்தான். பூமியின் மேல் சண்டை யெனும்

சிறைச்சாலையைக் கட்டினான்; அகப்பட்டான்; தப்ப முடியாமல் தவிக்கிறான்! துன்பமும் துயரமும் அவனே உவந்து ஏற்றானே!

(ஜிப்ரானின் களஞ்சியம்)

☆

## LAWS - சட்டங்கள்

நான் சட்டங்களுக்கு எதிரி; குடும்ப இணைப்பிற்கு எதிரி; பழைய பழக்க வழக்கங்களுக்கு விரோதி என்று மக்கள் கூறு கின்றார்கள். அந்த மக்கள் உண்மையே கூறுகின்றார்கள். நான் மனிதனால், இயற்றப்பட்ட சட்டங்களைக் காதலிக்கவில்லை; நான் தெய்விக, ஆத்மீக அன்பைத்தான் காதலிக்கின்றேன். அதுவே இந்த உலகத்தில் எல்லா சட்டங்களுக்கும் ஆரம்ப மாகும் இடமாக இருக்க வேண்டும்; ஏனெனில் மனிதனில் உள்ள கடவுளின் நிழல்தான் அந்த அன்பு.

(ஆத்மாவின் கண்ணாடி)

☆

மானிட சமுதாயம் கடந்த 70 நூற்றாண்டுகளாக இந்த சீர்கெட்ட லஞ்ச லாவண்ய சட்டங்களுக்கு கீழ்படிந்து விட்டுக் கொடுத்து விட்டது. இந்த மானிட சமூகத்தால் மிக உயர்ந்த, என்றும் வாழும் சட்டத்தின் பொருளைப் புரிந்து கொள்ள முடியவில்லை.

ஆத்மீக வியாதி ஒரு தலைமுறையிலிருந்து வம்சாவழி வழியாகத் தொடர்ந்து வந்து இப்போது மக்களின் ஒரு அங்கமாக அமைந்து விட்டது. இப்போது மக்கள் அதை ஒரு வியாதியாகக் கருதாமல், அதை ஓர் இயற்கையின் அன்பளிப்பாகக் கருது கின்றனர்; அது கடவுளால் ஆதாமுக்கு வானிலிருந்து பொழிந்தது என நினைக் கின்றனர்.

இந்த மக்கள் யாராவது ஒருவர் இந்த வியாதியின் கிருமிகள் இல்லமல் இருப்பதைக் கண்டால் அவனைப் பற்றி மிகவும் கேவலமாகவும், மானக்கேடாகவும் நினைக்கின்றனர்! என்ன விசித்திரம்?

(ஜிப்ரானின் கடிதங்கள்)

☆

## LEARNING - அறிதல் - படித்தல் - தெரிதல்

படித்தறிதல் விதைகளுக்கு உயிரூட்டம் அளிக்கிறது. ஆனால் அதுவே விதைகளைக் கொடுப்பதில்லை.

(ஆத்மாவின் கண்ணாடி)

☆

பகுத்தறிவும் படிப்பறிவும் உழப்படாத நிலம் போல; அல்லது உயிர்ச்சத்து பெறாத மனித உடம்பு போலவாகும்.

(ஆசானின் ஞான மொழி)

☆

கல்வி அறிவு ஒன்று மட்டுமே கொடுங்கோலர் கொள்ளை கொள்ள முடியாத செல்வம். உன் உள்ளே இருக்கும் ஞான ஒளியை மரணம் மட்டும்தான் ஒளி இழக்கச் செய்யும்.

ஒரு நாட்டின் செல்வம் அதன் பொன்னிலும் வெள்ளியிலும் இல்லை; ஆனால் நாட்டின் செல்வம் கல்வி அறிவு, ஞானம், அதன் மக்களின் நேர்மை, கம்பீரம், தலை வணங்காத நடுநிலையிலேதான் இருக்கிறது.

(ஆசானின் ஞான மொழி)

☆

## LIARS - பொய்யர்கள்

*மக்களுக்கிடையே கொலையே புரியாதவர்கள் கொலை காரர்களாயும், ஒன்றையுமே திருடாதவர்கள் கள்வர்களாயும், உண்மையை மட்டுமே பேசியவர்கள் பொய்யர்களாகவும் இருக்கின்றார்கள்!*

*(ஆத்மாவின் கண்ணாடி)*

★

## LIBERTY - விடுதலை - சுதந்திரம்

*நான் வாழ்க்கையின் நிழலிலே, நிழலின் பள்ளத்தாக்கிலே, தன்னந்தனியனாய் நடந்தேன்; அங்கே பழைய முயற்சிகளை மறைப்பதே குற்றமெனக் கருதப்பட்டது; வருங்காலத்தின் ஆத்மா வெகு காலமாக மடிந்து ஓய்வெடுத்துக் கொண்டிருந்தது. அங்கே கண்ணீரும் இரத்தமும் ஆறாக ஓடும். ஓர் கடும் நஞ்சுடைய கட்டுவீரியன் பாம்பு நெளிவது போல, கொலைக் குற்றம் புரிந்தோனின் கனவு போல, ஊர்ந்து சென்றது; அடிமைப் பிசாசுகளின் பயந்த முணுமுணுப்பைக் கேட்டு, வெறுமையை உற்று நோக்கினேன்.*

*நடு இரவு வந்ததும் ஆவிகள் மறைவிடங்களிலிருந்து வெளி வந்தன. ஓர் மரணமடையப் போகும் பிசாசு பிணம் போல் மண்டியிட்டு வீழ்ந்தது; சந்திரனை வெறித்துப் பார்த்தது; நான் அருகில் நெருங்கினேன். ''உன் பெயர் என்ன?'' என்று கேட்டேன். அந்த சகிக்க முடியாத பிணத்தின் நிழல் பதில் சொல்லிற்று, ''நான்தான் சுதந்திரம், விடுதலை'' நான் கேட்டேன் ''எங்கே உன் குழந்தைகள்?'' உடனே சுதந்திரம், பலமிழந்து, அழுது கண்ணீர் விட்டு, பெருமூச்சு இறைக்க ''ஒருவனைச்*

சிலுவையில் அறைந்து கொன்றார்கள்! மற்றவன் பைத்தியம் பிடித்து செத்தான்; மூன்றாம் மகன் இன்னும் பிறக்கவே இல்லை'' என்றாள்.

அவள் நொண்டிக்கொண்டே மறுபடியும் பேசினாள்; ஆனால் அதற்குள் என் பனித்திரை படிந்து அழுத கண்களால் காண முடியவில்லையே; நான் தேம்பி அழும் சத்தத்தில் காதுகள் கேட்கவே இல்லை.

(இதயத்தின் இரகசியம்)

☆

உலகத்தில் எல்லாமும் இயற்கையின் நியதிக்கும் சட்டத் திற்கும் உட்பட்டே வாழ்கின்றன; அந்த சட்டத்திலிருந்துதான் சுதந்திரத்தின் இன்பமும் புகழும் பெருமையும் உற்பத்தியா கின்றன; ஆனால் மனிதனுக்கு இந்த நல்ல செல்வம் மறுக்கப் படுகிறது; ஏனெனில் மனிதன் தனக்கே உரித்தான சில பூவுலக சட்டங்களை ஒரு வரையறைக்கு உட்பட்டு, கடவுள் கொடுத்த ஆத்மாவிற்கு அளிக்கின்றான். அவன் தனக்கே மிகக் கடுமையான சட்டங்களை ஏற்படுத்திக் கொண்டான்.

மனிதன் மிகவும் குறுகலான, துன்பம் தரும் சிறைச்சாலையைக் கட்டி அதில் தன் அன்பையும் ஆசை களையும் அடக்கி தனிமைப்படுத்திவிட்டான்! மிகப் பெரிய சவக்குழியைத் தோண்டி அதில் அவனுடைய இதயத்தையும் அதன் குறிக்கோளையும் புதைத்துவிட்டான். ஒரு தனி மனிதன் தன் மனசாட்சியின்படி, ஆத்மாவின் சொற்படி, இந்த சமூகத்தி லிருந்து விலகி சட்டத்தை மீறி நடந்தால், அவனுடன் வாழும் மற்ற ஜனங்கள் அவனை ஒரு புரட்சிக்காரன், நாடு கடத்தப்பட அருகதையுள்ளவன் என்று கூறுகின்றனர்; இல்லையேல் இவன் ஓர் புகழற்ற மிருகம். இவனைக்

## LIARS - பொய்யர்கள்

*மக்களுக்கிடையே கொலையே புரியாதவர்கள் கொலை காரர்களாயும், ஒன்றையுமே திருடாதவர்கள் கள்வர்களாயும், உண்மையை மட்டுமே பேசியவர்கள் பொய்யர்களாகவும் இருக்கின்றார்கள்!*

*(ஆத்மாவின் கண்ணாடி)*

☆

## LIBERTY - விடுதலை - சுதந்திரம்

*நான் வாழ்க்கையின் நிழலிலே, நிழலின் பள்ளத்தாக்கிலே, தன்னந்தனியனாய் நடந்தேன்; அங்கே பழைய முயற்சிகளை மறைப்பதே குற்றமெனக் கருதப்பட்டது; வருங்காலத்தின் ஆத்மா வெகு காலமாக மடிந்து ஓய்வெடுத்துக் கொண்டிருந்தது. அங்கே கண்ணீரும் இரத்தமும் ஆறாக ஓடும். ஓர் கடும் நஞ்சுடைய கட்டுவீரியன் பாம்பு நெளிவது போல, கொலைக் குற்றம் புரிந்தோனின் கனவு போல, ஊர்ந்து சென்றது; அடிமைப் பிசாசுகளின் பயந்த முணுமுணுப்பைக் கேட்டு, வெறுமையை உற்று நோக்கினேன்.*

*நடு இரவு வந்ததும் ஆவிகள் மறைவிடங்களிலிருந்து வெளி வந்தன. ஓர் மரணமடையப் போகும் பிசாசு பிணம் போல் மண்டியிட்டு வீழ்ந்தது; சந்திரனை வெறித்துப் பார்த்தது; நான் அருகில் நெருங்கினேன். ''உன் பெயர் என்ன?'' என்று கேட்டேன். அந்த சகிக்க முடியாத பிணத்தின் நிழல் பதில் சொல்லிற்று, ''நான்தான் சுதந்திரம், விடுதலை'' நான் கேட்டேன் ''எங்கே உன் குழந்தைகள்?'' உடனே சுதந்திரம், பலமிழந்து, அழுது கண்ணீர் விட்டு, பெருமூச்சு இறைக்க ''ஒருவனைச்*

சிலுவையில் அறைந்து கொன்றார்கள்! மற்றவன் பைத்தியம் பிடித்து செத்தான்; மூன்றாம் மகன் இன்னும் பிறக்கவே இல்லை'' என்றாள்.

அவள் நொண்டிக்கொண்டே மறுபடியும் பேசினாள்; ஆனால் அதற்குள் என் பனித்திரை படிந்து அழுத கண்களால் காண முடியவில்லையே; நான் தேம்பி அழும் சத்தத்தில் காதுகள் கேட்கவே இல்லை.

(இதயத்தின் இரகசியம்)

☆

உலகத்தில் எல்லாமும் இயற்கையின் நியதிக்கும் சட்டத் திற்கும் உட்பட்டே வாழ்கின்றன; அந்த சட்டத்திலிருந்துதான் சுதந்திரத்தின் இன்பமும் புகழும் பெருமையும் உற்பத்தியா கின்றன; ஆனால் மனிதனுக்கு இந்த நல்ல செல்வம் மறுக்கப் படுகிறது; ஏனெனில் மனிதன் தனக்கே உரித்தான சில பூவுலக சட்டங்களை ஒரு வரையறைக்கு உட்பட்டு, கடவுள் கொடுத்த ஆத்மாவிற்கு அளிக்கின்றான். அவன் தனக்கே மிகக் கடுமையான சட்டங்களை ஏற்படுத்திக் கொண்டான்.

மனிதன் மிகவும் குறுகலான, துன்பம் தரும் சிறைச்சாலையைக் கட்டி அதில் தன் அன்பையும் ஆசை களையும் அடக்கி தனிமைப்படுத்திவிட்டான்! மிகப் பெரிய சவக்குழியைத் தோண்டி அதில் அவனுடைய இதயத்தையும் அதன் குறிக்கோளையும் புதைத்துவிட்டான். ஒரு தனி மனிதன் தன் மனசாட்சியின்படி, ஆத்மாவின் சொற்படி, இந்த சமூகத்தி லிருந்து விலகி சட்டத்தை மீறி நடந்தால், அவனுடன் வாழும் மற்ற ஜனங்கள் அவனை ஒரு புரட்சிக்காரன், நாடு கடத்தப்பட அருகதையுள்ளவன் என்று கூறுகின்றனர்; இல்லையேல் இவன் ஓர் புகழற்ற மிருகம். இவனைக்

கொலை செய்ய வேண்டும், தூக்கிலிட வேண்டும் என்று இயம்புகின்றனர்.

இந்த உலகம் அழியும் வரை மனிதன் அடிமையாய் தன்னைத்தானே சிறையில் அடைத்துக் கொள்வானா? இல்லையேல் கால வெள்ளத்தால் விடுதலை செய்யப்பட்டு, ஆத்மாவிற்காகவே உள்ளுணர்வுடன் வாழ்வானா?

மனிதன் இந்த உலகத்தின் பின் புறத்தையும், கீழ்ப் புறத்தையும் வெறித்துப் பார்க்க வேண்டுமென வற்புறுத்து வானா? அல்லது மனிதன் தன் கண்களைச் சூரியனை நோக்கித் திருப்பிக்கொண்டு தன்னுடைய உடம்பின் நிழலையே மண்டையோடுகளுக்கும் எலும்புக் கூடுகளுக்கும் இடையே காண முடியாமல் இருந்து விடுவானா?

(ஆத்மாவின் புரட்சி)

☆

LIFE - உயிர் - வாழ்க்கை - ஆர்வம்

மனிதன் தனக்கு வெளியே வாழ்க்கையைக் காணப் போராடுகின்றான்; ஆனால் அவன் தேடி அலையும் வாழ்க்கை தன்னிலேயே இருக்கிறது என்பது தெரியவே இல்லை.

(இதயத்தின் இரகசியம்)

☆

வாழ்க்கை என்பது தன் காதலரின் கண்ணீரிலே குளிக்கும் ஓர் பெண்மணி; தன்னால் பலியானவர்களின் இரத்தத்திலே குளிக்கின்றாள்; அவளுடைய ஆடைகள் எல்லாம் வெண்மையான நாட்கள்; அதன் கரைகள்

எல்லாம் சூரிய இரவின் இருட்டையே கொண்டுள்ளன. ஆணின் இதயத்தை காதலர்க்கு எடுத்துச் செல்கிறாள்; ஆனால் திருமணமானவுடன் தன்னையே மறுக்கின்றாள்.

*வாழ்க்கை ஓர் மாயமோகினி,*
*தன் அழகால் நம்மைக் கெடுக்கின்றாள்.*
*அவளின் கபட நாடகத்தை அறிந்தோர்,*
*அவளுடைய வசிய மந்திரத்தை விரட்டுவார்!*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

நான் எத்தனை முறை 'ஹார்வர்ட்' பல்கலைக் கழக பேராசிரியர்களுடன் பேசி இருக்கின்றேன்; இருந்தாலும் நான் 'அல்அசார்' கல்லூரிப் பேராசிரியர் ஒருவருடன் பேசுவது போல் உணர்கின்றேன். எத்தனை முறை நான் பாஸ்டன் நகரின் மாதர்களுடன் உரையாடி இருக் கின்றேன்? அவர்கள் பேச்செல்லாம் எனக்கு சிரியாவில் ஒரு வயதான, சாதாரண, ஒன்றும் அறியாத பெண்ணுடன் பேசும் சங்கதிகளாகவே கேட்டிருக்கின்றேன். வாழ்க்கை ஒன்றே! வாழ்க்கை லெபனான் நாட்டு கிராமங்களிலே எப்படி வெளிப்படையாக தெள்ளத் தெளிய காணப்படுகிறதோ அப்படியே பாஸ்டன், நியூயார்க், சான்பிரான்சிஸ்கோ முதலிய நகரங்களிலும் வெளிப்படுகிறது.

*(ஜிப்ரானின் உருவகக் கதைகள்)*

☆

## LIGHT - ஒளி - வெளிச்சம் - விளக்கு

உண்மையான ஒளி மனிதனின் உள்ளிருந்து தோன்றி ஒளி விடுகிறது; இதயத்தின் இரகசியங்களை ஆத்மாவிற்கு வெளிப் படுத்துகிறது; ஆத்மாவிற்கு இன்பத்தைக் கொடுத்து வாழ்க்கையிலே திருப்தியை, நிறைவை உண்டாக்குகிறது.

*(ஆத்மாவின் புரட்சி)*

☆

## LIMITATION - வரையறை - எல்லை - வரம்பு

*எவன் ஒருவனுக்கு இதயத்திலும் சிந்தனையிலும் வரம்பு உள்ளதோ அவன் வாழ்க்கையிலே எல்லைக் குட்பட்ட காதலை நாடுகின்றான். பலமற்ற பார்வை யுள்ளவனால் தன்பாதையில் ஓர் அடிக்கு மேல் பார்க்க முடிவதில்லை; தன் தோள்களை ஓய்வு கொள்ள வைத்திருக்கும் சுவருக்கு மேல் ஓர் அடி கூட உயரே காண முடிவதில்லை.*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

## LONGING - ஏக்கம் - பேரவா - ஆசை

*மனிதனின் மனோதிடத்தில் ஓர் பேராவலின் சக்தி உள்ளது; அது நம்மிலே உள்ள பனிப்படலத்தை சூரியனுக்கு நேரே திருப்புகின்றது.*

*(ஜிப்ரானின் கண்ணாடி)*

☆

## LOVE - காதல் - அன்பு - ஆசை - விருப்பம்

*கடவுளின் மிகப் பெரிய வெகுமதி மனிதனுக்கு கொடுக்கப்பட்ட காதலிக்கும் சக்தி. யாரை காதலிக்கின்றோமோ அவர்களிடமிருந்து ஒருபோதும் எடுத்துக்கொள்ள முடியாது.*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

*காதல் ஆத்மாவில் மட்டுமே வாழ்கிறது, உடம்பில் அல்ல; மதுவைப்போல் நம்மில் சிறந்ததை உணர்வூட்டுகின்றது. தெய்விகக் காதலின் வெகுமதியை வரவேற்கிறது.*

*(ஜிப்ரானின் ஊர்வலம்)*

☆

*மனிதனால் துன்பமும் துயரமும் அளிக்கும் பிரிவுத் துன்பத்தை அனுபவித்தால் அன்றி, காதலின் செல்வங்களை அடைய முடியாது. கசப்பான பொறுமையும், நம்பிக்கையற்றத் துன்பங்களையும் அனுபவித்தால்தான் காதலின் மேன்மையை உணர முடியும்.*

*(களிப்பும் கண்ணீரும்)*

☆

*நேற்று நான் கோயிலின் வாயிற்படியில் நின்று கொண்டு கோயிலுக்கு வருவோர் போவோரையெல்லாம் காதலின் மேன்மை, மகத்துவம், மாயை, மர்மம், பரம இரகசியம் எல்லாம் என்ன என்று வினவினேன்.*

*ஓர் வயதான, மெலிந்த, இளைத்த, நலிந்த, கவலை தோய்ந்த முகத்துடனிருந்த வயதான கிழவன் பெருமூச்சு விட்டு சொன்னான். ''முதல் மனிதனால் நம் மேல் வைக்கப்பட்ட இயற்கையான பலவீனமே காதல்.''*

*ஓர் ஆண்மைமிக்க தைரியமான இளைஞன் கூறினான்: ''காதல் நம்மை இறந்த காலத்தோடும் நிகழ்காலத்தோடும் வருங்காலத்தோடும் இணைக்கும் அரிய சக்தி.'' ஓர் கவலை தோய்ந்த முகத்துடன் தேம்பி அழுதவாறே பெண்மணி புகன்றாள் : ''காதல் என்பது ஓர் உயிர்க் கொல்லியின் நஞ்சு; அதை நமக்கு கரிய கட்டுவீரியன் பாம்புகள், நரகம் எனும் குகைகளிலிருந்து ஊர்ந்து வந்து கடித்து நஞ்சை நம்முள் புகுத்தி விடுகிறது.*

*''இந்த நஞ்சு, பனித்துளி போல் மிகவும் தூய்மையாய் புதியதாய் இருப்பதால் நம்முடைய தாகத்தால் தவிக்கும் ஆத்மா ஆசையுடன் குடிக்கின்றது; குடித்தவுடன் முதல் முறை போதையில் மயங்கி நோயுற்று, மிகவும் மெதுவாக மரணத்தை அணைக்கின்றோம்.''*

*பிறகு ஓர் அழகான ரோஜா நிறக் கன்னங்களையுடைய இளமங்கை சிரித்துக் கொண்டே சொன்னாள்: ''காதல் என்பது உதய கால கன்னிப் பெண் தரும் திராட்சை ரசம்;*

பலமுள்ள ஆத்மாக்களை அது வலுவடையச் செய்கிறது; பின்பு மேலே மேலே உயரச் செய்து நட்சத்திரங்களையே தொட்டு விடச் செய்கிறது''

ஓர் கறுப்பு அங்கி அணிந்து, தாடி தொங்க, கோபத்துடன் ஓர் மனிதன் கூறினான்: ''காதல் என் கண்மூடித்தனமான அறியாமை. அதைக் கொண்டு இளைஞர்கள் ஆரம்பித்து, கடைசியாக முடித்துக் கொள்கிறார்கள்.''

வேறொருவன் சிரித்துக்கொண்டே சொன்னான்: ''காதல் என்பது ஒரு தெய்விக ஞானம்; இதுவே மனிதனையும் கடவுளையும் காண்பதற்கு சக்தி அளிக்கிறது.'' பின்பு ஒரு குருடன் தன் கைக்கோலால் வழியைத் தேடிக் கொண்டே சொன்னான்: ''காதல் என்பது ஓர் கண்ணுக்குத் தெரியாத பனிப்படலம்; வாழ்வின் இரகசியத்தை நம் ஆத்மா அறிய முடியாதபடி மறைத்து வைக்கிறது. இதயம் மலைகளுக்கு இடையே பயந்து நடுங்கிக் கொண்டிருக்கும் பேய் பூதம் பிசாசுகளான ஆசை, விருப்பம் ஏக்கத்தை மட்டும் பார்க்கிறது; ஒலிகளற்ற பள்ளத்தாக்கிலிருந்து வெளியாகும் அழுகுரலின் எதிரொலிகளை மட்டும் கேட்கிறது.''

மிக மெலிந்த பழைமையான மனிதன் தன் இரு கால்களையும் கிழிந்த கந்தைகளைப் போல் இழுத்துக் கொண்டே நடுங்கும் குரலிலே கூறினான்:

''காதல் என்பது புதை குழியின், ஒலியற்ற அமைதியான சவக்குழியின் உள்ளே ஓய்வு கொள்ளும் உடம்பு; அழிவற்ற, முடிவில்லாத, நிலைத்திருத்தலின் ஆழத்திலே உறங்கும் சாந்தமான அமைதியான ஆத்மாதான் காதல்.''

ஓர் ஐந்து வயது குழந்தை சிரித்துக்கொண்டே சொல்லிற்கு: ''காதல் என்பது என் தாயும் தந்தையும், யாருக்குமே காதல் என்பது என்ன என்று தெரியாது என்

அம்மா, அப்பா இருவரைத் தவிர.''

இப்படியாக எல்லோரும் தங்களின் நம்பிக்கை, விரக்தி இவற்றின் உருவமாக காதலை விவரித்தனர்; ஆனால் காதல் மட்டும் எப்போதும் போல் விளங்காத புதிராகவே இருந்தது.

(சிந்தனைகளும் தியானமும்)

☆

யார் காதலைத் தேர்ந்தெடுத்து அதன் பின்னே செல்ல வில்லையோ அவர்களுக்கு காதல் கூவி அழைக்கும் போது கேட்கவே கேட்காது!

காதல் என்னும் மலர் ஒன்றுதான் இந்த உலகில் பருவ மாறுதல்கள் எதைப் பற்றியும் கருதாமல் வளர்ந்து மலரும் மலர்.

(முறிந்த சிறகுகள்)

☆

இந்த உலகிலேயே உள்ள ஒரே சுதந்திரம் காதல்தான். ஏனெனில் காதல் ஒன்றுதான் நம் உள்ளுணர்வை மிக மிக மேலே உயர்த்துகிறது. மனித சமுதாயத்தின் சட்டங்களோ, இயற்கையின் நியதிகளோ அற்புதங்களோ காதலின் பாதையை, அதன் ஓட்டத்தை, மாற்ற முடிவதில்லை.

(முறிந்த சிறகுகள்)

☆

காதல் சாதாரண பணிவு எனும் ஆடை உடுத்து நம் அருகேயே நடந்து செல்கிறது; நாம் பயத்தால் அதைக் கண்டு ஓடிவிடுகின்றோம்; இருட்டில் ஒளிந்து கொள்கிறோம்; இல்லையேல் அதைப் பின் தொடர்ந்து சென்று அதன் பெயரைச் சொல்லி தீமையைச் செய்து கெடுக்கின்றோம்.

(ஆசானின் ஞான மொழி)

☆

இளைஞரின் விழிப்புணர்ச்சிக்கும் கபடமற்ற தன்மைக்கும் இடையே வரும் காதல், உரிமையுடன் சொந்தம் கொண்டாடி அடைவதிலே திருப்தியுறுகிறது; அணைப்பிலே வளருகிறது. ஆனால் ஆகாயத்தின் மடியிலே பிறந்து வளரும் காதல் இரவின் இரகசியத்துடன் இறங்கி வந்து உலகில் எதிலுமே திருப்தி அடைவதில்லை; ஆனால் அது அழிவற்றத் தன்மையிலும் முடிவில்லாத சொர்க்கத்திலும் திருப்தி அடையும். காதல், கடவுளைத் தவிர மற்ற எதற்கு முன்பும் பயபக்தியுடன் நிற்பதில்லை.

(முறிந்த சிறகுகள்)

☆

மனித இனம் காதலின் குதிரை ஊர்வலத்தை நன்றியற்ற சலன இயக்க படுக்கைக்கு அழைத்துச் செல்லுமானால், அப்போது காதல் உறுதியாக இருக்க மறுக்கும். காதல் ஒரு மிக அழகான பறவை; அது கைப்பற்றப்படுவதற்கு கெஞ்சுகிறது; ஆனால் காயம்பட மறுக்கிறது!

(ஜிப்ரானின் களஞ்சியம்)

☆

காதலைத் தேடி அலையும்போது அது எலும்புக்கும் தசைக்கும் இடையே ஒரு நோய்; அதை இளைஞர் அனுபவிக்கும் போதுதான் நோய் செல்வத்தைக் கொடுக்கும், மற்றும் துயரமான அறிவையும் கொடுக்கும்.

(ஜிப்ரானின் களஞ்சியம்)

☆

இருட்டு, மரங்களையும் மலர்களையும் நம் கண்களுக்குத் தெரியாமல் மறைத்துவிடலாம்; ஆனால் ஆத்மாவிலிருந்து காதலை மறைக்க முடியாது.

(ஜிப்ரானின் கடிதங்கள்)

☆

## LUST - காமம் - துராசை - சிற்றின்ப இச்சை

*அழகு, தன் அரியாசனத்தில் புகழ், பெருமை, கௌரவம் இவற்றால் ஆன சிம்மாசனத்தில் அமர்ந்து கொண்டு நமக்கு தன் பேரழகை வெளிப்படுத்துகிறது; ஆனால் நாம் அவ்வழகை காமத்தின் பெயரால் அணுகுகின்றோம்; அதன் தூய்மையெனும் மகுடத்தைப் பறிக்கின்றோம்; அவளின் ஆடை ஆபரணங் களையும் நம் தீயச் செயல்களால் கெடுத்து நாற்றமடையச் செய்கின்றோம்.*

*(ஆசானின் ஞான மொழி)*

# M

## MADNESS - பைத்தியம்

*பைத்தியக்காரத்தனம்தான் சுயநலமின்மைக்கு முதல் படி. பைத்தியமாகி தெளிந்த புத்தி எனும் திரைக்குப் பின் என்ன இருக்கின்றதென்று சொல்லுங்கள்? வாழ்க்கையின் நோக்கமே நம்மை இரகசியங்களுக்கு நெருக்கமாக அழைத்துச் செல்வதே; அதற்கு ஒரே வழி, பைத்தியக்காரத்தனம்தான்.*

*(ஜிப்ரானின் கடிதங்கள்)*

☆

## MAIDEN - கன்னிப்பெண்

*அன்பை விட தூய்மையானதும், ஆத்மாவிற்கு ஆறுதல் அளிப்பதும் கன்னிப் பெண்ணின் இதயத்திலே மறைந்து கிடக்கும் அன்பன்றி வேறில்லை; அவள் திடீரென்று விழித்தெழுந்து சொர்க்கத்தின் இனிய கீதம் அவள் ஆத்மாவை நிரப்புகின்றது; அக்கீதம் அவள் பகல்பொழுதையெல்லாம் கவிஞனின் கனவு போல மாற்றுகிறது; இரவை, வருமுன் கூறுகின்றது, குறி சொல்லுவது போல மாற்றுகிறது.*

*(ஆத்மாவின் புரட்சி)*

☆

## MANKIND - மனித இனம்

*நான் மனித இனத்தைக் காதலிக்கின்றேன்! நான் மூன்று மனித சமுதாயத்தையும் சமமாக நேசிக்கின்றேன்... வாழ்க்கையை நிந்திப்பவன், வாழ்க்கையை ஆசீர்வதிப்பவன், வாழ்க்கையில் தியானம் செய்து துதிப்பவன்! நிந்திப்பவனை அவன் துரதிர்ஷ்டத்தை எண்ணி, வாழ்த்துபவனை அவன் தாராள குணத்தை நினைத்து, துதிப்பவனை அவன் அமைதியும் ஞானத்தையும் போற்றியே இம் மூவரையும், காதலிக்கின்றேன்!*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

## MARRIAGE - திருமணம்

*திருமணம் என்பது இரு தெய்விக உயிர்களின் சேர்க்கை, கலப்பு, கூடுதல் ஆகும்; இதனால் உலகில் மூன்றாம் உயிர் தோன்றுகிறது. திருமணம் என்பது இரண்டு ஆத்மாக்களின் மிகவும் இறுக்கமான, வலிவான காதலால் இணைவது; அதனால் தனித்தனியே வாழும் வாழ்க்கை அகற்றப்படுகிறது, அழிக்கப்படுகிறது. இந்த மிக உயர்ந்த இணைப்பால், சேர்க்கையால் இரண்டு ஆத்மாக்கள் ஒன்றாக இணைந்து ஐக்கியமாகி ஒன்றுபடுகிறது. பெண் எனும் சங்கிலியில் திருமணம் ஓர் வளையம்; அதன் ஆரம்பம் ஓர் பார்வையால் தொடங்கி, நிலைத்த முடிவில்லாத இன்பத்தில் முடிகிறது. திருமணம் மிகவும் தூய்மையான மழை; இது அப்பழுக்கற்ற ஆகாயத்திலிருந்து வீழ்ந்து தெய்விக இயற்கை வயலை வளப்படுத்தி, வாழ்விக்கின்றது.*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

## MERCHANT - வணிகர்

*நீயோர் வியாபாரியா? மக்களின் தேவையிலிருந்து பலன் பெறும் வியாபாரியா? எல்லாப் பொருள்களையும் சேமித்து பதுக்கி வைத்து தக்க தருணத்திலே அளவற்ற விலைக்கு விற்று பொருள் சேர்க்கும் வியாபாரியா? அப்படியானால் கடவுளால் மன்னிக்க முடியாத குற்றவாளி. உன்னுடைய வீடு ஓர் அரண்மனையாக இருந்தாலும் அது ஓர் சிறைச்சாலையே!*

*நீ ஓர் உண்மையான நாணயமான வியாபாரியா? விவசாயி களும், நெசவாளிகளும் உன்னிடம் தங்கள் பொருள்களைக் கொடுத்து அதற்கேற்ற பணத்தைப் பெற்றுச் செல்கிறார்களா? நீ வாங்குபவர்களுக்கும் விற்பவருக்கும் இடையே இருந்து இருவருக்கும் லாபத்தை நேரிய நாணயமான வழியிலே அடைய உதவுகின்றாயா? அப்படியானால் நீ ஓர் நியாயமும் நேர்மையும் உள்ள மனிதன். உன்னைப் புகழ்ந்தாலும் இகழ்ந்தாலும் பரவாயில்லை; கவலையில்லை.*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

## MERCY - கருணை - தயை - இரக்கம்

*தயையும் இரக்கமும் கொண்டிராதே, ஆனால் நியாயமாய் இரு; ஏனெனில் குற்றவாளிகளின் மேல் தான் தயையும் கருணையும் காட்டப்படும்; நிரபராதிக்குத் தேவை நீதியும் நியாயமும்தான்!*

*(ஆத்மாவின் புரட்சி)*

☆

## MERRIMENT - இன்பக்கேளிக்கை - களியாட்டம்

*வாழ்க்கை என்பது இன்பக் கேளிக்கை மட்டுமல்ல; வாழ்க்கை என்பது மன உறுதியும் விருப்பமுமே!*

*(ஆத்மாவின் கண்ணாடி)*

☆

## MIDDLE EAST - மத்திய கிழக்கு

இன்று மத்திய கிழக்கு நாடுகளில் இரண்டு சவால் விட்டு போட்டியிடும் சிந்தனைகள் உள்ளன, அவை பழைமை, புதுமை.

பழைமையான எண்ணங்களும் கோட்பாடுகளும் அவை மிகவும் பலமற்று, ஓய்ந்து விட்டதால் மறைந்து அழிந்து விடும். மத்திய கிழக்கு நாடுகளில் உறக்கத்தைத் துரத்தி விழிப் புணர்ச்சியை உண்டாக்கும் உணர்வு தோன்றியுள்ளது. இந்த விழிப்புணர்ச்சி கட்டாயம் வெற்றி பெறும். ஏன் எனில் இதற்கு சூரியனே தலைவன்; காலை உதயமே இதன் படை.

மத்திய கிழக்கு நாடுகளின் வானவெளியிலே ஒரு புத்துணர்வு தோன்றியுள்ளது; அது வளர்ந்து விரிவடைகின்றது; அது எல்லா உணர்ச்சியுள்ள அறிவு மிக்க ஆத்மாக்களையும் அடைந்து விழுங்கி விடுகிறது. கம்பீரமான இதயங்களைக் கவர்ந்து ஊடுருவி அனுதாபமும் இரக்கமும் உண்டாக்குகிறது.

மத்திய கிழக்கு நாடுகளில் இன்று இரண்டு ஆட்சியாளர்கள் உள்ளனர்; ஒருவர் முடிவு எடுத்து, உத்தரவிட்டு கீழ்படிகின்றனர்; ஆனால் அவர்கள் மரணத்தின் இலக்கிலே உள்ளனர்.

ஆனால் மற்றொருவர் மௌனமாக சட்ட ஒழுங்கிற்குக் கீழ்படிந்து அமைதியாக நீதியை எதிர் நோக்கியுள்ளனர்; அவர் களுக்கு தங்கள் பெரும் சக்தி பற்றி தெரியும்; வலிமை மிக்க பலவான்கள்; அவர்களுக்கு வாழ்க்கையில் நம்பிக்கை உள்ளது; அவர்களின் விதியிலே நம்பிக்கையுடன் இருக்கிறார்கள்.

(ஆத்மாவின் கண்ணாடி)

☆

## MIMIC - பிறர் போல் நடித்து விகடம் செய்வோன்

*எவன் ஒருவன் தனக்கே புரியாததை திரும்பத் திரும்ப சொல்கிறானோ அவன் புத்தகப் பொதி சுமக்கும் கழுதையை விட மேலானவனில்லை !*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

## MODERN GENERATION - இக்காலத் தலைமுறை

*இந்த விசித்திர சந்ததி விழிப்பதற்கும் தூக்கத்திற்கும் இடையே வாழ்கிறது. அது தன் கைகளிலே இறந்தகால மண்ணையும் வருங்கால விதைகளையும் வைத்துள்ளது.*

☆

## MODERN POETRY - புதுக் கவிதை

*ஓ கவிஞர்களின் ஆத்மாவே ! அழிவற்ற சொர்க்கத்திலிருந்து எங்களைக் கண்காணிக்கும் ஆத்மாவே! நீங்கள் உங்கள் எண்ண முத்துக்களால் அழகு படுத்திய பலிபீடத்திற்குப் போகின்றோம்; உங்கள் ஆத்மா நவமணிகளால் அவற்றைச் சிங்காரித்தீர்கள்; இன்று நாங்கள் இரும்பின் கணகணவெனும் சப்தத்தால் அமுக்கப்பட்டு, தொழிற்சாலைகளின் பேரிரைச்சலால் செவிடாக்கப்படுகின்றோம். ஆகவேதான் எங்கள் கவிதைகள் சரக்கு ரயில் வண்டி போல் கனத்து இருக்கின்றன; நீராவி என்ஜினின் கூவல் போல் வெறுப்புண்டாக்குகின்றன!*

*ஓ உண்மைக் கவிஞர்களே! எங்களை மன்னியுங்கள். நாங்கள் இந்த நவநாகரிக புதிய உலகைச் சேர்ந்தவர்கள்; இங்கே இப்போது மக்கள் உலகத்தின் பொதி வண்டிகளின் பின்னே ஓடுகின்றார்கள்; இன்று கவிதைகளும் ஒரு கடைச்சரக்காக மாறிவிட்டதே! அது அழிவற்ற ஞானத்தின் மூச்சாக வெளியாக வில்லையே!*

*(எண்ணங்களும் தியானங்களும்)*

☆

## MODERN WOMAN - நவீனப் பெண்

நவீன கால நாகரிகம் பெண்மணிகளை கொஞ்சம் அறிவு பெற்றவர்களாக ஆக்கியுள்ளது; ஆனால் அவர்களின் துன்பங் களை அதிகமாக்கி உள்ளது; ஏன் தெரியுமா? ஆண்களின் பேராசையும் துராசையுமே அதற்குக் காரணம். நேற்றைய பெண்மணி ஒரு மகிழ்ச்சியுள்ள மனைவி; ஆனால் இன்றைய நாகரிக நங்கை ஓர் பரிதாபகரமான, துர்பாக்கிய வீட்டு எஜமானி; கடந்த காலத்திலே அவள் வெளிச்சத்திலே கண்களை மூடிக் கொண்டு நடந்தாள்;

ஆனால் இன்று அவள் கண்களைத் திறந்து கொண்டு இருட்டிலே நடக்கின்றாள். அவள் தன் அறியாமையிலே அழகாகக் காட்சி அளித்தாள்; தன் எளிமையிலே கற்பும், நல்லொழுக்கமும், நற்குணமும் கொண்டிருந்தாள்; தன் பல மின்மையிலே வலிமை பெற்றிருந்தாள். இன்று இந்த நாகரிகநங்கை தன் புத்திக்கூர்மையால் சாமர்த்தியத்தால் அவலட்சணமாய் குரூபியாய் மாறிவிட்டாள்; இதயமற்றவளாய், நுனிப்புல் மேய்பவளாய் இந்த நவீன அறிவால் மாறிவிட்டாள். அழகும், அறிவும், கற்பும், நல்லொழுக்கமும், எளிமையும் நாணமுமம. உடலின் வலிமையின்மையும், ஆத்மாவின் பலமும் பெண்மணி களிலே ஒன்றாக இணையும் காலம் என்று வருமோ?

(முறிந்த சிறகுகள்)

☆

## MODESTY - நாணம் - அடக்கம் - பணிவு

உண்மையைப் பேசுவதில் அடக்கமாக இருப்பது, வெளி வேஷம், கபடநாடகம், பாசாங்கு ஆகும்.

(எண்ணங்களும் தியானங்களும்)

☆

## MONEY - பணம்

*பணம் ! உண்மையற்ற காதலின் உற்பத்தியிடம்; பொய்யான வெளிச்சம், அதிர்ஷ்டம் இவற்றின் ஊற்று; நஞ்சு கலந்த தண்ணீரின் கிணறு; வயதான காலத்தின் விரக்தி, நம்பிக்கை யின்மை!*

*(களிப்பும் கண்ணீரும்)*

☆

பணம் ஓர் தந்தி இசைக் கருவி போன்றது; எவனொருவனுக்கு இந்தக் கருவியை இசைக்கத் தெரியாதோ அவன் இதன் முரண்பட்ட கர்ண கடூரமான இசையையே கேட்க நேரிடும். பணம் காதல் போன்றது. அதை வைத்திருப்பவனை நிதானமாக, பெரும் நோய் உபாதையுடன் கொல்லும்; பணத்தை தன்னுடன் வாழும் மக்களுக்குச் செலவு செய்பவனை என்றும் வாழ வைக்கும்.

*(களிப்பும் கண்ணீரும்)*

☆

## MOTHER - தாய் – அன்னை – அம்மா

*தாய்தான் இந்த உலகத்தில் எல்லாம்; நம் துயரத்திலே துன்பத்திலே அவளே நம் ஆறுதல், தேறுதல். தாய்தான் நம் துரதிர்ஷ்டத்திலே ஓர் நம்பிக்கை ஒளி ; நம் பலமின்மையிலே அவள் நம் முழுபலம்; காதல், அன்பு, கருணை, இரக்கம், அனுதாபம், மன்னிப்பு, பிழை பொறுத்தல் அனைத்திற்கும் உற்பத்தியாகுமிடம், ஊற்று தாய்தான்! எவனொருவன் தாயை இழக்கின்றானோ அவன் ஓர் தூய்மையான ஆத்மாவை இழந்து விடுகின்றான். தொடர்ந்து நிலையாக பாதுகாக்கும், ஆசீர்வதிக்கும் தெய்வத்தை இழந்து விடுகின்றான்!*

*இயற்கையில் உள்ள எல்லாம் (மரம், செடி, கொடி, ஊர்வன, நடப்பன, பறப்பன, மலை, நதி, கடல்,*

ஆகாயம், காற்று, தீ, நீர், நிலம்) தாய்மையையே பேசுகின்றன!

சூரியன்தான் பூமியின் தாய்; ஒளி, வெப்பம் இரண்டையும் தந்து பூமியை உயிரூட்டுகின்றது! பூமியைத் தாலாட்டி, சமுத்திர அலைகளில் பாடல்களைப் பாடி, அருவிகளின் கீதத்தை இசைத்து, பறவைகளின் பண்களைப் பாடி, பூமியைத் தூங்க வைக்கும் வரை சூரியன் இந்த பிரபஞ்சத்தை விட்டு விலகிச் செல்வதில்லை!

இந்த பூமிதான் மரங்களுக்கும் மலர்களுக்கும் தாய்! பூமியே அவற்றை உற்பத்தி செய்து வளர்த்த, தாயின் பாலை உண்பதை மறக்கச் செய்கிறது. மரமும் மலர்களும் பெரிய பழங்களுக்கும் விதைகளுக்கும் அன்புமிக்க தாயாகிறது. இந்த உலகில் உயிர் வாழும் எல்லாவற்றிற்கும் அழிவற்ற உணர்வாய், அழகும் காதலும் நிரம்பி வழியும் தாயாக நிலைத்திருக்கின்றது!

(முறிந்த சிறகுகள்)

☆

MUSIC - இசை – சங்கீதம் – இனிய ஒலி

கடவுள் மனிதனைப் படைத்தபோத, இசையை அவனுக்கு மற்ற மொழிகளிலிருந்து மாறுபட்ட ஒரு மொழியாகக் கொடுத்தார். ஆதிமனிதன் இசையின் புகழைப் பாலையிலும், காடு வனங்களிலும், சோலையிலும் பாடினான். இசை, அரசர்களின் இதயத்தை வசீகரித்து அவரின் சிம்மாசனங்களை ஈர்த்தது!

(ஆசானின் ஞான மொழி)

☆

தேம்பி அழும் குழலோசை தெய்விகமானது. ஆம் சிவந்த திராட்சை ரசம் நிறைந்த பொன் கிண்ணத்தைவிட மிகவும் மேலானது!

(ஜிப்ரானின் பொற்களஞ்சியம்)

☆

கடவுள் சங்கீதத்தை எல்லா மக்களுக்கும் ஒரு பொது மொழியாகத் தோற்றுவித்தார். கவிஞர்களுக்கும், பண் புனைவோர்க்கும், கட்டடக் கலைஞர்களுக்கும் உயிரும் உணர்வும் ஊட்டுகிறது! பழைய நூல்களிலே பொதிந்து கிடக்கும் இரகசியங்களின் பொருளை உணர்வதற்கு நம் ஆத்மாக்களை வசீகரித்து, தன் வயப்படுத்தி தேட வைக்கின்றது!

*(உரையாடல், கடிதங்கள்)*

N

## NATURE - இயற்கை

*வனங்களிலே ஜாதிமத பேதமில்லை! விகாரமான கொடூரமான நம்பிக்கையின்மை இல்லை! பாடும் பறவைகள், உண்மை, பேரின்பம், துயரம் எதையும் உறுதியாக்கி உணர்த்துவ தில்லை !*

*(ஜிப்ரானின் ஊர்வலம்)*

☆

*நான் சித்திரம் வரையத் தொடங்கும்போது எனக்கு நானே சொல்லிக் கொள்வதில்லை, ''கலீல் ஜிப்ரானே உற்று நோக்கு! உனக்கு முன்னே கலையை அடைய பல மார்க்கங்கள் உள்ளன. பழைய தரமான சிறந்த முறை, நவீன புதிய முறை, சங்கீதக் குறி முறை, மனதில் சுலபமாக பதியத்தக்க, ஏற்றுக் கொள்ளக் கூடிய முறை, மற்றும் பலப்பல பாணிகள் உள்ளன. அவற்றில் ஒரு முறையை நீ தேர்ந்தெடுத்துக்கொள்'' நான் இவற்றில் எதையும் செய்யவில்லை.*

*நான் என் பேனாவையும், தூரிகையையும் கொண்டு என் எண்ணங்களின் சங்கேதக் குறிகளை, என் மன*

உத்வேக உணர்ச்சிகளை, வரைந்தேன்; உருவம் கொடுத்தேன். சிலர் என்ன நினைக்கின்றார்கள் தெரியுமா? கலைத் தொழில் இயற்கையை பாவனை செய்து பின்பற்றுவது, போலியாக உருவாக்குவது என்று நினைக்கின்றனர். ஆனால் இயற்கை மிக மிக உயர்ந்தது; வெற்றிகரமாக அதைப் போல் பாவனை செய்து உருவாக்குவது மிகவும் நுண்ணியது, நுட்பமானது, மென்மை யானது.

இயற்கையின் பொங்கி வழியும் உற்பத்திகளை, அற்புதங் களை, அதிசயங்களை, தோற்றங்களை எந்த ஓவியனும் ஒரு சிறு அளவு கூட பிரதிபலிக்கவோ, உண்டாக்கவோ முடியாது. இயற்கையைப் போலியாக வரைவதிலே, உருவாக்குவதிலே என்ன லாபம் இருக்கிறது? இயற்கையை யாரும் எப்போதும் அணுகலாம், அடையலாம், பார்க்கலாம், கேட்கலாம், ரசிக்கலாம், ருசிக்கலாம். இயற்கை ஓர் திறந்த அழகி; சிறந்த அழகி! கலையின் முக்கிய நோக்கமே இயற்கையைத் தெரிந்து, அறிந்து, புரிந்து கொள்வதுதான்; புரியாதவர்களுக்கு இயற்கையின் பொருளை புரிய வைப்பதுதான்.

மரத்தின் ஆத்மாவை வெளியிடுவதுதான் முக்கியமே யன்றி மரத்தைப் போன்ற ஒன்றை உண்டாக்கிக் காட்டுவதல்ல! கடலின் மனசாட்சியை வெளிப் படுத்துவதுதான் அவசியமே அன்றி நுரையுடன் பொங்கி வரும் அலைகளையோ, நீல வண்ண நீரையோ சித்திரித்துக்காட்டுவதல்ல. கலையின் மனப்பாங்கு, தூது மிகவும் நெருங்கிப் பழக்கமான, நன்றாகத் தெரிந்த ஒன்றை, தெரியாத, புரியாத, பழக்கமாகாத ஒன்றிலிருந்து வெளிப் படுத்துவதுதான்.

வீட்டிற்கும் தொழில் செய்யும் அலுவலகத்திற்கும் இடையே நடந்து செல்ல, ஒளி உமிழும் கைப்பந்தம்தான்

இந்த சூரியன் என்றும், பூமியை வெப்பமாக வைத்துக்கொள்ள உதவும் அனல் அடுப்புதான் இச்சூரியன் என்றும், பார்க்கும் கண்களைப் பெற்ற மக்களுக்காகப் பரிதாபப்படுகின்றேன். அக்கண்கள் ஒரு மைல் தூரத்தில் உள்ள கொசுவையும் பார்க்க வல்லதாயினும் அவை குருட்டுக் கண்களே! குயிலின் இன்னிசையிலே பலப்பல ராகங்களைக் கேட்பதற்கும் மேலாக எதையும் கேட்க முடியாத காதுகளைக் காண பரிதாபப்படுகின்றேன். அவை செவிடான காதுகளே, அவற்றால் பூமிக்கு அடியிலே சிக்கலான சுற்று வழியில் ஊர்ந்து செல்லும் எறும்புகளின் நகரும் ஒலியைக் கேட்கும் திறமை பெற்றிருந்தாலும் அவை செவிட்டுக் காதுகளே!

*(ஜிப்ரானின் உருவகக் கதைகள்)*

☆

இயற்கை வரவேற்கும் விரிந்த கைகளுடன் நம்மை அழைக்கின்றது; அதன் அழகை ரசிக்கும்படி வேண்டுகின்றது; ஆனால் நாம் அதன் மௌனத்தைக் கண்டு, பயந்து நடுங்கி, கூட்டம் நிறைந்த நகரங்களுக்கு ஓடிவிடுகின்றோம்! அங்கே போய் கொடிய ஓநாயின் விரட்டலுக்குப் பயந்து ஓடும் ஆட்டு மந்தைபோல், ஓடி ஒதுங்கி நடுங்கிக் குவிகின்றோம்.

*(ஆசானின் ஞான மொழி)*

☆

இயற்கைக்கு, எல்லோரும் உயிர் வாழ்வோரே! எல்லோரும் சுதந்திரமானவர்களே! மண்ணுலகப் புகழ் எல்லாம் மனிதனின் வெறும் கனவே! பாறைகளிடையே பாய்ந்தோடும் அருவியிலே, கொப்பளிக்கும் நீர்க்குமிழியாய் மறைந்து விடும்.

*(ஜிப்ரானின் பொற்களஞ்சியம்)*

☆

## NATURE AND MAN - இயற்கையும் மனிதனும்

*இறந்து போன குழந்தைக்காகத் தேம்பி அழும் விதவையைப் போல் ஓலமிடும் அருவியிடம் கேட்டேன். ''தூய்மையான நீரோடையே! நீ ஏன் அழுது புலம்புகின்றாய்?''*

*நீரோடை கூறிற்று, ''ஏன் தெரியுமா? என்னை நகரத்திற்குப் போக நிர்ப்பந்திக்கிறார்கள். அங்கே மனிதன் என்னை மதுவாக மாற்றி விடுகிறான்; சாக்கடையாக்கி நாற வைக்கிறான்; என் தூய்மையைக் கெடுத்து அசுத்தப்படுத்தி, என் நல்ல தன்மையை மாற்றி மாசுபடச் செய்கின்றான்.''*

*பறவைகள் அழுது ஓலமிடுவதைக் கேட்டு நான் அவற்றை வினவினேன், ''அழகான பறவைகளே! ஏன் அழுகின்றீர்கள்?'' ஓர் பறவை பறந்தோடி வந்து ஓர் கிளையிலே அமர்ந்து சொல்லிற்று.*

*''ஆதாமின் புதல்வர்கள் விரைவில் இவ்வயல்வெளிக்கு வந்து, தங்களின் கொல்லும் போர்க்கருவிகளால் எங்கள் மேல் போர் தொடுத்து எங்களைத் தங்கள் ஜென்ம விரோதிகளைக் கொல்வது போல் கொலை செய்யப் போகின்றார்கள்! இப்போது நாங்கள் ஒருவருக்கொருவர் பிரியா விடை பெற்றுக் கொள்கின்றோம். எங்களில் யார் யார் மனிதனின் கொலைக் களத்திலிருந்து தப்பிப் பிழைப்போமோ தெரியவில்லை! நாங்கள் எங்கெங்கு சென்றாலும் அங்கெல்லாம் மரணம் எங்களைத் துரத்தி வருகின்றது!''*

*மலைச் சிகரங்களுக்குப் பின்னிருந்து சூரியன் வெளிப்பட்டு உயர்ந்தான்; மரங்களின் உச்சிகளெல்லாம் பொன்னால் மணிமகுடம் சூட்டப்பட்டன. இந்த இயற்கையின் பேரழகைப் பார்த்து எனக்கு நானே*

கேட்டுக் கொண்டேன், "இயற்கை எழிலுடன் கட்டிக் காப்பதை மனிதன் ஏன் அழித்து ஒழிக்க வேண்டும்?"

(ஆசானின் ஞான மொழி)

☆

## NEIGHBOUR - அண்டைவீட்டார்- அடுத்த வீட்டார் - அருகில் உள்ளோர்

உன் துன்பங்களையும் துயரங்களையும் அண்டை வீட்டா ரிடம் சொல்லும்போது உன் இதயத்தின் ஒரு பகுதியை அவர்களிடம் அளிக்கின்றாய். அவரிடம் உயர்ந்த ஆத்மா இருப்பின் உனக்கு நன்றி சொல்வார். அவருடைய ஆத்மா சிறியதானால் உன்னை எள்ளி நகைத்து சிறுமைப்படுத்துவார்.

(ஆத்மாவின் கண்ணாடி)

☆

## NEWYORK - நியூயார்க்

எவனொருவன் நியூயார்க் நகரில் வசிக்க விரும்பு கின்றானோ அவன் தேன் தோய்ந்த உறையிலே உள்ள கூரிய வீரவாள். யார், நேரத்தைக் கழிக்க விரும்புகிறார்களோ, அவர் களை இப்போர் துரத்தி ஓட்டிவிடும். தேன் அவர்களின் பசியைப் போக்கி, திருப்தியடையச் செய்யும்.

(ஜிப்ரானின் சுயதரிசனம்)

☆

## NIGHTINGALE - இன்னிசைப் பறவை - குயில் போல்

இன்னிசைப் பறவை கூண்டிலே கூடு கட்டுவதில்லை; ஏனெனில் அதன் குஞ்சுகள் கூண்டுக் கைதிகளாய் வாழ நேரிடும் இல்லையா?

(முறிந்த சிறகுகள்)

# O

## OLD AGE - கிழப்பருவம் - முதுமை

வயதான கிழவன் தன் இளமைப் பருவத்தின் இன்ப நினைவுகளிலே வாழ நினைப்பான்; தன் சொந்த ஊரை விட்டு வந்தவன் எப்படி தன் தாய் நாட்டின் பிறந்த மண்ணை அடைய விரும்புவானோ அப்படியே! கிழவன் தன் கடந்த கால கதைகளைச் சொல்லியே மகிழ்ச்சி அடைவான்! ஒரு கவிஞன் மிகவும் சிறந்த பாடல்களைப் பாடிக் கொண்டிருப்பதிலே களிப்படைவான். அவன் உணர்ச்சியாலும் உயிராலும் கடந்த காலத்திலே வாழ்ந்து கொண்டிருப்பான்! ஏனெனில் நிகழ் காலம் மிக வேகமாக கழிந்து கொண்டிருக்க, வருங்காலம் தன் சமாதியை நோக்கி நடைபோடும், நெருங்கும் நாட்களாய் அமைந்திருப்பதால்.

(முறிந்த சிறகுகள்)

☆

தன் இளமையிலே இறந்து போன நாட்களை எண்ணி நஞ்சு தோய சபித்துக் கொண்டிருக்கும் மனிதர்களே மிக

அதிகம். தன் சிங்கக் குட்டிகளை இழந்து விட்ட பெண் சிங்கம் எப்படி கோபக் கனல் கக்குமோ அப்படியே தங்களின் வீணாகக் கழிந்த இளமைக் காலத்தைச் சபித்துக்கொண்டிருப்பார்கள்!

பல ஆண் இளைஞர்களும் மங்கைகளும் வருங்கால கசப்பான நினைவுகளை மூடி மறைக்க தங்கள் இதயத்தை உபயோகிப்பார்கள். அவர்கள் தங்கள் அறியாமையால் இன்பத்தி லிருந்து விலகி தனிமையெனும் நஞ்சு தோய்ந்த அம்புகளால் தங்களையே காயப்படுத்திக் கொள்வார்கள்!

கிழப்பருவம் பூமியின் பனிக்கட்டி போன்றது; உண்மையும் ஒளியும் சேர்ந்து கீழ் உள்ள இளமை எனும் விதைகளுக்கு வெப்பமளித்து பாதுகாக்க வேண்டும். அப்போதே வயதானவர் களின் பணி முழுமையடையும்.

(ஜிப்ரானின் பொற்களஞ்சியம்)

☆

## ONENESS - ஒன்றாகி இணைதல்

உற்பத்தியில், தோற்றத்தில் இருக்கும் எல்லாம் உன் னிடத்திலே நிலைத்திருக்கிறது. உன்னில் உள்ள எல்லாம் தோற்றத்தில் பொதிந்திருக்கின்றது. உனக்கும் உன்னை நெருங்கிய பொருள்களுக்கும் எல்லையோ வரப்போ ஏதும் இல்லை. உனக்கும் வெகுதூரத்தில் உள்ள பொருளுக்கும் இடையே தூரம் என்பதே இல்லை. தாழ்ந்த பொருள்களும், மிக உயர்ந்த பொருள்களும், சிறியவற்றிலிருந்து பெரியவை வரையில் எல்லாம் உன்னிலேயே சமபொருளாய் பொதிந்திருக் கிறது. ஒரே ஓர் அணுவில் உலகத்தில் உள்ள மூலப் பொருள்கள் எல்லாம் இருக்கின்றன; மனத்திலே ஏற்படும் ஒரு சலனம் (இடப்பெயர்ச்சி) உயிர் வாழ்தலின் சட்டத்தில் எல்லாம்

*இந்த இடப்பெயர்ச்சி காணப்படுகின்றது. ஒரே ஒரு துளி தண்ணீரில் முடிவற்ற மகா சமுத்திரங்களின் இரகசியங்கள் எல்லாம் தெரிகின்றன. உன்னுடைய ஒரு தோற்றத்தில், பார்வையில் உன்னுடைய உயிர் வாழ்தலின் எல்லா தோற்றங்களும் தெரிகின்றன.*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

## OPPORTUNITY - வாய்ப்பு - தக்க சமயம் - சந்தர்ப்பம்

*நல்ல வாய்ப்பை, சந்தர்ப்பத்தை அது கடந்து போனபின் பிடிக்க முயற்சி செய்பவன், அது தன்னை நெருங்கி வருவதைக் கண்டும், அதைச் சந்திக்க முற்படாதவன் போலத்தான்.*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

## OPPRESSION - கொடுமைப்படுத்துதல்

*போர் பறை சாற்றிக் கொண்டு வெற்றி கொண்டவரை வரவேற்கும் நாட்டின் சோகத்தையும் துக்கத்தையும் சொல்ல முடியாது. உறங்கும்போது அடக்கு முறையை வெறுத்தும், விழித்திருக்கும்போது அடக்கு முறையை ஆதரித்தும், வாழும் நாட்டின் சோகம் சொல்லத்தரமன்று. சவப் பெட்டிக்குப் பின்னே இருந்து பெருங்குரலில் கூவியும், சுடுகாட்டிலே மட்டும் கர்வம் கொண்டும் இருக்கும் நாட்டின் சோகம் அளப்பரிது; தூக்கு மரத்திலே கழுத்தைக் கட்டி தொங்கும் வரை புரட்சி செய்யாத நாட்டின் சோகம், துக்கம் துயரம் எல்லாம் மிகப்பெரிது.*

*(ஆத்மாவின் கண்ணாடி)*

☆

## ORIENT - கிழக்கு நாடுகள்

கிழக்கு நாட்டு மக்கள், எப்போதும் தேனைச் சேகரிக்கும் தேனீக்கள் போல், எழுத்தாளர்கள் இருக்க வேண்டுமென உரிமையுடன் கோருகின்றனர். மற்ற எல்லா உணவு வகை களையும்விட தேனை மிகவும் விரும்பி அளவுக்கதிகமாய் உண்டு சாப்பாட்டு ராமன்களாகின்றனர்.

கிழக்கு நாட்டு மக்கள் கவிஞர்கள் எல்லாம் அரசன் முன்னே சாம்பிராணி, கற்பூரம், வாசனைப் பொருள்களைப் போல் எரித்துக் கொள்ள வேண்டும் என்று விரும்புகின்றனர். கிழக்கு வானவெளியெல்லாம் வாசனைப் பொருளின் புகை மண்டலம் சூழ்ந்து நோய்வாய்ப்பட்டு விட்டது; இருந்தாலும் இந்த கிழக்கு நாட்டு மக்களுக்கு இது போதுமானதாக இல்லை...

கிழக்கு நாடுகளிலே சமூக வைத்தியர்கள் கணக்கில் அடங்கார்; அவர்களின் நோயாளிகள் பலரும் குணமடையாமல் இருக்கின்றனர்; ஆனால் நோய்கள் குணமடைந்து விட்ட வர்களாய் தோன்றுகின்றனர்; ஏன் எனில் அவர்கள் சமூக போதைப் பொருள்களின் தாக்கத்தின் கீழ் மயங்கியுள்ளனர். ஆனால் இந்த மயக்க மருந்துகள் புறத்தில் காணப்படும் புண்ணை மட்டும் மறைத்து விடுகிறது.

இந்த மயக்கத்திலிருந்து பலவிதமான தத்துவங்கள் உற்பத்தி ஆகின்றன. அவற்றில் முக்கியமானது கிழக்கு நாடுகளின் தத்துவம், 'எல்லாம் கடவுள் செயல்' எனும் விதிக்கு அடிமையாகி விடும் சித்தாந்தமே.

(சிந்தனைகளும் தியானமும்)

# P

PACIFISM - அமைதி - சாந்தி - சமாதானம்

"நிலைத்தது உயிர் வாழ்வதில் உள்ள காதல், மக்களின் உண்மையான உரிமைகளைக் கவர்ந்து கொள்ள உதவுகின்றது" என்று கூறும் தலைவர்களை நம்பாதே! விழிப்பாயிரு ! நான் உங்களுக்கு இதைத்தான் கூறுவேன்; எல்லோருடைய உரிமைகளையும் பாதுகாப்பதே மனிதனின் கடமைகளிலேயே மிகவும் அழகானது, கம்பீரமானது, புகழ் பெற்றது. நான் மற்றவர்களைக் கொன்று குவிப்பதால்தான் என் உயிர் வாழ்தல் நிலைக்கும் என்றால் எனக்கு மரணமே மிகவும் கௌரவமானது, கீர்த்தி அளிப்பது, மேன்மையானது.

என் கௌரவத்தைப் பாதுகாக்க என்னைக் கொல்வதற்கு யாரும் இல்லை என்று தெரியுமானால், நான் என் கைகளாலே என் உயிரைப் போக்கிக்கொள்ளத் தயங்க மாட்டேன். முடிவில்லாத, அழிவற்ற, சொர்க்கம் வரும் முன் நான் அதற்காக என் உயிரையே விடத் தயார்.

(களிப்பும் கண்ணீரும்)

☆

## PAIN - வலி - நோய்

*கல்லின் தோலையும் உரித்தெடுக்கும் கண்ணுக்குத் தெரியாத பெரும் சக்திதான் நோய்; அதுவே உடலில் உள்ள உயிர்ச்சத்தை உறிஞ்சி விடும் சக்தி மிக்கது.*

*(ஜிப்ரானின் உருவகக் கதைகள்)*

☆

## PAST AND FUTURE - கடந்த காலமும் எதிர்காலமும் - கழிந்தனவும் வருவனவும்

*கழிந்த ஆண்டுகளின் குழந்தைகள் அவர்கள் தங்களுக்காகவே தோற்றுவித்த சகாப்தத்தின் மரண ஊர்வலத்திலே நடந்து கொண்டிருக்கின்றார்கள். அவர்கள் நைந்து போன கயிற்றால் இழுக்கின்றார்கள். அது விரைவில் அறுந்து போகும்; அவர்கள் மறுக்கப்பட்ட பாதாளத்திலே வீழ்வார்கள். அவர்கள் மிகவும் வலிவற்ற அடித்தளத்தின்மேல் கட்டப்பட்ட வீட்டிலே வாழ்கின்றார்கள்; பெருங்காற்று சுழன்று வீசப் போகின்றது; வீடு சமாதியாக மாறப்போகிறது. அவர்களுடைய சிந்தனைகள், பழமொழிகள், போராட்டங்கள், புத்தகங்கள், புனைந்த கதை, கவிதைகள், இலக்கியங்கள் எல்லாம் மிகவும் மெலிந்த சங்கிலிகளாய் உள்ளன; மிகப் பெரிய பாரத்தை இழுக்க இயலாமல் அறுபட்டு விடும்.*

*ஆனால் நாளைய குழந்தைகள் வாழ்க்கையால் அழைக்கப்படுகின்றனர்; அவர்கள் நிமிர்ந்த தலையும், பீடுநடையும் கொண்டு வெற்றி வீரராய் வலம் வருவார்கள்; அவர்களே புதிய எல்லைகளின் உதயம்; அவர்களின் கண்களை எந்தப் புகையும் மறைக்காது; சங்கிலியின் கண கண எனும் ஒலி அவர்களின் குரலோசையை அமுக்கிவிடாது. அவர்கள் எண்ணிக்கையில் குறைந்தவர்களே; ஆனால் கோதுமை*

மணிக்கும் வைக்கோல் போருக்கும் உள்ள பேதத்தை ஒத்தது. மற்றவர்களுக்கு அவர்களைத் தெரியாது; ஆனால் அவர்கள் ஒருவரையொருவர் நன்கு அறிவர்; அவர்கள் மலையுச்சியைப் போன்றவர்கள்; அதன் மேலிருந்து ஒருவரையொருவர் பார்க்கவும் கேட்கவும் கூடும்; அவர்கள் கன்றுக்குட்டிகள் அல்லர், அவை தாம் ஒன்றையொன்று கேட்கவும் பார்க்கவும் கூடும்; கடவுளின் கைகளிலிருந்து தூவப் பெற்ற விதைகள் போன்றவர்கள்; வயலின் மண்ணிலிருந்து மேல் தோலை உரித்துக் கொண்டு வெளிப்படும் முளைகளும் அதன் இலைகளும் சூரியனை வரவேற்கின்றன. அது ஓர் மிகப் பெரிய பரந்த மரமாக வளரும்; அதன் வேர்கள் பூமியின் இதயத்திலே ஊன்றி நிலைக்க அதன் கிளைகள் வானவெளியெலாம் படர்ந்து விரியும்.

*(ஆத்மாவின் கண்ணாடி)*

☆

## PATRIOT - தேசபக்தன்

நீ தனக்குத் தானே சொல்லிக்கொள்ளும் அரசியல்வாதியா ''நான் என் நாட்டை என் சொந்த நலனுக்கே உபயோகிப்பேன்!'' என்கின்றாயா? அப்படியானால் நீ ஓர் புல்லுருவி, மற்றவர் சதையைத் தின்று கொழுப்பவன். நீ ஓர் தன்னலமற்ற தேசபக்தனா? உன்னுடைய மனசாட்சிக்கே இரகசியமாக சொல்லிக்கொள்கின்றாயா? ''நான் ஓர் உண்மை ஊழியனாக என் நாட்டிற்குத் தொண்டு செய்யவே விரும்புகிறேன்'' என்கின்றாயா? அப்படியானால் நீ ஓர் பாலையிலே உள்ள சோலைவனம்; எப்போதும் வழிப்போக்கரின் தாகத்தைத் தீர்க்க காத்திருக்கும் நீர் ஊற்று.

*(ஆசானின் ஞான மொழி)*

## PATRIOTISM - தேசபக்தி-நாட்டுப்பற்று

*காதலர்களைப் பிரித்து, பெண்களை விதவை களாக்கி, குழந்தைகளை அநாதைகளாக்கும் இந்த கடமை என்ன? சிறிய சில்லறை தகராறுகளுக்காக போர் தொடுத்து, சாம்ராஜ்யங்களை அழித்து விடும் நாட்டுப்பற்று, தேச பக்தியா இது?*

*ஓர் உயிரை உயர்வாக மதிக்கும்போது எந்தக் காரணமும் சாதாரணமனதே! சாதாரண கிராமங்களில் வாழும் மக்கள் அரசகுமாரர்களின் போலி அந்தஸ்திற்கும் கௌரவத்திற்கும் முன்னே ஒன்றுமற்றவர்களாக, கடமையின் பேராலும், வலிமைமிக்க இக் கொடுங் கோலர்களால் பலியிடப்படு கின்றனரே! கடமை மக்களின் அமைதியைக் கலைக்குமானால், தேசபக்தி நாட்டின் மக்களுடைய தெய்விக வாழ்க்கையைக் கெடுக்குமானால், நாட்டிற்கு நாடு தேசபக்தி என்று கூறி போரிடுமானால் அப்படிப்பட்ட தேச பக்தியும் கடமையும் அழிந்து ஒழியட்டும்.*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

*நான் என் அழகான தேசத்தைத் தீவிரமாக விரும்புகின்றேன்; என் நாட்டு மக்களின் துன்பங்களையும் அல்லல்களையும் நினைத்து அவர்களுக்காக உள்ளம் உருகி நேசிக்கின்றேன். என் மக்கள் தேசபக்தியின் பேரால் கொலை செய்ய முற்படுவார்க ளானால், கொள்ளையடிக்க தூண்டப்படுவார்களானால், என் அண்டை நாட்டின் மேல் படை எடுத்து அக்கிரமமாக போர் தொடுப்பார்களானால் மானிட வர்க்கத்தின் மேல் அக்ரமம், அநியாயம் அநாகரிகமாக நடந்து கொள்வார்களானால், நான் என் நாட்டையும் மக்களையும் வெறுத்து ஒதுக்குவேன்.*

*(களிப்பும் கண்ணீரும்)*

☆

## PEACE - அமைதி - சமாதானம்

கொடுங்கோலர்களின் வயிற்றை நிரப்ப, வலியோர்களின் உணவிற்காக, வயல் வெளியிலே உழைத்து உழைத்து துரதிர்ஷ்டத்தால் அடிமையாகி வறியும் மக்கள் வாழும் இந்த பூமியிலே அமைதியும் சமாதானமும் நிலவுமா? அமைதி உலகிலே தவழ்ந்து, ஆதரவற்ற அநாதைகளைத் தன் கோரப் பிடியிலிருந்து விடுவித்து வாழ வைக்குமா?

அமைதி, சமாதானம் என்பதுதான் என்ன? குளிரால் நடுநடுங்கும் பொத்தல் குடிசையிலே பசியால் வாடும் தாயின் தனத்தை உறிஞ்சும் குழந்தைகளின் கண்விழிகளிலே அமைதி வாழ்கின்றதா? பன்றிக் கொட்டிலிலே பசியால் பதுங்கிவாழும் பரிதாபத்துக்கு உரிய மனிதன், கடினமான கல் படுக்கையில் பசியோடு தூங்குகின்றானே அவனுக்கு உணவளிக்காமல் தங்களின் கொழுத்த பன்றிகளுக்கு ஊட்டி வளர்க்கும் பாதிரிகளும், பிட்சுகளும், சாமியார்களும், முல்லாக்களும் உள்ள இந்த உலகிலா அமைதி வாழ்கின்றது?

(இதயத்தின் இரகசியம்)

☆

## PERPETUITY - நிரந்தரம் - சாசுவதம் - மறையாமை

சூரியன் ஒளிக்கதிர்களை அள்ளி வீசும் மலைகளையும் சமவெளிகளையும் உற்று நோக்கும் மனிதனைக் காண மிகவும் துக்கமும் துயரமும் அடைகின்றேன்; சிறிய மெலிந்த கிளைகளினூடே ஊர்ந்து இசையெழுப்பும் தென்றலின் இனிய கீதத்தைக் கேட்பவனும், மல்லிகையையும் மற்ற மலர்களையும் நுகர்ந்து அதன் இனிய மணத்தை அனுபவித்து விட்டு தனக்குத் தானே சொல்கின்றான், ''இல்லை... நான்

பார்க்கும் கேட்கும் எல்லாம் மறைந்துவிடும். நான் அறியும் உணரும் இவை எல்லாம் அழிந்துவிடும்'' இந்த தாழ்ந்த ஆத்மா, பார்த்து, உணர்ந்து, இன்ப துன்பங்களை அனுபவித்து, பயபக்தியுடன் ரசித்து முடிந்தபின் இவையெல்லாம் மாயை. நிலைத்திருக்காது, அழிந்துவிடும் என்று மறுக்கின்றானே, இவன்தான் காற்றிலே கலந்து மறைந்துவிடும் நீராவி, பனித்துளி போன்றவன்! இவன் இருளைத் தேடி அலைந்து உண்மையைக் கண்டு தன் முதுகைத் திருப்பிக் கொள்கிறான். நிலைத்து வாழுகின்ற இயற்கையை வீணாக, விரக்தியாக, மறுப்பவன் இவன்; கடவுளினால் படைக்கப்பட்ட எல்லாப் பொருள்களையும் மற்றவர்கள் அனுபவிக்க வொட்டாமல் மறுக்கின்றான்.

(இதயத்தின் இரகசியம்)

☆

## PERPLEXITY -மனக்கலக்கம்

மனக்கலக்கம், பதற்றம், குழப்பம் இவையே அறிவின் ஆரம்பம். ஞானத்தின் உற்பத்தியிடம்.

(ஆசானின் ஞான மொழி)

☆

## PERSECUTION - தொந்தரவு - தொல்லை - வருத்துதல் - துன்புறுத்தல் - சிலுவையில் ஏற்றல்

எவன் ஒருவன் உண்மையாய் உறுதியுடன் நிற்கின்றானோ அவனை தொந்தரவு, தொல்லை, துன்புறுத்தல், ஏதும் கெடுதல் செய்யாது. சாக்ரடீஸ் தன் உடம்பையே கம்பீரமாக அர்ப்பணிக்க வில்லையா? உண்மையை உரைத்ததற்காகவே 'பால்'

*கல்லடிபடவில்லையா? நாம் கீழ்படியாதபோது கொல்வதும், காட்டிக்கொடுக்கும்போது துன்புறுத்துவதும் நம் உள் மனமே! (மனசாட்சியே)*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

## PHILOSOPHY - தத்துவம் - வேதாந்தம்

*மனிதனின் அந்தரங்க ஆசைகளால் அவன் ஆத்மா உந்தப்பட்டு தெரிந்த ஒன்றிலிருந்து தெரியாத ஒன்றையும், தத்துவம், வேதாந்தம், தெய்விகம் என்ற அனைத்தையும் அடைய ஓடுகின்றது.*

*(ஆத்மாவின் கண்ணாடி)*

☆

## PILGIRIMAGE - தெய்விக யாத்திரை

*இலை உதிர் காலம் தெளிக்கும் ஒவ்வொரு விதையும் பூமியின் இத்யத்திலே ஆழமாக ஊன்றப்பட்டு ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமாக தோலைப் பிளந்து கொண்டு முளை விடுகின்றன; பிறகு இலைகள் தளிர்த்து, பூத்து, காய்த்து, பழுத்து உற்பத்தி வளர்ச்சி அடைகின்றன. இது எந்தவிதமான உருவத்தில் மாற்றமடைந்தாலும் இந்த தாவரங்கள் ஒரு தெய்விக யாத்திரையை மேற்கொள்ள வேண்டும்; அதுதான் சூரியனின் முன்னே நிமிர்ந்து நிற்கும் ஒரு பெரிய செயல்.*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

## POET - கவிஞன் - பாடகன் - பாவலன்

*ஓ கவிஞரே ! நீங்கள்தான் வாழ்க்கையின் வாழ்க்கை! நீயே காலத்தின் கொடுமையையும் வெற்றி கொண்டீர்! ஓ கவிஞரே ! நீரே ஓர் நாள் இதய சாம்ராஜ்யத்தை ஆள்வீர்! உன்னுடைய ராஜ்யத்திற்கு எல்லையே இல்லை! ஓ கவிஞரே! உன் முட்களால் ஆன மணிமகுடத்தை*

பரிசோதி; அதிலே புகழ் மாலையின் மொட்டுகள் மறைக்கப்பட்டுள்ளன.

(களிப்பும் கண்ணீரும்)

☆

நீ வெறும் கூச்சலும், வெற்று வார்த்தைகளும் நிறைந்த வரட்டுக் கவிஞனா? அப்படியானால் நீயோர் கோமாளிதான், நீ சிரித்தால் மற்றவர் அழுவார்கள்; நீ அழுதால் மற்றவர் சிரிப்பார்கள்! அல்லது நீ ஓர் நன்கொடை பெற்ற ஆத்மாவா? கடவுள் உன் கைகளிலே ஒரு சொர்க்க இசைபாயும் ஆத்மாவை நேசமுடன் தடவிவிடும் இசைக் கருவியை அளித்துள்ளாரா? உன்னுடன் வாழும் மக்களை உயிர் வாழ்க்கைக்கு அருகே அணைத்து, வாழ்க்கையின் அழகை ரசிக்க வைக்கிறார். அப்படியானால் நீங்கள் எங்களுக்கு ஒளிகாட்டி வழிநடத்த வந்த ஒளிப்பிழம்பு; எங்கள் ஏங்கும் இதயத்தின் இனிய கீதம்; எங்கள் கனவிலே தோன்றி தெய்விகத்தை விளக்கும் களியாட்டம்.

(ஆசானின் ஞான மொழி)

☆

கவிஞர்கள் எப்போதும் மகிழ்ச்சியற்ற மக்களே! அவர்களுடைய சிந்தனைகள், உணர்ச்சிகள் மக்களை எந்த அளவிற்கு உயர்ந்து அடைந்தாலும், அவர்களுடைய வாழ்க்கை எப்போதும் கண்ணீர் பெருக்கால் மூடி மறைக்கப்பட்டே இருக்கும்.

(முறிந்த சிறகுகள்)

☆

POETRY - கவிதைகள் - பாடல்கள் - காவியம்

என் அன்பு மிக்க நண்பர்களே! கவிதைகள் என்பன அழகான சிரிப்பின் தெய்விக அவதாரம்! கண்ணீரை வற்ற

*வைக்கும் பெருமூச்சே கவிதைகள்! ஆத்மாவில் வசிக்கும் பேருணர்ச்சிதான் கவிதைகள்! அதன் உயிர்ச் சத்து ஆக உள்ளது இதயமே! அதன் போதை தரும் திராட்சை ரசம் அன்பு, காதல் ! மேற்கண்டபடி ஊற்றெடுக்காத தோற்றங்கள் எல்லாம் பொய்யான ஏசுநாதர்களே!*

*(சிந்தனைகளும் தியானமும்)*

☆

*ஹோமர், வர்ஜில், அல்மாரி, மில்டன், ஷேக்ஸ்பியர் முதலிய காவியக் கவிஞர்கள் எல்லாம் கவிதைகள், பணக்காரர்களின் கடிநாய்களாக மாறிவிடும் என்று தெரிந் திருந்தால், இப்படி நிகழும் இவ்வுலகத்தையே வெறுத்து ஒதுக்கி நழுவ விட்டிருப்பார்கள்!*

*(சிந்தனைகளும் தியானமும்)*

☆

## POOR - ஏழை - எளியோர்

*எல்லா ஏழைகளும் இகழப்படுவோரோ, வெறுக்கப் படுவோர்களோ இல்லை. உலகின் செல்வம் எல்லாம், ஒரு ரொட்டியிலும் மேலாடையிலுமே இருக்கின்றது.*

*(ஆத்மாவின் கண்ணாடி)*

☆

## POPULAR KNOWLEDGE - மக்கள் விரும்பும் அறிவு - பொது அறிவு

*இன்றைய மக்களின் அறிவு*
*வயல் மேல் மூடிய பனிப்படலம்!*
*சூரியனின் கதிரொளி விண்ணில் உயர*
*பனிப்படலம் கதிர்களிலே மறைந்துவிடும்!*

*(ஜிப்ரானின் ஊர்வலம்)*

☆

## POSITION - உத்தியோகம் - நிலை - இடம்

*உயர் பெருமை என்பது பெரிய பதவியிலே இல்லை! உயர் பெருமை, எவன் பதவியை மறுக்கின்றனோ அவனிடமே உயர்ந்துள்ளது!*

*(ஆத்மாவின் கண்ணாடி)*

☆

## POSSESSIVENESS - தனக்கே மிகை உரிமை

*வரையறுக்கப்பட்ட காதல், தன் காதலரை தனக்கே உரிமையுடைய சொந்தமாக்க வேண்டுகிறது! ஆனால் எல்லை இல்லா காதல் எதையும் தனக்கே என வேண்டுவதில்லை; நாடி அடைவதும் இல்லை!*

*(முறிந்த சிறகுகள்)*

☆

## POVERTY - ஏழ்மை - வறுமை

*என் உடன் வாழும் ஏழைகளே! ஏழ்மைதான் உணர்ச்சியின் கௌரவத்தை, மேன்மையைக் கொடுக்கும். செல்வம் அதன் தீமையை வெளிப்படுத்தும். துயரம் நம் துக்கத்தை மென்மையாக்கும். இன்பம் புண்பட்ட இதயத்தை குணப்படுத்தி ஆற்றும். ஏழ்மையும், துயரமும் ஒழிக்கப்படுமானால், மனிதனின் உணர்வுகள் வெறும் வெற்று கற்பலகைகளாய் பேராசையும், சுயநலமும் செதுக்கப்படாத, திறப்புவிழா பலகைக் கல் போன்றதாகி விடும்.*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

*என் அன்பான நண்பனே! உனக்கு மிகப்பெரும்*

இழிவையும் துர்பாக்கியத்தையும் அளிக்கும் இந்த ஏழ்மைதான், நீதியின் அறிவை வெளிப்படுத்தவும், வாழ்க்கையை உள்ளபடி புரிந்து கொள்ளவும், உதவுகின்றது என்பதை அறிந்தால் உன் ஏழ்மையை எண்ணி திருப்தி அடைவாய்!

நீதியின் அறிவு என்பது பணக்காரனுக்கு இந்த அறிவை அறிய பெரும் செல்வத்தைக் கணக்கிடுவதிலேயே மிகவும் சுறுசுறுப்பாய் இருக்கின்றான்.

வாழ்க்கையை தெரிந்து உணர்வது, பலமிக்கவனுக்கு பதவியையும், அதிகாரத்தையும் புகழையும் தேடி அலைந்து ஓடுவது. உண்மையின் நேரிய பாதையை அறிந்து அதன் வழி நடப்பதுதான்.

என் ஏழை நண்பனே! நீ மகிழ்ச்சிகொள். நீயே நீதியின் குரல், வாழ்க்கையின் புத்தகம். திருப்தி அடை, நீயே அறத்தின் ஆதியும் மூலமும் ஆக உள்ளாய். உன்னை ஆள்வோர்கட்கு; உன்னை வழி நடத்துபவர்க்கு நீயே கண்ணியத்தின் உயர்ந்த தூணாக இருக்கின்றாய்.

(ஆசானின் ஞான மொழி)

☆

## PRAISE - புகழ்ச்சி - போற்றுதல்

என் ஆத்மா எனக்கு போதனை செய்து புகன்றது; ''போற்றுதலுக்கும் புகழ்ச்சிக்கும் மயங்கி மகிழ்ந்து விடாதே! இகழ்ச்சியை எண்ணி நீ மனம் தளர்ந்து துயரப்படாதே!''

நான் என் காவியப் படைப்புகளின் மதிப்பை சந்தேகித்தேன். என் ஆத்மா எனக்கு அறிவுரை புகன்றது. இப்போது நான் உணருகின்றேன்; மரங்கள் வசந்தத்தில்

பூக்கின்றன; கோடையில் பழுக்கின்றன; அது யாருடைய போற்றுதலையும் புகழ்ச்சியையும் எதிர்பார்ப்பதில்லை; அம்மரங்கள் இலையுதிர் காலத்திலே தன் ஆடையான இலை களை உதிர்க்கின்றன; இகழ்ச்சிக்கு பயப்படாமல் குளிர் காலத்திலே நிர்வாணமாய் நிற்கின்றன!

(சிந்தனைகளும் தியானமும்)

☆

## PRAYER - பிரார்த்தனை - துதித்தல் - வணங்கல்

பிரார்த்தனை இதயத்தின் பாடல்; அதுவே கடவுளின் காதுகளில் கேட்கும்; அழுகையிலும் கூச்சலிலும் கலந் திருந்தாலும், ஆயிரம் மக்கள் கூடி பேரிரைச்சலிட்டாலும் கடவுளின் காதுகளில் ஒலிக்கும்.

(ஜிப்ரானின் கடிதங்கள்)

☆

## PREACHING - போதனை செய்தல் - உபதேசித்தல்

துரதிர்ஷ்டம் பிடித்தவர்களின் இதயத்திற்கு அதிர்ஷ்டக் காரனின் உபதேசம் எவ்வளவு வேதனையும் வலியும் கொடுக்கும்! பலம் பொருந்தியவன் பலமற்றவனுக்கு புத்திமதி கூறுபவனாய் நிற்பது எவ்வளவு கொடூரமானது?

(இதயத்தின் இரகசியம்)

☆

## PRIEST - போதகர் - பாதிரியார் - புரோகிதர்

உன்னுடைய செல்வத்தை ஏசுவின் சுவிசேஷத்திற்கு ஈடுகட்ட, பணயம் வைக்க முற்படும் பாதிரியார்,

புரோகிதர், ஒரு பெரிய நம்பிக்கைத்துரோகி! சிலுவையை அணிந்து அதையே உன் இரத்த நாளங்களை வெட்டும் வாளாக உபயோகிக்கும் கபடன், வெளிவேஷக்காரன், புரோகிதர்; ஆட்டின் தோல் போர்த்திய இரத்த வெறி கொண்ட ஓநாய்தான் இப்போதகர். பலிபீடத்தை விட உணவு உண்ணும் மேஜைக்கு மரியாதை தரும் சாப்பாட்டு ராமன். பொன்னிற்காக தூரதேசங்களுக்கும் போய், தேடி அலைந்து சேர்த்து குவிக்கும் பொன் பசி பிடித்த பாதிரிகள். கைம்பெண்கள், அநாதைகளின் மார்பைத் திருடும் போதகர்கள்; அவன் ஓர் விந்தையான மனிதன்; கழுகின் மூக்கும், புலியின் கூரிய நகப்பிடியும், புலிக்குறத்தியின் பற்களும், கட்டுவிரியன் பாம்பின் தோலும் கொண்ட விசித்திர மனிதன்.

பாதிரியிடமுள்ள புத்தகங்களைப் பிடுங்குங்கள்; அவன் அங்கிகளைக் கிழித்தெறியுங்கள்; தாடியைப் பிய்த்தெறியுங்கள்; நீங்கள் விரும்புவதையெல்லாம் அவனிடம் செய்யுங்கள்; பிறகு ஓர் ஓநாயை அவன் கையிலே வையுங்கள். உடனே உன் பாபங்களையெல்லாம் சிரித்துக்கொண்டே மன்னித்து விடுவார்!

(ஆத்மாவின் புரட்சி)

☆

ஒரு கிராமவாசி பாதிரியாரின் தெய்விகப் புனிதத்தைச் சந்தேகித்தால் அவனிடம் சொல்வார்கள். ''அவருடைய போதனைகளை மட்டும் கேளுங்கள்; அவருடைய கெட்ட நடவடிக்கைகளையும் குறைபாடுகளையும் ஒதுக்கி விடுங்கள்'' என்று.

(சிந்தனைகளும் தியானமும்)

☆

## PROGRESS - முன்னேற்றம் - வளர்ச்சி

*பழைமையை வெறுமனே அதிகரித்து உயர்த்துவது மட்டும் முன்னேற்றமாகி விடாது. வருங்காலத்தை நோக்கி வேகமாக முன்னேறுவதுதான் வளர்ச்சியாகும்.*

*(ஆத்மாவின் கண்ணாடி)*

☆

## PROPHET - தீர்க்கதரிசி

*தீர்க்கதரிசி வருங்கால சிந்தனைகளைஆடையாக உடுத்தி வந்தார். பழைய ஆடையுடன் மக்களிடையே மறைந்து நின்றார். கொண்டு வந்த அன்பளிப்புகளை யாராலும் காண முடிய வில்லை. இந்த வாழ்க்கைக்கே முன்பின் அறியாத அயலான்; இகழும் புகழும் அறியாத அந்நியன்; உண்மை ஒளிப்பந்தத்தை ஏந்தி நின்றார்; தீச்சுடர்களே அவரை விழுங்கிவிட்டன.*

*ஊர்வலம்)*

◉

# R

## REASON - விவேகம் - பகுத்தறிவு - சிந்தனா சக்தி

சிந்தனாசக்தி, விவேகம், பகுத்தறிவு உனக்கு ஒன்றைச் சொல்லும்போது அதைக் கேட்டு அதன்படி நடந்தால் நீ காப்பாற்றப்படுவாய். அதன் புத்திமதிகளை நீ கேட்பாயானால் அதுவே உனக்கு ஆயுதமாயும் அரணாயும் அமையும். கடவுள் அளித்தவற்றிலேயே உனக்குச் சிறந்த வழிகாட்டியாய் அமைந்துள்ளது பகுத்தறிவே! பகுத்தறிவை விட சிறந்த ஆயுதம் ஏதும் இல்லை. உன் உள்ளுணர்வுடன், மனசட்சியுடன் விவேகம் பேசும் போது அது ஆசைக்கு அணையாக அமைகின்றது! பகுத்தறிவு ஓர் மதிமந்திரி; நம்பிக்கையுள்ள வழிகாட்டி; அறிவுரை கூறும் ஞான ஆசிரியன்! பகுத்தறிவு இருளிலே ஒளிவீசும் விளக்கு; கோபம் இந்த ஒளியை விழுங்கும் இருள். எப்போதும் அறிவுடனிரு; கணநேர உணர்ச்சி வேகம் வழி காட்டியாக இருக்க வேண்டாம்; விவேகம் உனக்குத் துணையாகட்டும்.

*(ஆசானின் ஞான மொழி)*

## REBELLION - கலகம் - எதிர்ப்பு - மக்கள் புரட்சி

*கலகமற்ற வாழ்க்கை, வசந்தங்களற்ற பருவங்கள் போல; உரிமையற்ற கலகம், பாலைவனத்திலே தோன்றும் வசந்தம் போல. வாழ்க்கை, கலகம், உரிமை மூன்றும் ஒன்றில் அமைந்தது; இவற்றை யாரும் மாற்றவோ பிரிக்கவோ முடியாது.*

*(சிந்தனைகளும் தியானமும்)*

☆

*கடவுள் நமக்கு உயிர் மூச்சை அளித்தது எதற்காக? மரணத்தின் காலடிகளிலே சமர்ப்பணம் செய்யவா? நமக்கு சுதந்திரத்தைக் கொடுத்து அடிமைத்தனத்தின் நிழலாக மாற்றவா? எவன் ஒருவன் தன் ஆத்மாவின் அனல் பிழம்பை தன் கைகளாலேயே அணைத்து விடுகின்றானோ அவன் சொர்க்கத்தின் கண்களில் ஓர் நாத்திகன். ஏனெனில் சொர்க்கம் நம் உணர்வுகளில் தீக்கனலை மூட்டுகிறது! எவனொருவன் அடக்கு முறையையும் கொடுங்கோன்மையையும் எதிர்த்து போராடவில்லையோ அவன் தனக்கே அநியாயம் செய்து கொள்கிறான்.*

*(முறிந்த சிறகுகள்)*

☆

## REGRET - வருத்தம்

*கனன்று எரியும் நெருப்பருகே அமர்ந்து கொண்டு, அது அணையும் வரை காத்திருந்து, பிறகு வீணாக ஊதி ஊதி, செத்த சாம்பலுடன் போராடும் மனிதனாக இருக்காதே! நம்பிக்கையை இழக்காதே; விரக்திக்கு அடிபணியாதே; நடந்து போனதை எண்ணி நலியாதே. இழந்துபோனதை திரும்பப் பெற முடியாததற்கு அழுது கொண்டிருப்பது, மானிட ஜாதியின் பெரும் குறை, பலவீனம்.*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

## RELIGION - மதம் - சமயம்

*நாம் உலகத்தில் உள்ள எல்லா மதங்களையும், சமயங் களையும் அழித்து விட்டோமானால் நாம் எல்லோரும் ஒன்று கூடி மகிழ்ந்து ஒரே ஒரு நம்பிக்கையை மேற்கொண்டு உலக சகோதரத்துவம் என்னும் ஒரே மதமாக மானிட சமுதாயம் எனும் ஓர் அன்பின் கீழ் அமைதியாய் வாழலாம்.*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

*மதம் ஓர் பண்பட்டு உழுத விளைநிலம்,*
*ஆசையெனும் நீர்பாய்ச்சி பயிர் நட்டு*
*சொர்க்கத்திற்காக ஏங்கி ஏங்கி*
*நரகிற்கு அஞ்சி பயந்து வாழ்வதே மதம் !*
*ஐயோ ! மறுமலர்ச்சியில் கணக்கிட்டு,*
*தவறிற்கெல்லாம் வருத்தமடைந்து,*
*மேலான மோட்சத்தை அடைவதற்கோ!*
*தினப்படி வாழ்க்கையிலே சமயம்*
*ஓர் வியாபாரப் பொருளாய் விட்டதே!*
*ஒதுக்கி விட்டால் எட்டாமல் போய்விடுமோ!*
*பாதுகாத்தால் பலனளிக்குமா? இச்சமயம்.*

*(ஜிப்ரானின் ஊர்வலம்)*

☆

*மதம் மனிதனுக்கு ஓர் வயல்வெளி;*
*நம்பிக்கை நாற்றை நட்டு வைத்தான்,*
*நடுங்கும் அறியாமையால் வளர விட்டான்.*
*நரகத்தின் தீச்சுடர்க்கு பயந்து விட்டான்,*
*வலிமை மிக்க பணக்காரன் மின்னும்*

*பொன்மணியாய் ஆழ விதைத்து விட்டான்;*
*மதத்தை ஓர் வியாபாரமாய் மாற்றிவிட்டான்;*
*அதிலே மண்ணுலக நன்கொடைகளை*
*லாபக் கணக்கில் அடைய திட்டமிட்டான்!*
*அவன் இருதயமே தொலைந்து விட்டது;*
*அவை துடிதுடித்துக் கொண்டிருந்து பயனென்ன?*
*அந்த வைதிக விவசாயத்தின்*
*விளைபொருள் தான் என்ன அறிவீரோ!*
*சமவெளியில் விளைந்த உதவாத களைகள்தான்.*
*(ஜிப்ரானின் பொற்களஞ்சியம்)*

☆

## RELIGIOUS LEADER - மதத்தலைவர் - மடாதிபதி

*நீங்கள் ஓர் மதத்தின் தலைவரா? நம்பிக்கை மிக்க சாதாரண மனிதனின் எளிமை, நேர்மை, கபட மின்மையிலே அவன் உடம்பின் மேல் போர்த்த இரத்தச் சிவப்பான ஆடையை நெய்கின்றீரா? அவன் அன்பைக் கொண்டு, தலைக்கு பொன் மணிமுடியை செய்கின்றீரா? சனியின் வளமையிலே வாழ்ந்து கொண்டு, சனியனை வெறுப்பதை வாந்தி எடுக்கின்றீர்களா? அப்படியானால் நீங்கள் ஓர் நாத்திகர். நீங்கள் பகலெல்லாம் உண்ணா விரதமிருந்து இரவெல்லாம் ஆண்டவனைத் துதித் தாலும் ஒரு பயனும் இல்லை!*

*நீங்கள் நம்பிக்கையுள்ளவராய், மக்களின் நல்ல தன்மையிலே நாட்டு மக்கள் அனைவரின் நல்வாழ்வையும் முன்னேற்றத்தையும் உண்டாக்க முயன்று அடித்தளம் அமைக்கின்றீரா? புனிதமான ஜீவாத்மாவை அடைய எல்லோருடைய ஆத்மாவையும் முழுமையெனும் ஏணியாக்க முயல்கின்றீரா?*

*அப்படியானால் நீங்கள் உண்மையெனும் நந்தவனத்திலே பூக்கும் தாமரை பூக்கள்; மக்களின்மேல் உங்கள் மணம் வீசி மறையுமானாலும் பரவாயில்லை; காற்றிலே மறைந்தாலும் அது அழிவின்றி, நிலைத்து வாழும்.*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

## REPENTANCE - குற்றத்திற்கு வருந்துதல்

*சொர்க்கம் தன் குற்றத்திற்கு வருந்துவதில் இல்லை! சொர்க்கம் தூய்மையான உள்ளத்தில் உள்ளது!*

*(ஆத்மாவின் கண்ணாடி)*

☆

## RICHES - செல்வம்

*செல்வம் பணத்தில் மட்டும் இல்லை; எத்தனையோ நாடோடிகள் மனிதர்களில் எல்லாம் சிறந்த செல்வந்தர்!*

*(ஆத்மாவின் கண்ணாடி)*

☆

## RULER - ஆட்சியாளர் - அதிகாரி - அரசன்

*புலியின் சீற்றத்திற்கும், ஓநாய்களின் புன்னகைக்கும் இடையே ஆட்டு மந்தையே அழிந்து விடும்; ஆட்சியாளன் தான்தான் சட்டங்களுக்கே அரசன் என்று உரிமை கொண்டாடு கிறான்; மதகுருக்கள் தாங்களே கடவுளின் பிரதிநிதி என்று உறுமுகின்றனர்! இந்த மதக் குழுக்களுக்கும் அரசனுக்கும் இடையே மக்களின் உடம்புகளெல்லாம் அழிக்கப்பட்டு, ஆத்மாக்கள் கருகி ஒன்றும் அற்றதாய் மறைந்து விடுகின்றன.*

*(ஆத்மாவின் புரட்சி)*

◉

# S

## SANITY - விவேகம் - தெளிந்த நெஞ்சம்

கழுகுகள் என்றும், ஆச்சரியப்படுவதில்லை. ''இது காலத்தின் அதிசயம்'' என்று கூறுவதும் இல்லை. இயற்கையிலே நாமெல்லாம் இளைஞர்கள். விவேகத்தை நாம் விசித்திரமாய் கொண்டுள்ளோம்.

*(ஜிப்ரானின் ஊர்வலம்)*

☆

## SCIENCE - விஞ்ஞானம்

என்னைச் சுற்றிலும் குள்ளர்கள் சூழ்ந்துள்ளனர்; அவர்கள் ராட்சதர்கள் தோன்றுவதைக் காண்கின்றனர்; அந்தக் குள்ளர்கள் தவளைகளைப் போல் ஆடை அணிந்துள்ளனர். ''இந்த உலகம் மிருகத்தனமான காட்டுமிராண்டி வாழ்க்கைக்குத் திரும்பி விட்டது. விஞ்ஞானமும் கல்வியும் உற்பத்தி செய்து வளர்த்ததை எல்லாம் இந்த புதிய காட்டு மிராண்டிகள் அழித்து விட்டனர். இப்போது நாம் சரித்திர காலத்திற்கு முற்பட்ட குகைவாழ் மக்களாய் மாறிவிட்டோம். அவர்களிலிருந்து

நம்மை ஏதும் பிரித்துக் காட்டுவதில்லை; இப்போது நம்மை அழிக்கும் இயந்திரங்களும், கொலை செய்வதற்கு மிகவும் முன்னேற்ற மான கொலைக் கருவிகளையும் செய்முறைகளையும்தான் கற்றுக் கொண்டோம்.''

மேற்கண்டபடிதான் உலகத்தின் மனசாட்சியை அளந்து கூறுகின்றார்கள். அவர்கள் உலகின் உயிர் வாழ்வினங்களின் நிலைத்தத் தன்மையை, அவர் களுடைய சிறிய அளவு கோலைக் கொண்டே, தனி மனிதனின் வாழ்க்கை அளவை வைத்து அளக்கின்றனர். இந்த சூரியனே இவர்களுக்கு வெப்பம் அளிக்கவே இருப்பதாயும், இந்த சமுத்திரங்கள் எல்லாம் அவர் களின் கால்களைக் கழுவுவதற்காகவே படைக்கப்பட்டதாயும் நினைக்கின்றனர்.

(சிந்தனைகளும் தியானமும்)

☆

## SECRETS - இரகசியம் - மர்மம்

என் இதயம் உன்மேல் உள்ள காதலை இரகசியமாய் வைக்கிறது; உன்னைக் காண்பவர்களிடமிருந்து மறைத்து வைக்கிறது; உனக்கு நல்ல செல்வங்கள் செழிக்கட்டும். எவன் இரகசியங்களைக் கூறுகின்றானோ அவன் முட்டாள். மௌனமும் மர்மமும் காதல் வயப்பட்டவர்க்கு என்றுமே நன்மை பயக்கும்.

(ஆத்மாவின் கண்ணாடி)

☆

## SEED - விதைகள் - வித்து - மூலம்

உலகம் தோன்றியதிலிருந்து முதிர்ந்த பேரீச்சம்பழம் தன்னுள்ளே கொண்ட விதையின் இதயத்தே பேரீச்சை மரத்தின் இரகசியம் அடங்கியுள்ளது!

(ஜிப்ரானின் பொற்களஞ்சியம்)

☆

## SEGREGATION - பிரித்து வைத்தல் - விலக்கி வைத்தல் - ஒதுக்கி வைத்தல்

*கடவுள் மிகவும் நல்லவர்; அவர் பெயர்களையும் வார்த்தைகளையும் பிரித்து வைக்கவே மாட்டார்; கடவுளை அடைய பலவிதமான மத மார்க்கங்களைப் பின்பற்றுவோரை ஆசீர்வதிக்காமல் விடுவாரா? அப்படியானால் எந்த மனிதனும் கடவுளை வணங்கவே வேண்டாம்!*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

## SELF - தான் - தானே -தனக்கே

*கடவுள் மனிதனுக்கு நம்பும் சக்தியைக் கொடுத்துள்ளார்; நம்புவதை அடையும் வரை தொடர்ந்து முயற்சி செய்து பெற வேண்டும்; மறதி எனும் மேலாடை அவன் கண்களிலிருந்து எடுக்கப்பட வேண்டும்; அப்போதே அவன் கடைசியாக தன் சுய உருவைக் காண்பான்; எவன் ஒருவன் தன்னைத் தானே தெரிந்து கொள்கின்றானோ, அவனே வாழ்க்கையின் உண்மையை உள்ளபடி உணர்ந்தவனாவான். அப்போதே அவனுக்கு மானிட வர்க்க்தின் உண்மைகளும் உலகில் உள்ள எல்லாப் பொருள் களின் உண்மையையும் உணர முடியும்.*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

*யாரும் வசிக்காத வீட்டின் கதவுகளை வழிப்போக்கன் தட்டிப் பார்ப்பது வீண். மனிதன் பேசாத ஊமையாய் தன்னுள் இல்லாமைக்கும் தன்னைச் சூழ்ந்துள்ள உண்மை நிலைக்கும் இடையே நிற்கின்றான்; நாம் நமக்குள்ளேயே இருப்பதை வைத்துக் கொள்ளாவிட்டால் நம்மைச் சூழ்ந்துள்ள பொருள் களைப் பெற்று பயனடைய முடியாது.*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

## SELF EXPRESSION - தன்மொழி - தன்தோற்றம் - தன் வெளிப்பாடு

*ஒவ்வொரு முறையும் நாம் அழகை ஈர்க்கும் போதும் நாம் ஒரு படி அழகை நோக்கி முன்னேறுகிறோம் என்பது உண்மை யல்லவா? நாம் ஒவ்வொரு முறையும் உண்மையை எழுதும் போதும் நாம் அத்துடன் இணைந்து விடுகின்றோமா? அல்லது நாம் கவிஞர்கள், கலைஞர்கள், ஓவியர்கள் இவர்களின் வாய்க்கு பூட்டுபோட்டு, பேசவும், எழுதவும் தடை செய்கின்றோமா? தன்னுடைய மொழியும், தோற்றமும் மனித ஆத்மாவில் ஆழமாக இடம் பெற்றுவிடவில்லையா?*

*(ஜிப்ரானின் உருவகக் கதைகள்)*

☆

## SELF KNOWLEDGE - சுய அறிவு - ஆத்ம ஞானம்

*உன்னுடைய உண்மையான மதிப்பைத் தெரிந்துகொள். அப்போதே நீ அழியமாட்டாய். பகுத்தறிவே உன் ஒளி வெள்ளம்; உண்மையே உன் கலங்கரை விளக்கம். பகுத்தறிவே உன் வாழ்வின் ஊற்று. கடவுள் உனக்கு அறிவைக் கொடுத்திருக் கின்றான்; அதன் வெளிச்சத்தில் நீ அவரை வணங்கி வழிபடுவது மட்டும் அல்லாமல், உன் பலத்திலும் பலவீனத்திலும் உன்னை நீயே அறிந்து கொள்கின்றாய்.*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

## SENSES - அறிவு - ஞானம் - கருத்து- உணர்ச்சி

*கேள்வியே கேட்காமல் தங்களின் ஞானத்தை தங்களிடம் தெரியாமல் நிலைத்திருப்பதைக்*

காண்பவர்கள் எவ்வளவு பெரிய முட்டாள்கள்? ஆனால் அவர்களுடைய எல்லா அறிவிற்கும் அது நிலைத்திருப்பதை உணர்த்தும் வரை சந்தேகிப்பவர்கள் ஆகின்றார்கள். இதயத்தின் அறிவு நம்பிக்கையிலும், பார்த்து உணர்தல் கண்களின் உணர்விலும் இல்லையா? குயிலின் இனிமையான பாடல்களைக் கேட்டு, அது அவன் தலைக்கு மேலே கிளைகளின் ஊடே பறந்து திரிவதைப் பார்ப்பதும், ஆனால் தான் பார்த்ததும் கேட்டதும் நம்பாமல் அப்பறவையைக் கைகளால் பற்றினால்தான் நம்புவேன் என்பது எவ்வளவு குறுகிய அறிவு. அழகான ஒரு நடைமுறையைக் கனவு கண்டு, உண்மை உணர்ந்த பின்பும் அதை தன் மனத்திரையில் உருவாக்க முயன்று, தோற்று கண்ட கனவையே சந்தேகித்துப் பிறகு நடைமுறையை பழித்து நிந்தனை செய்து, அழகையே நம்பாமல் இருப்பது எவ்வளவு விசித்திரமானது தெரியுமா?

(இதயத்தின் இரகசியம்)

☆

## SEX - ஆண் பெண் பாகுபாடு - பாலுணர்வு

இந்த உலகத்திலேயே பாலுணர்வு மிக்கவர்கள் யார் தெரியுமா? கவிஞர்கள், ஓவியர்கள், சிற்பிகள், இசைக் கலைஞர்கள், புதியன புனைவோர்கள்தான். இது இன்று நேற்றல்ல, உலகம் தோன்றிய நாளிலிருந்து வருவது இப்பாலுணர்வு. அவர்களுக்கு இந்த பாலுணர்ச்சி மிகவும் அழகு வாய்ந்தது; மிக உயர்ந்த அன்பளிப்பு. பாலுணர்வு எப்போதும் அழகானது, வசீகரமானது ஆனால் மிகவும் வெட்கம் மிகுந்தது.

(ஆத்மாவின் கண்ணாடி)

☆

## SHADOWS - நிழல்கள்

சூரியனைப் பார்த்து தங்கள் முதுகைத் திருப்பிக் கொள்பவர்கள் எவ்வளவு நியாயம் அற்றவர்கள்; அவர்கள் தங்களின் நிழலை இந்த பூமியின் மேல் தாங்களே பார்த்துக் கொள்வது தவிர வேறு என்ன கண்டார்கள்?

*(இதயத்தின் இரகசியம்)*

☆

## SHEPHERD - ஆட்டிடையன்

நகரத்திலே, மனிதர்களிலே உயர்ந்தவன் ஆட்டிடையனின் பலத்த குரலுக்கு கட்டுப்பட்டு அழைத்துச் செல்லுபவனன்றி வேறு யார்? அவன் கட்டளைக்குக் கீழ்படியவில்லையானால், கசாப்புக் கடைக்காரன் எதிரில் நிற்க வேண்டியதுதான்!

*(ஜிப்ரானின் பொற்களஞ்சியம்)*

☆

## SIGHT - பார்வை - நோக்கு

வாழ்க்கையின் ஆழத்தை நம் அகக்கண்களால் எல்லோ ராலும் பார்க்க இயலாது. மங்கிய பார்வையை உடையவன் தூரத்தில் உள்ளதைத் தெளிவாக பார்க்க முடியவில்லை என்று வேண்டுவது குரூரமானது.

☆

## SILENCE - மௌனம் - அமைதி . கூச்சலிடாதே

இயற்கையையும் மிஞ்சும் மிகப்பெரிய உண்மைகள், ஓர் உயிரிலிருந்து இன்னோர் உயிருக்கு மனிதனின்

*பேச்சுகளால் பரிமாறப்படுவதில்லை! உண்மை, மௌனத்தையே தேர்ந் தெடுத்து காதலிக்கும் ஆத்மாக்களுக்கு அதன் பொருளை உணர்த்தும்; அர்த்தத்தை அனுப்பி வைக்கும்!*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

*நம் வாய், மொழிவதைவிட மிகவும் உயர்ந்ததும் தூய்மை யானதும் ஒன்று உள்ளது. மௌனம் நம் ஆத்மாவை ஒளி மயமாக்குகிறது; அவற்றை இணைக்கின்றது; மௌனம் நம்மிலிருந்தே நம்மைப் பிரிக்கின்றது; ஆத்மாவின் வான வெளியில் நம்மை மிதக்க வைக்கின்றது; நம்மை சொர்க்கத்திற்கு மிகவும் நெருக்கமாக அழைத்துச் செல்கிறது; உடம்பே நமக்கு ஒரு சிறைக் கூடமாக அமைந்ததோ என உணர வைக்கிறது; இந்த உலகமே நமக்கு நாடு கடத்தப்பட்ட இடமாக அமைந்து விடுகின்றது.*

*(முறிந்த சிறகுகள்)*

☆

SIN - பாவம் - பிழை - குற்றம்- பாதகம்

*முழுமை (பூர்ணத்துவம்) ஆத்மாவின் தூய்மைக்காக அல்ல; பாவத்திலும் அறம், நேர்மை, நற்குணம், கற்பு, பரிசுத்தம், நல்லொழுக்கம் புண்ணியம் இருக்கும்.*

*(ஆத்மாவின் கண்ணாடி)*

☆

SINCERITY - உண்மை - கபடமற்ற - அன்புமிக்க-

மனப்பூர்வமான

*நான் பல சமயங்களில் தியாகத்தின்*

பெருந்தன்மையையும், போராட்டத்தினால் வரும் மகிழ்ச்சியையும், இவற்றில் எது மிகவும் அழகு மிக்கது, கம்பீரமான பெருமை மிக்கது என்று ஒப்பிட்டுப் பார்க்க முயன்றிருக்கின்றேன். ஆனால் இதுவரை நான் ஒரே ஓர் உண்மையைத்தான் வடிகட்டி கண்டுள்ளேன். அந்த உண்மைதான் நேர்மையான அன்பு; அந்த நேர்மையான உண்மை அன்பே எல்லா செயல்களையும் கௌரவம் மிக்கதாயும் அழகுள்ளதாயும் செய்கிறது!

(முறிந்த சிறகுகள்)

☆

## SLAVERY - அடிமைத்தனம்

கங்கை ஆற்றின் கரையிலிருந்து யூப்ரபீடீஸின் கடற்கரை வரை நான் காலத்துடன் தொடர்ந்து நடந்தேன்; நைல் நதியின் முகத்துவாரத்திலிருந்து அசீரியா சமவெளி வரை நடந்தேன்; கான்ஸ்டான்டி நோபிள்ஸின் குடிசைப் பகுதிகளிலிருந்து அலெக்காண்டிரியாவின் அழகு மிக்க அரண்மனைகள் வரை நடந்தேன். எல்லா இடங்களிலும் அடிமைத்தனம், அறியாமையின் ஊர்வலத்திலே பெருமையாக புகழ் பரப்பி நடக்கக் கண்டேன். இளைஞர்களையும், அழகான மங்கை களையும் வெறும் சிலைகளைக் கடவுள் என்று கூறிக் கொண்டு பலியிட்டு தியாகம் செய்வதைக் கண்டேன்; அவள் பாதங்களில் திராட்சை ரசத்தையும், வாசனைத் திரவங்களையும் கொட்டு கின்றனர்; அவளை மகாராணி என்று கூவுகின்றனர். அவள் சிலைகளின் முன்னே தூபதீபம் ஏற்றி, அவளை தீர்க்கதரிசி என்று அழைக்கின்றனர்; அவள் முன்னே மண்டியிட்டு வணங்கி, அதையே சட்டம் என்று அழைக்கின்றனர்; சண்டையிட்டு மடிந்து அதையே தேசாபிமானம் என்று அழைக்கின்றனர்; அவள் ஆணைக்குக் கீழ்படிந்து அதுவே இந்த பூலோகத்தில் கடவுளின் நிழல் என்று கூறுகின்றனர்.

அதற்காக வீடுகளையும் மாட மாளிகைகளையும்

மாமன்றங் களையும் இடித்து தரைமட்டமாக்கி விட்டு அதையே சகோதரத்துவம் என்று கூறுகின்றனர்; கொள்ளையிட்டு, போராடி, உழைத்துவிட்டு அதையே பேரின்பம் என்றும் அதிர்ஷ்டம் என்றும் கூறுகின்றனர்; கொலைகள் பல புரிந்து விட்டு அதையே சமத்துவம் என்று பறைசாற்றுகின்றனர். அவள் பலப்பல பெயர்களிலே முகபாவம் காட்டி காட்சியளிக் கின்றாள்; ஆனால் நடைமுறையில் ஒன்றே ஒன்றுதான்; உண்மையில் அவள் ஓர் என்றும் தீராத தொடர்ந்த வியாதியாக தலைமுறை தலைமுறைக்குக் கொடுக்கப்பட்ட பூர்வீகச் சொத்து. அவளே அடிமைத்தனம்.

(இதயத்தின் இரகசியம்)

☆

அவர்கள் கூறுவார்கள்-

''நீயோர் அடிமை உறங்குவதைக் காணில்
தயவு செய்து அவனை எழுப்பி விடாதீர்
அவன் தன் சுதந்திரக் கனா காண்பான்!''

நான் அவர்களுக்குச் சொல்வேன்-

''நீயோர் அடிமை உறங்குவதைக் காணில்
நீ அவனை தூக்கத்தினின்று எழுப்பிவிடு!
அவனுக்கு சுதந்திரத்தினை விவரித்துச் சொல்!''

(ஆத்மாவின் கண்ணாடி)

☆

## SLEEP - தூக்கம் - நித்திரை - உறக்கம்

வாழ்க்கை என்பதே ஓர் தூக்கத்தில் தொந்தரவு செய்த கனவு அன்றி வேறில்லை. எண்ணமே தூண்டுதல் அளித்துமே சொல்லிக் கொடுத்திடுமானால், துக்கம் தோய்ந்த ஆத்மாவும் சோகமுடன் இரகசியங்களை

*மறைத்து வைக்கும்; உல்லாசத்தை ஒளித்து வைக்கும்; மயிர் கூச்செறிக்கும் கிளர்ச்சியை மூடி வைக்கும்!*

*(ஜிப்ரானின் ஊர்வலம்)*

☆

SOBRIETY - மயக்கமில்லா - நிதானம்- உணர்ச்சி வசப்படாத - ஆத்திரப்படாத

*உலகத்தில் வாழ்க்கையை இரசித்து*
*சுவைத்து விரும்புவோர் வெகுசிலரே!*
*இலவச வெகுமதிகள் பல பெற்றும்*
*சலிப்படையாதவர் வெகுசிலரே!*
*உலகின் அருவிகளைக் கோப்பையில்*
*கொட்டி குடித்து மயங்கி விழாதீர்!*
*கோப்பையிலே கற்பனைகள் மிதந்து*
*பொங்கி வழிந்து விலகிச் செல்கிறதே!*
*நீ ஓர் மயங்காத ஆத்மாவை*
*களியாட்டங்களுக்குக் கிடையே காணமுடியுமா?*
*வானமெல்லாம் மூடிய மேகத்தினூடே*
*நீ முழு நிலவைக் காண்பதோர் அதிசயமே!*

*(ஜிப்ரானின் ஊர்வலம்)*

☆

SOCIETY - சமூகம் - சங்கம் - கழகம்

*சமூகம் ஓர் சந்தைக் கடையன்றி வேறில்லை; சண்டையும் சோகமும் துக்கமும் சேர்ந்ததன்றோ! சமூகம் ஓர் சிலந்தி வலையேதான்; அது எலிகளின் சுரங்கப்பாதையன்றோ!*

*(ஜிப்ரானின் பொற்களஞ்சியம்)*

☆

## SOLITUDE - தனிமை

*தேம்பி அழும் ஆத்மா தனிமையிலே ஓய்வு கொண்டு தளர்ச்சி கொள்ளும். தனிமை மக்களை வெறுக்கும்! அடிபட்ட மான் தன் கூட்டத்தை விட்டு விலகி குகையிலே குடிபுகும்; புண் ஆறும் வரைத் தனித்திருக்கும். இன்றேல் இறந்துபடும்.*

*(முறிந்த சிறகுகள்)*

☆

*தனிமைக்கு மென்மையான வளவளப்பான கைகள் இருக்கும்; ஆனால் அதன் வலிமைமிக்க விரல்களால் இருதயத்தை கெட்டியாய் அழுத்திப் பிடித்து துக்கத்தால் வருந்தி அழும்வரை அமுக்கி விடும். தனிமை, துயரத்தின் துணைவன்; ஆத்மாவின் உயர்விற்கு உற்ற நண்பன்.*

*(முறிந்த சிறகுகள்)*

☆

*என் அன்புச் சகோதரனே! உன் வாழ்க்கை மற்ற மனிதர் களின் உறைவிடங்களிலிருந்து பிரிக்கப்பட்டு தனிமையிலே வாழ்கின்றது. உன் அண்டை விட்டுக்காரனும் அதன் உள் அறைகளை ஊடுருவி எட்டிப் பார்க்கக்கூட, பார்க்க முடியாத இரகசிய வீடு. அதனில் உள்ள உணவுப் பண்டங்கள் வற்றி வெறுமையாகி விட்டால்கூட உன் அண்டை வீட்டுக்காரனின் உணவுப் பொருளால் அதை நிரப்ப முடியாது. அது ஓர் பாலைவனத்திலே நிற்குமானால் அதை நீ மற்ற மனிதர்களின் நந்தவனத்திற்குள் நகர்த்தி வைக்க முடியாது. மற்றவர் உழுத வயலிலே, நாற்று நட்ட நிலத்திலே, நீ அதை நகர்த்தி வைக்க இயலாது. அந்தத் தனிமை, மலை உச்சியின்மேல், சிகரத்தின் சிங்காசனத்திலே நிற்குமானால் அதை நீ சமவெளிக்கு*

*அழைத்து வந்து, மனிதர்களின் கால் சுவடுகள் படிந்த பள்ளத்தாக்கிலே குடியேற்ற முடியாது!*

*என் அன்பு சகோதரனே! உன் ஆத்மாவின் வாழ்க்கை தனிமையால் நாற்புறமும் சூழப்பட்டது; அந்த விதமான தனிமையும் ஏகாந்தமும் இல்லையெனில் நீங்கள் நீங்களாக இருக்க முடியாது; நான் நானாகவும் இருக்க இயலாது! இந்த விதமான தனிமையும் ஏகாந்தமும் இல்லையெனில் நான் உன் குரலைக் கேட்டு விட்டு, அது என்னுடைய குரலே என்றும், நான் பேசும் பேச்சே என்றும் நம்பிவிடுவேன். உன் முகத்தைப் பார்த்துவிட்டு, அது நான் என்னுடைய முகத்தையே கண்ணாடியில் காண்கின்றேன் என்று பார்த்துக் கொள்வேன்.*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

SONG - பாடல் - செய்யுள் - கீதம் - கவிதை

*புல்லாங்குழல் கொடுத்து என்னைப் பாடவிடு!*
*அந்தக் குழலோசையின் இனிமையே இன்பம்!*
*மாயப் பொய்த்தோற்றம் குறைந்து மறைந்ததே!*
*ஆயின் என்ன? புல்லாங்குழல் கைக்கொண்டேனே!*
*(ஜிப்ரானின் ஊர்வலம்)*

☆

SORROW - துக்கம்- விசனம் - மனவேதனை

*கொடியோரின் இதயத்தே அரசு செய்துவாழும்; கடவுளின் நிழலன்றோ துக்கமும் விசனமும்.*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

துக்கம், மனவேதனை பேசும் சக்தி பெறின் பாடலின் இனிமையை விட சுவைப்பதை நிரூபிக்கும்.

(இதயத்தின் இரகசியம்)

☆

எவனொருவன் மனவேதனையை, துக்கத்தை அனுபவிக்கவில்லையோ அவனால் இன்பத்தை மகிழ்ச்சியை ரசிக்க முடியாது.

(ஆசானின் ஞான மொழி)

☆

மனவேதனை மிக்க ஆத்மா, அதைப் போன்ற வேறு ஒரு துயரத்துடன் இணையும்போது ஓய்வு கொள்கின்றது. அவை மிகவும் அன்பாகவும் ஆசையாகவும் கூடி ஒன்றாய் விடுகிறது; ஓர் ஆள் நடமாட்டமற்ற நாட்டிலே, ஒரு வழிப்போக்கன் வேறொரு புதிய மனிதனைச் சந்தித்தால் எவ்வளவு மகிழ்வு கொள்வானோ! அப்படியே துயரத்தின் மூலமாக இணையும் இதயம், ஒரு போதும் இன்பத்தின் பெருமையிலே பிரிந்து விடாது.

(முறிந்த சிறகுகள்)

☆

இதயத்தின் இரகசியம், துக்கம் எனும் பெட்டியிலே பூட்டப்பட்டிருக்கும். துயரத்தில்தான் நாம் மகிழ்ச்சி காணலாம்; நம் இன்பம், வாழ்க்கையின் புதிர்களை, ஆழமாக மாயையை மறைத்து வைக்கும்!

(ஜிப்ரானின் பொற்களஞ்சியம்)

☆

SOUL - ஆத்மா - உள்ளுணர்வு- உள்உயிர்

ஆத்மா நிலைத்திருத்தலின் காரணமே, அந்த ஆத்மாவிலேயே மடிந்துள்ளதே! ஆத்மாவை சித்திரமாய்

*அழைத்து வந்து, மனிதர்களின் கால் சுவடுகள் படிந்த பள்ளத்தாக்கிலே குடியேற்ற முடியாது!*

*என் அன்பு சகோதரனே! உன் ஆத்மாவின் வாழ்க்கை தனிமையால் நாற்புறமும் சூழப்பட்டது; அந்த விதமான தனிமையும் ஏகாந்தமும் இல்லையெனில் நீங்கள் நீங்களாக இருக்க முடியாது; நான் நானாகவும் இருக்க இயலாது! இந்த விதமான தனிமையும் ஏகாந்தமும் இல்லையெனில் நான் உன் குரலைக் கேட்டு விட்டு, அது என்னுடைய குரலே என்றும், நான் பேசும் பேச்சே என்றும் நம்பிவிடுவேன். உன் முகத்தைப் பார்த்துவிட்டு, அது நான் என்னுடைய முகத்தையே கண்ணாடியில் காண்கின்றேன் என்று பார்த்துக் கொள்வேன்.*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

SONG - பாடல் - செய்யுள் - கீதம் - கவிதை

*புல்லாங்குழல் கொடுத்து என்னைப் பாடவிடு!*
*அந்தக் குழலோசையின் இனிமையே இன்பம்!*
*மாயப் பொய்த்தோற்றம் குறைந்து மறைந்ததே!*
*ஆயின் என்ன? புல்லாங்குழல் கைக்கொண்டேனே!*

*(ஜிப்ரானின் ஊர்வலம்)*

☆

SORROW - துக்கம்- விசனம் - மனவேதனை

*கொடியோரின் இதயத்தே அரசு செய்துவாழும்; கடவுளின் நிழலன்றோ துக்கமும் விசனமும்.*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

துக்கம், மனவேதனை பேசும் சக்தி பெறின் பாடலின் இனிமையை விட சுவைப்பதை நிரூபிக்கும்.

(இதயத்தின் இரகசியம்)

☆

எவனொருவன் மனவேதனையை, துக்கத்தை அனுபவிக்கவில்லையோ அவனால் இன்பத்தை மகிழ்ச்சியை ரசிக்க முடியாது.

(ஆசானின் ஞான மொழி)

☆

மனவேதனை மிக்க ஆத்மா, அதைப் போன்ற வேறு ஒரு துயரத்துடன் இணையும்போது ஓய்வு கொள்கின்றது. அவை மிகவும் அன்பாகவும் ஆசையாகவும் கூடி ஒன்றாய் விடுகிறது; ஓர் ஆள் நடமாட்டமற்ற நாட்டிலே, ஒரு வழிப்போக்கன் வேறொரு புதிய மனிதனைச் சந்தித்தால் எவ்வளவு மகிழ்வு கொள்வானோ! அப்படியே துயரத்தின் மூலமாக இணையும் இதயம், ஒரு போதும் இன்பத்தின் பெருமையிலே பிரிந்து விடாது.

(முறிந்த சிறகுகள்)

☆

இதயத்தின் இரகசியம், துக்கம் எனும் பெட்டியிலே பூட்டப்பட்டிருக்கும். துயரத்தில்தான் நாம் மகிழ்ச்சி காணலாம்; நம் இன்பம், வாழ்க்கையின் புதிர்களை, ஆழமாக மாயையை மறைத்து வைக்கும்!

(ஜிப்ரானின் பொற்களஞ்சியம்)

☆

SOUL - ஆத்மா - உள்ளுணர்வு- உள்உயிர்

ஆத்மா நிலைத்திருத்தலின் காரணமே, அந்த ஆத்மாவிலேயே மடிந்துள்ளதே! ஆத்மாவை சித்திரமாய்

*தீட்டமுடியாதே! அதன் உண்மை உருவத்தை வெளிப்படுத்த இயலாதே!*

*(ஜிப்ரானின் ஊர்வலம்)*

☆

*ஆத்மா, வாழ்க்கையில் எதையும் காணமுடியாது; அவை எல்லாம் ஆத்மாவிலேயே என்றும் வாழும்; அதன் தனிப்பட்ட வாழ்க்கைச் செயல்களிலே மட்டும்தான் அது நம்பும்; அதன் அனுபவமே பலவாய் இருக்க அதன் ஒரு பகுதியே அதன் முடிவாய் வெளிப்படும்.*

*(ஜிப்ரானின் உருவகக் கதைகள்)*

☆

## SOUNDS OF NATURE - இயற்கையின் ஒலிகள்

*பறவைகள் பாடும்போது, வயல்வெளியில் உள்ள மலர்களை அழைக்கின்றதா? மரங்களுடன் பேசுகின்றதா? சிற்றோடைகளின் சலசலப்பை எதிரொலிக்கின்றதா? இருந் தாலும் மனிதனால் பறவைகளின் பாக்களின் பொருளை உணர்ந்து கொள்ளவோ, தெரிந்து கொள்ளவோ, புரிந்து கொள்ளவோ முடியுமா? நீரோடைகளின் முணுமுணுப்பை புரிந்து கொள்ளவோ மென்மையாக மெதுவாகக் கடற் கரையைத் தொடும் அலைகளின் இசையை, அதன் பொருளை உணர முடியுமா?*

*மரங்களின் இளந்தளிர் இலைகளின் மேல் விழும் மழைத் துளிகளின் மொழிகளை மனிதன் தன் பேரறிவால் புரிந்து கொள்ள முடியுமா? மழைத்துளிகள் பலகணிமேல் விழுந்து தட்டுவதன் பொருளை உணர முடியுமா?*

வயல்வெளியிலே மலர்களுக்குத் தென்றல் விடும் தூதின் பொருள் புரியுமா?

ஆனால் மனிதனின் இதயம் மட்டும் இயற்கையின் ஒலிகளை, ஓசைகளை, இசையை புரிந்து, தெரிந்து, ஈர்த்து அவன் உணர்வுகளின் மேல் விளையாடும் பேறு பெற்றவன். அழிவற்ற ஞானம் மாயமான மொழிகளால் அவனுடன் அடிக்கடி பேசும். ஆத்மாவும் இயற்கையும் ஒன்றோடு ஒன்று உரையாடும்; அப்போது மனிதன் மட்டும் மௌனமாய் ஆச்சரியத்துடன் நின்று கொண்டிருப்பான்.

இருந்தாலும் மனிதன் இந்த இயற்கையின் ஓசைகளுக் கெல்லாம் அழவில்லையா? அவனுடைய கண்ணீர் துளிகள் சொல்வன்மையுடன் புரிந்து கொள்வதில்லையா?

(ஆசானின் ஞான மொழி)

☆

## SPIRIT - ஆத்மா - ஆவி- தைரியம்-சக்தி - தத்தவம்

ஒவ்வோர் உயிரிலும் உள்ள சக்தி, உணர்ச்சி, அதன் கண்களில் வெளிப்படையாய் தெரியும்; முகம் அதன் கண்ணாடி; உணர்ச்சியை உடல் உறுப்புகளின் இயக்கம் அதை விளக்கும். நம் தோற்றம், நம் சொற்கள், பேச்சு, நம் செயல்கள் அனைத்தும் நம்மைவிட உயர்ந்ததல்ல; ஆத்மாதான் நம் வீடு; கண்கள்தான் அதன் ஜன்னல்கள்; நம் சொற்கள்தான் அதன் தூதுவன்!

(ஆசானின் ஞான மொழி)

☆

ஆத்மாவின் வலிமையே அதன் சக்தியிலும் வல்ல பெரும்சக்தி; அதை எதிர்த்து நிற்பதெல்லாம் தவிடு பொடியாக நசுக்கப்படும்; நம்பிக்கை அற்றோர்,

*வலிமையற்றோர் அவர் அறியாமை, அவரின் வெறுமை அனைத்தையும் நீ கண்டிக்காதே! அவர்களிடம் பரிதாபம் கொள்ளவே!*

*(ஜிப்ரானின் பொற்களஞ்சியம்)*

☆

*உன் காதலை நீ உடம்பினால் வெளிப்படுத்தாதே! உன் உணர்வினால் ஆத்மாவினால் காண்பிப்பாய்! அக்காதல் என்றும் வாழ வேண்டும்! திராட்சை ரசம் பிழியப்படுவது எதற்கு? வாழ்விக்கத்தான்; செத்து மடிவதற்கல்ல!*

*(ஜிப்ரானின் பொற்களஞ்சியம்)*

☆

*நீ என் பொருளையெல்லாம், செல்வமெல்லாம், சொத்தெல்லாம் கொள்ளை கொள்ளலாம்; என்னை வெட்டி இரத்தம் ஊற்றெடுக்கச் செய்யலாம்; என் உடம்பையே எரித்து சாம்பலாக்கிடலாம்; ஆனால் என் ஆத்மாவைக் காயப்படுத்தவோ என் உண்மையைத் தொட்டுக் கெடுக்கவோ இயலாது!*

*(ஜிப்ரானின் கடிதங்கள்)*

☆

## SPIRITS - ஆவிகள் - ஆத்மாக்கள்

*முடிவின்மை, அழிவின்மையிலே வாழும் மக்களுக்கும் பூமியிலே வாழும் மனிதர்களுக்கும் இடையே நிலையான தொடர்ந்த செய்தித் தொடர்புள்ளது; கண்ணுக்குப் புலப்படாத அப்பெரும் சக்தியின் எண்ணப்படியே எல்லாம் நடைபெறு கின்றது. பல சமயங்களில் ஒரு தனிமனிதன் ஒரு செயலைச் செய்வான்; அவன் அது தன் சுதந்திரமான எண்ணத்தில் உதித்தது; விருப்பப்படி நடக்கிறது; தன் கட்டளைப்படி செய்யப்படு கின்றது என்று நம்புவான்.*

ஆனால் உண்மையிலேயே அவன் அப்படிச் செயல்பட, வழிகாட்டப்பட்டு, நுணுக்கமாக தூண்டப்படுகின்றான். பல மிகப்பெரிய மனிதர்கள் இப்படிப்பட்ட ஆவிகளுக்கு, உணர்வு களுக்கு முழுமையாக அடிபணிந்து, கட்டளைகளைச் செயலாக்கி பெரும் புகழும் பெருமையும் பெற்றிருக்கின்றனர். அந்த உணர்வின் கோரிக்கைகளை என்றும் அவர்கள் வெறுத்து தடைசெய்வதும் இல்லை; பாராமுகமாய் இருப்பது மில்லை;

இசைக் கலைஞனுக்கு எப்படி வயலின் இசைக் கருவி முழுமையாக சரண் அடைகின்றதோ அப்படியே உணர்ச்சிக்கு இம்மனிதர்கள் அடிபணிகின்றனர்.

இந்த மண்ணுலகத்திற்கும் ஆவியுலகத்திற்கும் இடையே நாம் மெய்ம் மறந்த மயக்க நிலையில் தூக்கத்துடன் பாதையில் நடக்கின்றோம். அது நம்மை அடைகின்றது; நமக்கு அதன் வலிமையை உணரமுடிவதில்லை; நாம் நம் உணர்வு நிலையைப் பெறும்போது நாம் நம் கைகளிலே உண்மையான விதைகள் இருப்பதை உணர்கின்றோம். அவ்விதைகளை வயல் வெளியிலே, நாம் ஆழமாக ஊன்றி நட்டு, மிகவும் விழிப்பாக நீர் பாய்ச்சி, நம் தினசரி வாழ்க்கையிலே நல்ல செயல்களையும், அழகான சொற்களையும் விளைவிக் கின்றோம்! நம் வாழ்க்கைக்கும் இறந்தவர்களின் உயிருக்கும் இடையே இந்த பாதை, தொடர்பு இல்லாமல் இருந்தால் நம் மக்களிடையே கவிஞர்களோ தீர்க்கதரிசிகளோ, ஞானிகளோ, அறிஞர்களோ தோன்றியிருக்க முடியாது.

(இதயத்தின் இரகசியம்)

☆

## SPIRITUAL AFFINITY - ஆவிகளின் உறவு - உணர்வுக் கவர்ச்சி

*தொடர்ந்த நட்புறவு, புணர்ச்சிப் பழக்கம், பாதுகாக்கப்படும் காதலித்தல்; இவற்றின் கூட்டினால்தான் காதல், அன்பு, நேயம் உண்டாகின்றது என்று நினைப்பதே தவறு. ஆவிகளின் உறவு உணர்வுக் கவர்ச்சி இதன் வழித்தோன்றல்தான் காதல்; இந்த உறவும், கவர்ச்சியும் கண நேரத்தில் தோன்றவில்லை எனில் இந்த காதல் ஆண்டாண்டு காலமாய், தலைமுறை தலை முறையாய் பழகினாலும் தோன்றாது.*

*(முறிந்த சிறகுகள்)*

☆

## SPIRITUAL AWAKENING - உணர்வுகளின் விழிப்பு - ஆத்மாவின் எழுச்சி - உள்ளுணர்வு

*ஆத்மாவின் விழிப்புணர்வுதான் மனிதனின் வாழ்க்கையில் மிகவும் தேவையான ஒன்று. இதுவே வாழ்க்கையின் முக்கிய தேவை. நாகரிகம் இப்போது மிகவும் அவல நிலையில் உள்ளதல்லவா? இதுவே ஆத்மாவின் எழுச்சிக்கு மிகவும் மேன்மையான இயக்கும் சக்தி. அப்படியானால் இருக்கும் பொருள்களை எப்படி நாம் மறுக்கமுடியும். அந்த பொருள் களின் நிலைத்த தன்மை ஒத்த நிலையில் அனுசரித்து அதன் பொருத்தத்திற்காகவே சலனமற்று உள்ளது என்பது நிரூபணமாகின்றது இல்லையா? இக்கால நாகரிகம் மறைந்து போகும் செயலைப் பெற்றிருக்கலாம். ஆனால் அழியாத நிலைத்த சட்டங்கள், அந்த செயலுக்கு ஓர் ஏணியை அளித்து உள்ளதால் அதன் படிகள் ஓர் சுதந்திரமான பொருளை நோக்கி அழைத்துச் செல்கிறது!*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

## SPIRITUALITY - தெய்விகம் - புனிதம் - பரிசுத்தம்

*காலமும் இடமும் புனிதமான நிலைகள்; நாம் பார்ப்பதெல்லாம், கேட்பதெல்லாம் தெய்விகம். நீ கண்களை மூடிக் கொண்டால் உன் உள் மனத்தின் சக்தியால் அதன் ஆழத்தையும் கூட எல்லா பொருள்களிலும் காணலாம்; நீ நிலைத்த இந்த உலகத்தின் சரீர சம்பந்தமான பொருள்களையும் வானுலகப் பொருள்களையும் காணலாம்; அதன் அவசியமான சட்டங்களையும் எச்சரிக்கைகளையும் நீயே புரிந்து உணர்ந்து கொள்ளலாம். நீ அதன் உயரிய பெருமையை புரிந்து கொண்டு அது நெருக்கமாய் பெற்றிருப்பதற்கும் மேலாக தெரிந்து கொள்ளலாம்.*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

## SPRING - வசந்தம்

*ஒவ்வொரு குளிர் காலத்திலும் ஒரு படபடக்கும் வசந்தம் உள்ளது. ஒவ்வோர் இரவுத் திரைக்குப் பின்னாலும் ஓர் சிரிக்கும் உதயம் உள்ளது.*

☆

## STRENGTH - வலிமை - பலம் - சக்தி

*எந்த வலிமை இதயத்தை காயமடையாமல் பாது காக்கிறதோ, அதே வலிமைதான் இதயத்தை அதனுள்ளே பரந்து விரிவடைய, அடைய வேண்டிய உயர்வு பெறத் தடை செய் கிறது. குரலின் பாடல் இனிமையானது; ஆனால் இதயத்தின் கீதம்தான் சொர்க்கத்தின் இனிய தூய குரலொலி!*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

## SUBMISSION - அடக்கம் - பணிதல்-தாழ்மை- கீழ்படிதல் - மரியாதையுடன் சொல்லல்

*மனிதர்கள் சுதந்திரமாகப் பிறந்திருந்தாலும் அவரின் முன்னோர்கள் இயற்றிய சட்டங்களுக்கு, மிகவும் கண்டிப்பான சட்ட திட்டங்களுக்கு, அடிமையாய் இருப்பார்கள். இந்த ஆகாயம் வானவெளி மாறாதது என்று நாம் கற்பனை செய் கின்றோம்; ஆனால் அது நாளைய திடமான எண்ணங்களுக்கு, இன்று பணிந்து விட்டுக் கொடுக்கிறது; நேற்றைய அடக்கம், பணிவு, தாழ்மை நாளைய உறுதியான எண்ணங்களுக்குக் கீழ்படிகின்றது!*

*(முறிந்த சிறகுகள்)*

☆

## SWORD - வீரவாள் - உடைவாள்

*எவன் ஒருவன் அழிவற்ற நிலைத்தத் தன்மையை வீர வாளுடன் கைக் கொண்டு அடைகின்றானோ அவன் நீதி நியாயம் உள்ளவரை உயிர் வாழ்வான்!*

*(ஆத்மாவின் கண்ணாடி)*

☆

## SYMPATHY - இரக்கம் - அநுதாபம்

*உன் இரக்கமும் அநுதாபமும் உன் அண்டை வீட்டுக் காரனின் இதயத்தைத் தொடுமானால் அது தெரியாத மூலையில் மறைந்து கிடக்கும் அறம், நற்பண்பை விட உயர்வானது, மேன்மையானது. ஒரு குற்றவாளிக்கும், ஒரு வழுக்கி வீழ்ந்த விலைமாதிற்கும் கூறும் ஆறுதல் மொழி. தயை, இரக்கம் எப்போதும் நீ கூறும் நீண்ட தெய்வ வழிபாட்டைவிட பெருமை மிக்கது, சிறப்பானது, மேன்மையானது. நாம் தினம் கோயிலிலே திரும்பத் திரும்ப கூறும் வெற்று வேதத்தை விடச் சிறப்பு மிக்கது!*

*(ஆத்மாவின் புரட்சி)*

# T

## TALK - பேச்சு - உரையாடல்

**நா**ன் வாயாடிகளின் வெற்றுப் பேச்சைக் கேட்டு சலிப்படைந்து விட்டேன்; என் ஆத்மா அவற்றை வெறுக்கின்றது.

இந்த பரந்த உலகத்திலே நான் தன்னந்தனியனாய் மகிழ்ச்சியாக வாழ ஓர் மூலையோ முடுக்கோ உள்ளதா?

வெற்றுப் பேச்சும் வீண்வாதமும் அற்ற ஓர் தனியிடம் இருக்குமா?

தன்னைத்தானே புகழ்ந்து துதிபாடும் மக்கள் அற்ற ஓரிடம் இப்பூமியில் இருக்குமா?

உலகில் வாழும் மக்களிலேயே யாரேனும் ஒரு மனிதன் வெறும் பேச்சு பேசாமல், அவன் வாயிலே பொய்யும் தற்பெருமையும் மறைந்து கொள்ளாமல் இருக்குமா?

(சிந்தனைகளும் தியானமும்)

☆

## TEACHER - ஆசிரியர் - குரு - ஆசான் - போதகன்

*மக்களுக்குப் போதனை செய்யும் குரு யாராக இருந்தாலும் மற்றவர்க்கு போதனை செய்யும் முன்பு தனக்குத்தானே போதித்துக் கொள்ள ஆரம்பித்து விட்டாரா? முதலில் அவர் ஓர் முன் உதாரணமாக வாழ்ந்து காட்டட்டும்; வெறும் சொற்களால் போதித்து என்ன பயன்? தனக்குத் தானே போதனை செய்து, தன் வாழ்க்கையின் வழிகளைச் சரிசெய்து செப்பனிட்டு பண்படும் ஆசிரியரே மதிப்பிற்கும் மரியாதைக்கும் உரியவர் ஆவார். தன்னை சரிசெய்து கொள்ளாமல் மற்ற மக்களுக்கு போதிப்பதும் அவர்களின் வழிகளைச் சீர்செய்பவரும் போற்றுதலுக்கு உரியவர் அல்லர்.*

*(ஜிப்ரானின் நீதிக்கதைகள்)*

☆

## TEARS - கண்ணீர்

*யார் ஒருவர் தன் கண்ணீரால் தன்னைத் தூய்மைப்படுத்தி, உணர்ந்து கொள்கின்றாரோ அவர் என்றென்றும் தூய்மையாகவே வாழ்க்கையில் நிலைத்திருப்பார்.*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

*மறந்து விடுவதற்காகவே சிரிக்கும் ஒருவரின் சிரிப்பைவிட நீங்கும் கண்ணீரே தூய்மை நிறைந்தது; ஏளனம் செய்வோரின் பரிகாசத்தைவிட இனிமையானது. வெறுப்பவரின் நாசநோயை, இதயத்தினை இக்கண்ணீர் சுத்தம் செய்கின்றது; உடைந்து சிதறிய உள்ளம் கொண்டோரின் துன்பத்தைப் பங்கு கொள்ள கண்ணீர் கற்பிக்கிறது. அதுதான் ஏசுகிறிஸ்துவின் கண்ணீர்.*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

*கண்ணீரால் கழுவி சுத்தம் செய்யப்பட்ட காதல் என்றும் நிலையாக தூய்மையும் அழகும் பொங்க நிலைத்து நிற்கும்.*

*(முறிந்த சிறகுகள்)*

☆

*இளைஞர்களின் கண்ணீர்-நிறைந்த இதயத்தின் பொங்கி வழியும் கண்ணீராகும். ஆனால் முதியோரின் கண்ணீர் அவர்கள் கன்னத்தின் மேல் துளித்துளியாய் விழும் காலத்தின் எஞ்சிய கண்ணீர். தளர்ந்து பலமிழந்த உடம்பின் எஞ்சிய வாழ்க்கை. இளைஞரின் கண்ணீர் ரோஜாவின் மேல் வீழ்ந்து படியும் பனித்துளிகள் போல் காட்சி தரும்; ஆனால் முதியோரின் கண்ணீர் இலையுதிர் காலத்தில் விழுகின்ற பழுத்த மஞ்சள் இலைகள் போல் இருக்கும். பெருங்காற்றால் அடித்து மேலே பறந்து பல இடங்களிலும் தூவப்படும்; அவர்களின் குளிர்காலம் நெருங்குகின்றது.*

*(ஜிப்ரானின் கடிதங்கள்)*

☆

## TEARS AND LAUGHTER - களிப்பும் கண்ணீரும்

*நான் என் இதயத்தின் எக்களிப்பை, சிரிப்பை இம்மக்கள் கூட்டத்தின் பெருஞ்செல்வத்திற்கு ஈடாக மாற்றிக்கொள்ள மாட்டேன்; நான் என் கண்ணீரை, என் துன்பம் தோய்ந்த உள்ளத்தால் வரவழைக்கப்பட்ட கண்ணீரை, அமைதிக்கு ஈடாக மாற்றிக் கொண்டு திருப்தி அடையவும் மாட்டேன். இந்த உலகத்திலே எப்போதும் என் களிப்பும் கண்ணீரும் என் முழு வாழ்க்கையாய் அமைய வேண்டும் என்பதே என் தீராத, நீங்காத நம்பிக்கை!*

*(களிப்பும் கண்ணீரும்)*

☆

## TEETH - பற்கள்

சமூகத்தின் வாயிலே, பற்பல நோயுற்ற பற்கள் சொத்தையாகி, தாழ்வாய் எலும்பு வரை கெட்டு புறையோடிப் போய் உள்ளன. ஆனால் இந்த சமூகம் அந்த சொத்தைப் பற்களை பிடுங்கி எறிய எந்த முயற்சியும் செய்யவில்லை; நோயும் வலியும் தொலைய எந்த நடவடிக்கையும் எடுக்க வில்லை; அனால் அது அந்த சொத்தைப் பற்களை மூடி மறைக்க பொன் தகடு இட்டு மூடி நிரப்பி விடுகிறது. பலப்பல பல் வைத்தியர்கள், சமூகத்தின் சொத்தைப் பற்களுக்கு மின்னுகின்ற பொன்னால் மூடி மறைக்கும் வைத்தியமே செய்கின்றனர்.

எண்ணிலடங்காத மக்களை இப்படிப்பட்ட சமூக சீர்திருத்தவாதிகள் ஆசைகாட்டி இணங்க வைக்கின்றனர்; அவர்களுக்கு அடிபணிந்து

நோய், வியாதி, வலி, மரணம் இவற்றிற்கு இரையாகி மடிகின்றனர்.

நீதிமன்றங்களுக்குப் போய் அங்கு நடக்கும் அநீதிகளைப் பார்; நீதியைச் சேகரித்து விநியோகிக்கும் கேடுகெட்ட, கோணல் புத்திகார, லஞ்சத்தின் அடிபணியும் நீதிபதிகளையும், வழக்கறிஞர்களையும் பார். அவர்கள் சாதாரண மக்களின் மனத்துடனும் எண்ணங்களுடனும் எப்படி விளையாடு கிறார்கள் தெரியுமா? பூனையின் கையில் அகப்பட்ட சுண்டெலி போல் தவித்து துடிக்கின்றனர்.

பணக்காரர்களின் அரண்மனைகளுக்குப் போய்ப்பார்; அங்கே பொய்யும், ஏமாற்றலும், கபட நாடகமும், வெளி

வேஷமும், துரோகமும், பாசாங்கும், விபசாரமும், குடியும் நெளிவதைக் காண்பாய். இவையே ஆட்சி செய்கின்றன.

ஏழைகள் வாழும் குடிசைகளுக்கும் போய் பார்க்கத் தவறி விடாதே! அங்கே பயம், அறியாமை, கோழைத்தனம் எல்லாம் குடி இருக்கக் காண்பாய்.

பிறகு நளினமான கைவிரல்களை உடைய பல் வைத்தியர்கள், மிகவும் நவீனமான கூரிய கருவிகளை வைத்துக் கொண்டு, மயக்க மருந்தையும், பல் செய்யும் சுண்ணச் சாந்தையும் கொண்டு சொத்தைப் பற்களின் குழிகளையெல்லாம் அடைத்து, மூடி மறைக்க நாளெல்லாம் உழைக்கும் நிலையைப் பார்!

நாடே ! சொத்தைப் பல்!

(எண்ணங்களும் தியானங்களும்)

☆

THINGS - பொருள்கள் - சாமான்கள்

கெட்டியான உண்மைப் பொருள்கள் மனிதனை வலி தெரியாமல் சாகடிக்கிறது; ஆனால் அன்பு, காதல் இவை எப்போதும் வாழும் வலியுடன் உயிர்ப்பிக்கிறது; எழுச்சி யளிக்கிறது.

(களிப்பும் கண்ணீரும்)

☆

பொருள்களின் மதிப்பை உன் அறிவு உனக்குப் புகட்ட வில்லையானால் பொருள்களின் பற்று பாசம் கவர்ச்சியிலிருந்து உன்னை விடுவிக்கவில்லையானால், நீ உண்மையின் சிம்மாசனத்திற்கு அருகே வரவே முடியாது.

(ஆசானின் ஞான மொழி)

☆

## THIRST - தாகம்

*ஆத்மாவின் தாகம் பொருள்களின் திராட்சை ரசத்தை விட இனிப்பானது; உணர்ச்சியின் பயம், உடலின் பாதுகாப்பைவிட அரிதானது.*

*(முறிந்த சிறகுகள்)*

☆

## THRONG - மக்கள் கூட்டம்

*மக்கள் கூட்டத்திடையே வாழும் வாழ்க்கை துயரமானது; தூக்கமாத்திரையை உண்டு தூங்குவது போன்றது; பைத்தியக்கார கனவுகளும், பயமும், பிசாசும், மாயத் தோற்றமும் நிறைந்தவை அவை.*

*(ஜிப்ரானின் பொற்களஞ்சியம்)*

☆

## TIME - நேரம் - காலம்

*இந்த உலகமே ஒரு திராட்சை ரசக்கூடம்; காலம் எனும் தந்தைதான் தலைவனாய் விருந்தளிப்போன்; நெறிமுறையின்றி முரண்பட்டு கனவு காண்பவனே, உபசரிக்கப்பட்டு, விருந் தளிக்கப்படுவான். மக்கள் குடித்து, குதிரைப் பந்தயம் நடத்த, பைத்தியக்கார ஆசைகளே குதிரைகளாய் ஓட, சிலர் தொழும் போதே தள்ளிக் கொண்டு நகர, மற்றவர் ஆவேச வெறி கொண்டு, பைத்தியமாகின்றனர்.*

*(ஜிப்ரானின் ஊர்வலம்)*

☆

*நகர மக்கள் வாழ்க்கை எனும் மதுவை வீணாக்குகின்றனர்; அவர்கள் கோயில் என*

நினைக்கின்றனர்; அவர்கள் அதை சாவதானமாய் குடிக்கின்றனர்; எண்ணாமல் வேகமாய் தப்பி யோடுகின்றனர்; ஆழ்ந்த ஆனால் புரியாத துயரத்தால், கிழ வயதை நோக்கி வேகமாய் ஓடுகின்றார்!

(ஜிப்ரானின் பொற்களஞ்சியம்)

☆

காலம் எவ்வளவு விசித்திரமானது; நாம் எவ்வளவு விந்தையானவர்கள். உண்மையிலேயே காலம் மாறி விட்டது; நம்மையும் மாற்றி விட்டது. காலம் ஓர் அடி எடுத்து வைத்தது; முத்திரையை விலக்கிற்று; நமக்கு எச்சரிக்கை செய்து பின் நம்மையே உயர்த்தி விட்டது.

நேற்று நாம் காலத்தைப் பற்றி குற்றம் சாட்டினோம்; அதன் பயங்கரத்தை எண்ணி நடு நடுங்கினோம்; ஆனால் இன்று அதை காதலிக்கக் கற்றுக் கொண்டோம்; வணங்கி வழிபட்டு வாழ்த்து கின்றோம்; இப்போது நாம் அதன் இயற்கையான ஏற்பாட்டைத் தெரிந்து கொண்டோம்; அதன் இரகசியங்களை, மாயைகளை, மர்மங்களைத் தெரிந்து கொண்டோம்.

நேற்று நாம் நடுநடுங்கும் பேய் பூதம் பிசாசுகளின் பயத்தினால், ஊர்ந்து, நகர்ந்து சென்றோம்; இரவின் பயத்திற்கு இடையிலும் பகலின் அதட்டலுக்கும், அபாயத்திற்கும் அடிபணிந்து மண்டியிட்டு நெளிந்தோம். ஆனால் இன்று மலைச் சிகரத்தை நோக்கி மகிழ்ச்சியாக நடக்கின்றோம். ஆம் அம்மலை உச்சிதான் இடி, மின்னல், மழையின் பிறப்பிடம்; சீறிப்பாயும் புயல் காற்றின் வாழ்விடம்.

நேற்று நாம் பொய்யான குருக்களையும், மாயமந்திரம் செய்யும் மந்திரவாதிகளையும், சூனியக்காரர்களையும் பெருமைப்படுத்தி, மரியாதை செய்து போற்றிப் புகழ்ந்தோம். ஆனால் இன்று காலம் மாறிவிட்டது; அக்காலம் நம்மையும் மாற்றிவிட்டது; இப்போது நாம் சூரியனின் முகத்தையே உற்று நோக்க முடியும்; கடலின்

கீதங்களைக் கேட்க முடியும்; நம்மைப் பெரும் புயல் காற்று தவிர மற்ற எதுவும் அசைக்க முடியாது.

நேற்று நாம் நம் ஆத்மாவைக் கிழித்து, கோயில்களை இடித்து, அதன் இடிபாடுகளைக் கொண்டு, நம் முன்னோர்க்கு தெய்விகமான பலிபீடமாகி உயர்ந்து விட்டது; பழைமை எனும் பிசாசு நம்மை நெருங்கவே முடியாது; இறந்தவர்களின் சதையற்ற கைவிரல்கள் நம்மைத் தொடக்கூட முடியாது.

நமக்கு மௌனமான எண்ணங்கள் மறதியின் மூலையிலே மூடி மறைக்கப்பட்டுள்ளது. இன்று நம் குரல் மிகவும் பலங்கொண்டு பெரும் சப்தத்தை உண்டாக்கி ஆகாயத்தை அலர வைக்கிறது. நடுநடுங்கச் செய்கிறது.

(எண்ணங்களும் தியானங்களும்)

☆

TORCH - ஒளிப்பந்தம் - தீவட்டி

மனித வர்க்கத்தின் ஆத்மா ஒளிப்பந்தத்தின் ஒரு பகுதி; இதைக் கடவுள் தன்னிலிருந்து பிரித்து வைத்தார் இவ்வுலகத்தைத் தோற்றுவித்தபோது.

(ஆசானின் ஞான மொழி)

☆

TREASURE - பொற்களஞ்சியம்- பணக்குவியல்

அறிவு, ஞானம், விவேகம், மன ஒற்றுமை இவையே வாழ்க்கையின் உண்மையான நம்பிக்கை மிக்கத் தோழன்; அவன் எப்போதும் உனக்கு நம்பிக்கைத் துரோகம் செய்ய மாட்டான்; ஏனெனில் ஞானம்தான் உன் மணி மகுடம்; விவேகம் தான் உன் செங்கோல்; இவை இரண்டும் உன்னிடம் இருக்கும்போது இதைவிட மிகப் பெரிய பொற்களஞ்சியம் வேறு எதுவும் இல்லை!

(ஆசானின் ஞான மொழி)

☆

## TRUTH - உண்மை - நேர்மை - சத்தியம்

உண்மை நட்சத்திரங்கள் போல; அது இரவில் மங்கலான இருளிற்குப் பின்னிலிருந்து மட்டுமே ஒளிவிட்டுத் திகழும்; உண்மை, உலகில் உள்ள எல்லா அழகான பொருள்களையும் போல; யாருக்கு பொய்மையின் ஆதிக்கம் முதலில் உணரப் படுகிறதோ அவர்களுக்கு அன்றி மற்றவர்க்கு அதனுடைய விருப்பத்தை வெளிப்படுத்துவதில்லை. உண்மை ஓர் ஆழ்ந்த அன்பு; அது நமக்கு தினசரி வாழ்க்கையிலே திருப்தியாக இருக்கக் கற்றுத் தருகின்றது; நம்முடன் வாழும் மக்களுடன் அதே இன்பத்தைப் பகிர்ந்து கொள்ள கற்பிக்கிறது.

(இதயத்தின் இரகசியம்)

☆

எவர் இந்த உலகில் உண்மையைத் தேடித் தெரிந்து மக்களிடத்திற்குப் பிரகடனப்படுத்துகின்றாரோ, வெளியிடு கின்றாரோ அவர்கள் கட்டாயம் துன்பத்திற்கு இரையாவார்கள். என்னுடைய துக்கமும் துயரமும் துன்பமும், உன் உடன் வாழும் மக்களின் துயரங்களைப் புரிந்து கொள்ள எனக்குப் பாடம் கற்பித்தது. திட்டமிட்டு தொடர்ந்து துன்புறுத்துவது, என்னுள் தோன்றிய உள்ளொளியை எப்போதும் குன்றச் செய்யவில்லை.

(ஜிப்ரானின் நீதிக்கதைகள்)

☆

பச்சிளங் குழந்தையின் புன்சிரிப்பால் வசீகரிக்கப்பட்டு, காதலர்களின் முத்தங்களால் கவரப்பட்டு, உண்மை நம்மை அழைக்கின்றது; ஆனால் நாம் அன்பின் கதவுகளை அதன் முகத்தெதிரே மூடி விடுகின்றோம்; நம் எதிரிகளுடன், விரோதிகளுடன், நடந்து கொள்வது போல் அணுகுகின்றோம்.

(ஆசானின் ஞான மொழி)

U

## UNAWARENCESS - தெரியா - அறியா நிலை

மனித மனம் உதவி வேண்டி கூக்குரலிடுகிறது; மனித ஆத்மா நம் விடுதலை தேடி வழி தேடுகிறது; ஆனால் நாம் அதன் கூக்குரலை புரிந்து கொள்வது மில்லை; எந்த மனிதன் கேட்கவும் புரிந்து கொள்ளவும் தெரிந்தவனோ அவனை நாம் பைத்தியக் காரன் என்று கூறி, அவனிடமிருந்து ஓடி விடுகின்றோம்.

இப்படியான இரவு கழிகின்றது; நாம் தெரியாமல், அறியாமல் வாழ்கின்றோம்; பகல் பொழுது நம்மை வரவேற்று, கட்டி அணைத்துக் கொள்கிறது. ஆனால் நாம் தொடர்ந்து நிலையான பயத்தில் இரவும் பகலும் உழன்று கொண்டே இருக்கின்றோம்.

(ஆசானின் ஞான மொழி)

☆

## UNSEEN - காணாதது - பார்க்காதது

மிகவும் நுட்பமான அழகெல்லாம் நம் வாழ்க்கையில் இருப்பினும் நாம் அவற்றைக் காணவும் முடியவில்லை;

கேட்கவும் இயலவில்லை!

(ஜிப்ரானின் சுயதரிசனம்)

என் அன்பிற்கு இனியவரே! யூதர்கள் ஏசு கிறிஸ்துவின் வருகைக்காகக் காத்துக் கொண்டிருந்தனர்; அவர் யூதர்களை அடிமைத்தளையிலிருந்து விடுவிப்பதாக அவர்களுக்கு சத்தியம் செய்து கொடுத்திருந்தார்.

உலகின் மிகப்பெரிய ஆத்மா புரிந்து கொண்டது; அவர்கள் ஜுபிடர், மினர்வா இருவரையும் இப்போதெல்லாம் வணங்கி வழிபடுவதில்லை என்றும், தாகம் மிக்க இதயம் கொண்ட மனிதனை, திராட்சை ரசத்தைக் கொண்டு தாகம் தீர்த்துவிட முடியாது என்றும் புரிந்துகொண்டார்.

ரோம் நகரில் மக்கள் அபோலோவின் தெய்விகத் தன்மையை, கருணை அற்ற கடவுளைப் பற்றி ஆழ்ந்து யோசித்தார்கள். வீனஸின் ஏற்கெனவே அழுக ஆரம்பித்து விட்டதை உணர்ந்தனர்.

அவர்களின் இதயத்தின் ஆழத்திலே, அவர்களுக்குப் புரியவில்லை என்றாலும், இந்த நாட்டு மக்கள், மிக உயர்ந்த போதனைகளுக்காக பசியுடனும் தாகத்துடனும் தவித்தனர்; உலகில் காணும் மக்கள் அனைவரையும் இப்போதனைகள் மாற்றி மறுமலர்ச்சி அளிக்கும்; அவர்கள் ஆத்மாவின் விடுதலைக்கு ஏங்கினார்கள். வாழ்க்கை வாழ்வதன் ஆச்சரியத்தையும் சூரிய வெளிச்சத்தில் நம் அண்டை வீட்டாருடன் மகிழ்ந்து களிக்க மனிதனுக்குப் போதித்தது. இப்படி போற்றி பாதுகாக்கப்பட்ட சுதந்திரமே மனிதனைக் காணாத, கண்ணுக்குத் தெரியாத (கடவுளிடம்) மிகவும் நெருக்கமாக அழைத்துச் சென்றது கொஞ்சமும் பயமின்றி, நாணமின்றி, நெருக்கமாக்கியது.

(ஆசானின் ஞான மொழி)

## V

VERGIN - கன்னிப்பெண்- குமரி

*வாழ்க்கையின் மர்மம், மாயையிலே பரம இரகசியம் ஒன்று மில்லை; கன்னிப் பெண்ணின் மௌனமான ஆத்மாவை மாற்றிவிடும் காதல் பிணைப்பைவிட வலிமை மிக்கதும் அழகானதும் ஒன்றுமில்லை; அந்த ஆத்மா மனிதனை பழைமையை மறக்கச் செய்து அழியாத தொடர்ந்த விழிப்புணர்வை, மறுமலர்ச்சியை உண்டாக்கி, இதயத்திலே வருங்காலத்தில் அளவு கடந்த நம்பிக்கையையும் இனிமையான எண்ணங்களையும் தூண்டி, வேகமாக, ஆழமாக துடிக்க வைக்கிறது!*

*(இதயத்தின் இரகசியம்)*

# W

## WAR - போர் - சண்டை - யுத்தம்

நீ என் சகோதரன்! ஆனால் என்னுடன் நீ ஏன் போர் புரிகின்றாய்- நீ ஏன் என் நாட்டின் மேல் படையெடுத்து, என்னை அடிமையாக்க முயற்சி செய்கின்றாய்? பேரும் புகழும், அதிகாரமும் ஆட்சி வெறியும் பிடித்தவர்களைத் திருப்திப்படுத்த ஏன் போர் தொடுக்கின்றாய்?

நீயேன் உன் மனைவி மக்களை, குழந்தைகளை, உறவினரை தவிக்கவிட்டு தூரதேசம் வந்து மரணத்தைத் தழுவ வேண்டும் ? யார் உன் இரத்தத்தை விற்று, உன் மதிப்பு மரியாதை பெருமையைப் பணயம் வைத்து, உன் தாயின் கண்ணீரை சிந்த வைத்து, தங்கள் ஆட்சி வெறியை வளர்க்கின்றார்களோ அவர் களுக்காக நீயேன் சாகவேண்டும்?

தன் சகோதர மனிதனைக் கொல்வதுதான் இந்த மனமற்ற மனிதனுக்கு பெருமையா? நீ அதை பெருமை, கீர்த்தி, புகழ் என்று கருதுவாயானல் நீ தன் தம்பி ஏபலைக்கொன்ற கெயினுக்குக் கோயில் கட்டி கும்பிட்டு வழிபடட்டும்.

*(களிப்பும் கண்ணீரும்)*

☆

# V

## VERGIN - கன்னிப்பெண்- குமரி

*வாழ்க்கையின் மர்மம், மாயையிலே பரம இரகசியம் ஒன்று மில்லை; கன்னிப் பெண்ணின் மௌனமான ஆத்மாவை மாற்றிவிடும் காதல் பிணைப்பைவிட வலிமை மிக்கதும் அழகானதும் ஒன்றுமில்லை; அந்த ஆத்மா மனிதனை பழைமையை மறக்கச் செய்து அழியாத தொடர்ந்த விழிப்புணர்வை, மறுமலர்ச்சியை உண்டாக்கி, இதயத்திலே வருங்காலத்தில் அளவு கடந்த நம்பிக்கையையும் இனிமையான எண்ணங்களையும் தூண்டி, வேகமாக, ஆழமாக துடிக்க வைக்கிறது!*

*(இதயத்தின் இரகசியம்)*

# W

## WAR - போர் - சண்டை - யுத்தம்

நீ என் சகோதரன்! ஆனால் என்னுடன் நீ ஏன் போர் புரிகின்றாய்- நீ ஏன் என் நாட்டின் மேல் படையெடுத்து, என்னை அடிமையாக்க முயற்சி செய்கின்றாய்? பேரும் புகழும், அதிகாரமும் ஆட்சி வெறியும் பிடித்தவர்களைத் திருப்திப்படுத்த ஏன் போர் தொடுக்கின்றாய்?

நீயேன் உன் மனைவி மக்களை, குழந்தைகளை, உறவினரை தவிக்கவிட்டு தூரதேசம் வந்து மரணத்தைத் தழுவ வேண்டும் ? யார் உன் இரத்தத்தை விற்று, உன் மதிப்பு மரியாதை பெருமையைப் பணயம் வைத்து, உன் தாயின் கண்ணீரை சிந்த வைத்து, தங்கள் ஆட்சி வெறியை வளர்க்கின்றார்களோ அவர் களுக்காக நீயேன் சாகவேண்டும்?

தன் சகோதர மனிதனைக் கொல்வதுதான் இந்த மனமற்ற மனிதனுக்கு பெருமையா? நீ அதை பெருமை, கீர்த்தி, புகழ் என்று கருதுவாயானல் நீ தன் தம்பி ஏபலைக்கொன்ற கெயினுக்குக் கோயில் கட்டி கும்பிட்டு வழிபடட்டும்.

(களிப்பும் கண்ணீரும்)

☆

குண்டு வீச்சுகளால் புகை மண்டலம் மண்டிய போர்க்களத்திலே காதலர்கள் சந்தித்து முத்தங்களைப் பறிமாறிக் கொள்ள முடியுமா?

துப்பாக்கிக் குண்டுகளால் மூண்ட புகை மண்டலம் நட்சத்திரங்களையெல்லாம் மூடி மறைக்கும் போர் களத்தில், கவிஞர்கள் கவிதை புனைய முடியுமா?

இரவின் அமைதியையும் மௌனத்தையும் கொடுமையான பயங்கரம் கொள்ளையிட்டு கற்பழிக்கும்போது, இசைக் கலைஞர்கள் புல்லாங்குழல் வாசிக்க முடியுமா?

(சிந்தனைகளும் தியானமும்)

☆

## WAY TO GOD - கடவுளை அடைய வழி

நாம் கடவுளை ஒவ்வொரு முறை விரித்துப் பார்க்கும் போதும் நாம் காண்பதெல்லாம் அவர் பிரிக்க முடியாதவர் என்று. ஒவ்வொரு முறை முயலும்போதும் நாம் கடவுளை நெருங்கு கின்றோம் போலும். இருந்தாலும், தலை மூலம் அழகிற்கும் அகோரத்திற்கும் சில கோடுகளை வரைவதால் நாம் கடவுளின் பாதைக்கு நெருங்கு கின்றோம் என்று சொல்கின்றேனா?

தூய தியானம் மற்றொரு வழி. ஆனால் அது மௌனத் திற்கும், தனிமைக்கும் தானே தன்னை சிறைவாசம் செய்து கொள்ளுதற்கும் வழிநடத்திச் செல்லும். மௌனம்தான் உண்மையை வெகு விளக்கமாக வெளியிடுகின்றது. பேச்சை விட சிறந்தது. நாம் மௌனமாகும் நேரம், ஒருபோது வரும். அந்த நேரம் வருமுன்பு, நாம் ஏன் சொற்போராட்டம் செய்ய வேண்டும்? உன் நண்பர் லோடெஸி இருக்கின்றார்; அவர் மௌனமானார் ஆனால் எப்போது? அவர் உலகத்திற்கு தன் நம்பிக்கையை வார்த்தைகளால் தொகுத்து வடித்துக்கொடுத்த பிறகுதான்.

*(ஜிப்ரானின் நீதிக்கதைகள்)*

☆

## WEAKNESS - பலவீனம்

*இன்று நம் செய்கைகளிலே உள்ள குற்ற உணர்வு என்ன தெரியுமா? பலவீனம். இதுவே நாளைக்கு ஒரு தேவையான இணைப்பாக, மனித சங்கிலி பூர்த்தி அடைய, தோற்றமளிக்கும்.*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

## WEALTH - செல்வம்

*சில நாடுகளில் பெற்றோரின் செல்வம் குழந்தைகளுக்குத் துன்பம், துயரம் இவற்றின் உற்பத்தியாய் அமைகின்றது. தந்தையும் தாயும் ஒன்றாக உபயோகித்த மிகவும் வலிமையும் பரப்பும் உள்ள பெட்டிகள், தங்கள் செல்வத்தைப் பாதுகாக்க உதவிய பெட்டிகள், அவர்களின் வழித் தோன்றல்களின் ஆத்மாவிற்கு மிகவும் குறுகிய இருட்டான சிறைச் சாலையாக அமைந்துவிடுகிறது. எல்லாம் வல்ல 'டினார்' (ரூபாய், பணம்) மக்கள் வழிபடும் செல்வம், ஒரு பூதமாக மாறி, இதயத்தைச் சாகடித்து, ஆத்மாவை தண்டிக்கிறது.*

*(சிதைந்த சிறகுகள்)*

☆

## WILL - மனதிடம் - உயில்

*மன உறுதி என்றும் சரியானவற்றிற்கே சொந்தம்; ஆத்மா உறுதியுடன் உள்ளபோது வெல்லும்; பலமற்ற போது மாற்றத் திற்கு உட்படும்; நன்மையும் தீமையும் மாறிவரும்! காற்று வீசும்போதெல்லாம் போகும், வரும்!*

*ஆத்மாவின் உறுதியை நீ மறுக்காதே! ஆயுத பலத்தினும் மனோபலம் சிறந்து வளர்ந்தது! நன்று தீதுக்கு அப்பாற் பட்டோரே, பலமற்றவனாய் சிம்மாசனம் ஏறி அமர்வர்!*

*(ஜிப்ரானின் ஊர்வலம்)*

☆

## WINGS - சிறகுகள் - இறக்கைகள்

*கடவுள் உன் ஆத்மாவிற்கு இறக்கைகளைக் கொடுத்து, உன்னை காதலும் சுதந்திரமும் நிறைந்த பரந்த வானவெளியிலே பறந்து உயர்ந்து செல்ல விரும்புகின்றார்! ஐயோ! இது பரிதாபமாக இல்லையா? நீயே உன் கைகளாலேயே உன் சிறகுகளை வெட்டிக் கொண்டு, உன் ஆத்மாவை வருத்தி, மண்புழுபோல், பூமியின் மேல் நெளிகின்றாயே!*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

## WISDOM - ஞானம் - அறிவு

*அறிவுள்ள மனிதன் கடவுளைக் காதலித்து வழிபடுபவன். மனிதனின் மதிப்பு அவன் பேரறிவிலும் நற்செயலிலும் உள்ளது; அவன் மதிப்பு நிறம், நம்பிக்கை, மதம், இனம், மொழி, உயர் குடிப்பிறப்பு முதலிய எதிலும் இல்லை. என் நண்பனே ! நினைவு கொள்! அரசனின் வாரிசு ஆக உள்ள அறிவற்ற அரசிளங் குமரனை விட, அறிவு நிறைந்த ஆட்டிடையனின் மகன்தான் அந்த நாட்டிற்கு மிக உயர்ந்த மதிப்பு மிக்கவன். உன் பெற்றோர்கள் யார், நீ எந்த இனத்தைச் சேர்ந்தவன், என்பதெல்லாம் பெரிதல்ல; உன் உண்மையான அறிவு ஞானம் எந்த வகையில் சிறந்தது, பெருமைமிக்கது, என்பதே முக்கியமானது.*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

*எந்த ஞானம் கூவி அழைக்கவில்லையோ அதனின்று என்னை விலக்கி வை; எந்த தத்துவம் சிரிக்கவில்லையோ, குழந்தைகளுக்கு முன்னே எந்த உயர்வு மண்டியிடவில்லையோ அவற்றை என்னிடமிருந்து விலக்கி வை.*

*(ஆத்மாவின் கண்ணாடி)*

☆

## WOMAN - பெண்

கடவுள் பெண்ணுக்கு உணர்ச்சியை அழகாகவும், உடலை உண்மையாகவும் உண்டாக்கினார்! அதே சமயம் அந்த அழகான உணர்ச்சியையும், உடலையும் வெளிப்படையாகவும் இரகசிய மாகவும் வைத்தார்! அவற்றை நாம் காதல் மூலமாகத்தான் அறிந்து, தெரிந்து, புரிந்து கொண்டு, நற்பண்பு, அறம் மூலமாகத் தொடமுடியும். இப்படிப்பட்ட ஓர் பெண்ணை நாம் வர்ணிக்க முற்பட்டால் அவள் நீராவிபோல் மறைந்து விடுகின்றாள்!

(முறிந்த சிறகுகள்)

☆

பெண்கள் என் கண்களின் பலகணியைத் திறந்து ஆத்மாவின் உள்ளுணர்வின் கதவுகளையும் விரிக்கத் திறந்தாள். இந்த பெண் எனும் என் தாய், பெண் எனும் சகோதரி, பெண் எனும் தோழி இல்லாமல் இருந்தால் நான் உலகத்தின் மயக்கத்திலே தூங்கி குறட்டை விடும் எல்லா மனிதர்களுக்கும் இடையே தூங்கிக் கொண்டிருப்பேன்.

(ஜிப்ரானின் நீதிக்கதைகள்)

☆

எழுத்தாளர்களும் கவிஞர்களும் பெண்களைப் பற்றிய உண்மையைப் புரிந்து கொள்ள முயற்சி செய்கின்றனர். ஆனால் இந்த நாள் வரை யாராலும் அவளின் இதயத்தைப் புரிந்து கொள்ள இயலவில்லை; ஏன் எனில் அவளை ஆசையின் திரையினூடே பார்க்கும்போது அவர்களுக்கு அவளின் உடல் வடிவத்தைத் தவிர வேறு எதையும் காண முடிவதில்லை. அவளை துவேஷம் எனும் பூதக் கண்ணாடி கொண்டு ஊடுருவிப் பார்க்கின்றனர்; அப்போது அவர்களுக்குத் தெரிவதெல்லாம் பலமின்மையும், அடிபணியும் தன்மையுமேதான்.

(ஜிப்ரானின் கடிதங்கள்)

☆

## WOMANS HEART - பெண்ணின் இதயம் - பெண் மனம் - நங்கையின் நெஞ்சம்

*பெண்ணின் இதயம், நெஞ்சம் காலத்திற்கும் பருவங் களுக்கும் தக்கபடி மாறுபடாது. அந்த மனம் முடிவில்லாமல் மடிந்தாலும், அது ஒருபோதும் அழிவதில்லை. பெண்ணின் இதயம் ஒரு வயல்வெளி, போர்களமாக மாறியது போல; அதில் மரங்கள் வேரோடு பெயர்க்கப்பட்டு, புற்கள் பொசுக்கப்பட்டு, பாறைகள் இரத்தத்தால் சிவப்பு நிறமாய் மாற்றப்பட்டு, வயல்வெளியெல்லாம் எலம்புக் கூடுகளும், மண்டை ஓடுகளும் நடப்பட்டு பிறகு நிசப்தமாயும் அமைதியாயும் ஒன்றுமே நிகழாததுபோல் தோன்றுகின்றது! வசந்தமும் இலையுதிர் காலமும் மாறி மாறி இடைவெளியிட்டு வந்து தங்கள் வேலையைத் தொடங்கும்.*

*(முறிந்த சிறகுகள்)*

☆

## WORDS - சொற்கள்-வார்த்தைகள்-பொன்மொழி

*ஞானம் பொன்மொழிகளில் இல்லை; ஞானம் வார்த்தை களின் உள்ளே வாழும் பொருள், அர்த்தம்.*

*(ஆத்மாவின் கண்ணாடி)*

☆

## WORSHIP - வழிபாடு - ஆராதனை-தொழுகை

*மற்றவரைப் போல் போலியாக நடித்து, பாவனை செய்யும் அறிவற்ற மனிதனின் வழிபாட்டை, கடவுள் என்றும் விரும்புவதில்லை.*

*(இதயத்தின் இரகசியம்)*

☆

## WORTH - மதிப்பு - குணம் - விலை - யோக்கியதை - மேன்மை - தகுதி

*மனிதனின் பலவீனத்திற்கும் துயரங்களுக்கும் மேலே உயர உனக்கு உன் அறிவு கற்பிக்கவில்லையென்றால், உன் உடன் வாழும் மக்களை சரியான பாதையில் வழி நடத்திச் செல்ல, உதவ உன் அறிவு போதிக்க வில்லையென்றால் நீ உலகில் வாழும் மதிப்பு, மேன்மை, தகுதி குறைந்த மனிதனாகவே தீர்ப்பு நாள் வரை மாறாமல் இருப்பாய்.*

*(ஆசானின் ஞான மொழி)*

☆

## WRITER - எழுத்தாளர் - நூலாசிரியர்

*நீங்கள் மக்கள் கூட்டத்திற்கு இடையே உங்கள் தலையை உயர்த்தி நிமிர்ந்து நிற்கும் நூலாசிரியரா? உங்கள் மூளை, பழைமை எனும் பெரும் பள்ளத்திலே படுபாதாளத்திலே, பழைய கிழிந்த கந்தல் துணிகளும் குப்பை கூளங்களும், தூக்கி எறியப்பட்ட கிழிசல்கள் காலத்தால் கழிக்கப்பட்டவை எல்லாம் நிறைந்த பாதாளத்தையே எண்ணிக் கொண்டிருக்கின்றதா? அப்படியானால் நீங்கள் ஓர் தேங்கி நாறிப்போன சாக்கடைக் குட்டை.*

*நீங்கள் ஓர் நுண்ணிய சிந்தனையாளரா? உங்கள் உள்ளத்தின் ஆழத்திலே மறைந்துள்ள (அந்தராத்மா) எண்ணங் களை ஆழ்ந்து துருவிப் பார்க்கின்றீர்களா? உபயோகமற்றவற்றை ஒதுக்கித் தள்ளி, தேய்ந்து தீமை பயக்கவல்ல எண்ணங்களை தூக்கி எறிந்து, உபயோகமான நல்ல நினைவுகளையெல்லாம் பாதுகாத்து வைக்கின்றீர்களா? அப்படியானால் நீங்கள் பசித்தவர் களுக்கு நல்விருந்து; தாகத்தால் தவிப்போர்க்குக் குளிர்ந்த தூய்மையான தண்ணீர்.*

*(ஆசானின் ஞான மொழி)*

◉

Y

YOUTH - இளமை - யௌவனம்

இளமை ஓர் அழகிய கனவு; அதன் வெளிச்சத்தின் மேல், புத்தகங்கள் கண்களை மூடும் தூசியை தூவிக் குவிக்கிறது. அறிவாளிகள் அறிவின் ஆனந்தத்தை, இளைஞரின் கனவு களுடன் இணைக்கும் நல்ல நாள் வருமா? இயற்கை மனிதனின் ஆசிரியனாய் மனித சமுதாயம் அவன் புத்தகமாய், வாழ்க்கை அவன் பள்ளிக்கூடமாய் அமையும் நல்ல நாள் வருமா? இளைஞரின் மகிழ்ச்சி பொங்கும் நோக்கம் அந்த நல்ல நாள் வரும்வரை பூர்த்தியாகாது; நிறைவேறாது. ஆத்மீக உயர்வை அடைய நாம் பயணம் செய்வது மிகவும் மெதுவாக உள்ளது; ஏனென்றால் நாம் இளைஞர்களின் தீவிரமான ஆர்வத்தை பயன்படுத்திக் கொள்வதில்லை.

(சிந்தனைகளும் தியானமும்)

☆

அழகே இளைஞருக்கு மட்டும் உரியது; ஆனால் எந்த இளைஞருக்காக இந்த உலகம் செய்யப்பட்டதோ அது ஓர் கனவல்ல; அதன் இனிமை எல்லாம் குருட்டுத்தனத்திற்கு

அடிமையாக்கி விட்டதால் அதன் விழிப்பான எழுச்சி தாமதமாக உள்ளது. அறிவாளிகள் இளைஞர்களின் இனிய கனவுகளை ஒன்றாக இணைத்து அறிவின் மகிழ்ச்சியுடன் பிணைக்கும் அந்த நல்ல நாள் வருமா? ஒவ்வொன்றும் தனித்தனியே நிலைத்து வாழும்போது இது எப்படி நிகழும்?

(ஜிப்ரானின் பொற்களஞ்சியம்)

☆

## YOUTH AND AGE - இளமையும் முதுமையும்

மனித சமுதாயம் இரு பெரும் உயர்ந்த தூண்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒன்று வயதாகி தளர்ந்து தலை தாழ்ந்து வளைந்தவர்களால் ஆனது; அவர்கள் வளைந்த தடிக்கம்புகளின் உதவியால் தாங்கி நிற்கின்றனர்; அவர்கள் வாழ்க்கைப் பாதையில் நடக்கும்போது, மூச்சு திணறுகின்றார்கள், மலை ஏறும்போது ஏற்படும் அசதியுடன் தவிக்கின்றார்கள்; ஆனால் உண்மையில் அவர்கள் மலை ஏறவில்லை, படு பாதாளத்தில் இறங்கிக் கொண்டுள்ளனர்.

மற்றொரு தூண் இளைஞர்களால் ஆனது. அவர்கள் காலுக்கு சிறகு முளைத்து விட்டது போல் நடந்து பறக் கின்றார்கள்; அவர்கள் தொண்டையிலே வெள்ளிக் கம்பிகளால் இணைக்கப்பட்டு அதை இசைப்பது போல பாடிக் கொண்டு மலையின் உச்சியை நோக்கி ஏறி ஓடுகின்றனர்; அவர்களைத் தடுத்து நிறுத்த முடியாத ஒரு மந்திரசக்தி வசீகரித்து இருப்பது போல் உள்ளது.

(ஆசானின் ஞான மொழி)

☆

*இந்த மனிதக் கூட்டம் எதுவரை தூங்கிக் கொண்டிருக்கும்? அவர்கள் எதுவரை சமய சந்தர்ப்பவசத்தால் பெரும் கீர்த்தி பெற்றிருப்பவரை புகழ்ந்து தொடர்ந்து பாடிக்கொண் டிருப்பார்கள்? ஆத்மாவின் அழகைக் காண உதவிய மக்களை எவ்வளவு காலம்தான் ஒதுக்கி அசட்டை செய்ய முடியும்? அவர்கள் ஆத்மா, காதல், சமாதானத்தின் அடையாளக் குறி. எத்தனை காலம் இறந்தவர்களைப் போற்றிப் புகழ்ந்து, வாழ்பவரை மறந்து, அவர்கள் துயரங்களால், சூழப்பட்டு நலிந்து வாழ, தங்களையே மெழுகுவர்த்தியாய் எரிந்து உருகி மற்றவர்க்கு ஒளிகாட்டி வழிகாட்டி தேய்ந்து மாய்கின்றார்! அறிவற்றோர்க்கு ஒளிவிளக்காய் பாதைக்கோர் தீப்பந்தமாய் நலிகின்றாரே!*

*(களிப்பும் கண்ணீரும்)*

# கலீல் ஜிப்ரான்

# ஆத்ம தரிசனம்

*ஆங்கிலத்தின் ஆசிரியர்:*

ஜார்ஜ் ஷீபென்

*தமிழில்:*

ஆ.மா. சகதீசன்

# 1

## இது இயலுமா?

It is all Possible?

*கலீல் ஜிப்ரான் லெபனான் நாட்டின் புனித சிடார் மர நிழலில் பிறந்தவர். ஆனால் தன் அனுபவமிக்க நாட்களை யெல்லாம் நியூயார்க் நகரின் வானளாவிய மாளிகைகளின் நிழலிலேதான் கழித்தார். ஜிப்ரானை வர்ணிப்பவர்கள் எல்லாம் அவரைத் தத்துவஞானி, மதவாதி, நாத்திகன், மாறுபட்ட கருத்துடையவன், யோகி, புரட்சியாளன், காலமற்றவன், என்றும் வாழ்பவன் என்று கூறுகின்றனர். இப்படி முரண்பட்ட கருத்துகளும், கொள்கைகளும் கொண்ட ஒரே மனிதன் இருக்க இயலுமா?*

*ஒருசாரார் அவர் புத்தகங்களை ''அபாயமானது, புரட்சிக்கருத்துகள் கொண்டவை; இளைஞரைக் கெடுக்கும் நஞ்சு'' என்று கூறி தீக்கிரையாக்கி கொளுத்தவும், மற்றொரு சாரார், அதே நேரத்தில் அவர் எழுத்துக்களை ''ஜிப்ரான் பைபிளின் கம்பீரமான தொடர்மொழிகளைப் பெற்றது'' என்றும் கூறுகின்றனர். அவர் போதனைகளிலே ஏசுநாதரின் மொழிகள் எதிரொலிக்கின்றன; பழைய ஏற்பாட்டின் ஞான மொழிகள் மீண்டும் எதிரொலிக்கின்றன.*

ஜிப்ரானுடைய 'தீர்க்கதரிசி' என்ற புத்தகம் மட்டும் கடந்த 80 ஆண்டுகளாக அகில உலகம் முழுவதும் மிக அதிகமாக விற்கும் புத்தகமாக உள்ளது. 'தீர்க்கதரிசி' மட்டும் இருபது மொழிகளிலே மொழிபெயர்க்கப்பட்டு 15 லட்சம் பிரதிகள் விற்கப்பட்டுள்ளன. (1965-இல் எழுதியது)

'தீர்க்கதரிசி' என்பதுதான் ஜிப்ரான் எழுதிய ஆங்கில நூலில் மிகச் சிறந்தது. 'முறிந்த சிறகுகள்' அவருடைய முதல் நவீனம் இதுதான். 'அரபிக்' மொழியிலேயே சிறந்த நாவல். 'முறிந்த சிறகுகள்' எனும் நூல்தான் தீர்க்கதரிசியைவிட அதிகமான ஆண்டுகளாக அகில உலக சிறந்த புத்தக விற்பனையாக உள்ளது.

ஜிப்ரானின் வாழ்க்கை வரலாற்றை எழுதிய எல்லோரும் அவர் நண்பர்கள்; உடன் பழகியவர்கள். ஆகவே அவர்களால் அவர் எழுதிய புத்தகங்களையும், அவர் வாழ்க்கையையும் தனித்தனியே பிரிக்க முடியவில்லை. ஜிப்ரானுடன் சேர்ந்து வாழ்ந்த அவர்கள் ஜிப்ரானிடம் என்னென்ன எப்படி எப்படி கண்டார்களோ அப்படியே எழுதி வைத்துள்ளனர்.

அவர்களுக்கு அவர் வாழ்வின் பலவீனம்தான் முக்கியமாகத் தெரிந்தது. அவர் வாழ்க்கை வரலாற்று ஆசிரியர்கள் ஜிப்ரானின் குடும்பம் ஏன் அமெரிக்காவில் குடியேறியது என்று விளக்க முயற்சி செய்யவில்லை. அப்படிப்பட்ட குடியேற்றம் ஜிப்ரானின் எழுத்துக்களில் என்ன தாக்கத்தை ஏற்படுத்தியது என்றும் கூற முடியவில்லை. எது அவருக்கு புரட்சிக் கருத்துகளையும், அதே போது தியானத்தால் உண்மையையும் பரம்பொருளையும் காணலாம் என்ற நம்பிக்கையையும் உண்டாக்கியது?

ஜிப்ரான் சட்டதிட்டங்களை எதிர்த்து புரட்சி செய்தார்; மதத்தையும், மூடப் பழக்கவழக்கங்களையும் எதிர்த்தார். அவர் ஒரு புதிய சமூக நியதியை, அமைதியை, ஒற்றுமையை, தியானம் முதலியவற்றை கடைபிடிக்கும் மக்கள் இனத்தை ஆதரித்து பரிந்து பேசினார்; ஆனால் இந்த உலக மக்களிடம் மனிதன் இப்போதுள்ள சமூக சட்டங்களை விலக்கிவிட்டு ஒரு புதுமையான அன்பும், நிலையான இன்பமும் செழித்திருக்கும் ஓர் இன்பபுரியைக் காண வழிவகைகளும், தெளிவாக உணரும் சட்ட ஒழுங்குகளையும் அறியாதவனாய் இருக்கின்றான்.

ஜிப்ரான் இரண்டு மொழிகளில் எழுதினார். அரபிய மொழியில் எழுதி லெபனான், சிரியா, மற்றும் அரபிய உலகம் அறியவும், ஆங்கிலத்தில் எழுதி மேற்கு நாட்டு மக்களும், உலக மக்களும் அறியவும் எழுதினார். அவரை வியந்து, மெச்சி, புகழ்ந்து பின்பற்றுவோர் அவருடைய 'அரபிக்' மொழி நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தனர்; அவரின் ஆங்கில நூல்களை 'அரபிக்' மொழியில் பெயர்த்தனர்.

எப்படியிருந்தாலும் பெரும்பாலும் மொழிபெயர்ப்பு என்பது எப்படிப்பட்டது தெரியுமா? பாதைகள் அற்ற ஒரு நாட்டிற்கு புதிய மோட்டார் வாகனங்களை ஏற்றுமதி செய்து அனுப்புவது போலவும், மிக வேகமாக செல்லும் வாகனங்களின் பாதையிலே செல்ல, குதிரைகளைப் பழக்குவது போலவும்தான் ஆகிறது.

ஜிப்ரானின் நூல்களை, எழுத்துக்களை நன்றாகப் புரிந்துகொள்ளவும், நீதி வழங்கவும், வாசகர்கள் அவருடைய சூழ்நிலைகளும் சுற்றுச் சார்புகளும் சாதாரணமாக இல்லாமல் மிகவும் பிரச்சினை மிக்கதாய்

இருந்து இரட்டைத் தோற்றத்தை, இரட்டை உருவங்களை, ஜிப்ரானில் எப்படி உருவாக்கியது என்று அறிய வேண்டும்.

உதாரணத்திற்கு சொல்ல முனைந்தால் அவர் வாழ்க்கையின் வரலாற்று ஆசிரியர்கள் அவர் நாடு கடத்தப்பட்டார் என்று கூறுவர். ஆனால் அவர்களால் லெபனான் அரசாங்கம் அவரை நாடு கடத்தியது என்பதை விளக்கமுடிய வில்லை. துருக்கிய நாட்டு சுல்தான்தான் ஜிப்ரானின் புரட்சி கருத்துகளைக் கண்டு பயமடைந்தவர். நவீன மேற்கு எண்ணங்கள், மேற்குநாட்டு அரசியல் முறைகள், அரபு நாட்டில் நுழைந்துவிடக் கூடாது என்றும், ஏற்கனவே கனன்று எரிந்துகொண்டிருக்கும் புரட்சித் தீயை அதிகமாக்கி முடக்கி விடும் மத்திய கிழக்கு நாடுகளில் துருக்கி நாட்டுக்கு எதிராக புரட்சியை உண்டாக்கும் என்றும் பயந்தார்.

◉

# 2

# ஜிப்ரானை உருவாக்கிய சூழ்நிலையும் சுற்றுச்சூழலும்

## The Environment That Created Gibran

*ஜிப்ரான் பிறப்பதற்கு முன்பே சிரியாவிலிருந்தும், லெபனானிலிருந்தும் மக்கள் நாடு விட்டு நாடு சென்றனர். சிலர் எகிப்து நாட்டிலும், சிலர் அமெரிக்காவிலும், மற்றவர்கள் ஐரோப்பிய நாடுகளிலும் குடியேறினர். தப்பிக்க முடியாமல் போன துரதிர்ஷ்டசாலிகள் நாடு கடத்தப்படாதவர்கள், பொது சதுக்கங்களில் தூக்கிலடப்பட்டனர்; சுல்தானுக்கு எதிராகப் புரட்சி செய்பவர்களுக்கு இது ஓர் எச்சரிக்கையாய், முன்னுதாரணமாய் இருந்தது.*

*துருக்கி நாடு 1517க்கு முன்பே சிரியாவை வெற்றி கொண்டு 350 ஆண்டுகளாய் ஆட்சி செய்தது. ஜிப்ரான் 1883-இல் பிறந்தார். இருந்தாலும் லெபனான் நாட்டு மலைகள், துருக்கியப் படைகள் போரிட மிகவும் நம்பத்தகாத, ஏமாற்றுகிற இடமாக அமைந்தது.ஆகவே துருக்கியர்கள் கடற்கரைப் பகுதிகளையும்,*

சமவெளிகளையும், ஆட்கொண்டு மலைகளையும் அதில் வாழும் திடமிக்க மக்களையும், அவர்களே ஆண்டுகொள்ள விட்டுவிட்டனர். ஆனால் துருக்கியர் அந்த பிரதேசங்களில் அவருடைய பிரதிநிதிகளை அமர்த்தினர். அவர்கள் துருக்கி சுல்தானுக்கு வரிவசூலித்து கப்பம் கட்ட ஏற்பாடாயினர்.

## பிரெஞ்சுப் புரட்சி

1789-ஆம் ஆண்டில் ஜிப்ரான் பிறப்பதற்கு ஒரு நூற்றாண்டிற்கு முன்பு ஏற்பட்ட ஃபிரெஞ்சுப் புரட்சியின் தாக்கத்தால் ஏற்பட்ட பல விளைவுகளில் ஒரு கூறு என்னவென்றால், ஃபிரான்சு நாட்டிலிருந்து 'ஜெசூயிட்ஸ்' என்பவர்கள் நாடு கடத்தப்பட்டனர். இவர்கள் லெபனான் நாட்டிற்கு வந்து அகதிகளாய் குடியேறினர். அவர்களை லெபனான் நாடு ஏற்றுக்கொண்டது.

லெபனான் நாட்டு கிறிஸ்துவர்கள் அதிகமாக 'மெரோனைட்ஸ்' என்னும் பிரிவினர். இவர்கள் கத்தோலிக்கர்கள். அதிகமான சலுகைகள் பெற்றவர்கள். இந்தப் பிரிவினர்கள் கிறிஸ்துவ மதம் ஆரம்பமான நாட்களிலிருந்து பரம்பரை பழக்க வழக்கங்களை பாதுகாத்து வாழ்க்கையில் அனுசரித்து வருகின்றார்கள். லெபனான் நாட்டில் உள்ள தலைமைப் பாதிரியார்கள் பிஷப்புகளை அமர்த்த அதிகாரம் பெற்று இருக்கிறார்கள்.

இந்த அதிகாரத்தை ரோமநாட்டு வாடிகன் நகர் போப்பாண்டவரிடம் உள்ள 'கார்டினல்'களுக்குக்கூட கொடுத்ததில்லை. இந்த பிரிவினரான 'மரோனைட்' கோயில்களில் சிரியமொழி, அராபிக் மொழியையே பிரசங்கம் செய்யப் பயன்படுத்துகின்றனர். இந்த மொழியில்தான் ஏசுகிறிஸ்து போதனை செய்தார். ஒரு 'மரோனைட்' பாதிரியார் திருமணம் செய்துகொள்ளலாம்.

மற்ற கத்தோலிக்க மதப் பாதிரிகள் யாரும் திருமணம் செய்து கொள்ளக்கூடாது.

ஜிப்ரானின் தாயார் ஒரு 'மரோனைட்' பாதிரியாரின் மகள்; அவருக்கு அரபிக் மொழியும், பிரெஞ்சு மொழியும் தெரியும்; படித்திருந்தாள். ஏனெனில் ஃபிரெஞ்சு நாட்டிலிருந்து லெபனான் வந்து குடியேறிய 'ஜூயிஸ்ட்'கள் பள்ளிகளை ஏற்படுத்தி அதில் பிரெஞ்சு மொழியையும், மேற்கு நாட்டு சரித்திரங்களையும் போதித்தனர். இச்சரித்திரம் 'அரபிக்' மொழியில் இல்லை; ஏனெனில் துருக்கியர்கள் 300 ஆண்டுகளுக்கு முன்பு சிரியாவை வென்று அடிமைப்படுத்தினர்.

## சுல்தான்கள், அழகிய பெண்கள், வரிகள்

துருக்கி நாடு ஒரு காலத்தில் மிகவும் பலமிக்க நாடாக பூவுலகில் இருந்தது. அது அரபு நாடுகள் அனைத்தையும் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருந்தது. அது மட்டும் அன்றி பெரும்பகுதி நாடு துருக்கியின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. படை பல மிகுதியால் கர்வம், பெருமை கொண்ட துருக்கி தன் படைவீரர்களுக்கு சண்டையில் பெறும் பொருள் லாபத்தில் மூன்றில் ஒரு பங்கைக் கொடுத்தது.

சட்டப்படி சுல்தான் சாம்ராஜ்யத்தின் சொந்தக்காரன். சுல்தானிடம் நம்பிக்கையுடன் பணிபுரிவோர்களுக்கு, சுல்தானுக்கு உதவியோ, சலுகையோ செய்தவர்களுக்கு, அவர் ஒரு பெரும் நிலப்பரப்பைக் கொடுப்பார். இந்த பழக்கம்தான் சாம்ராஜ்யத்தில் ஜமீன்தாரி முறை, பண்ணை ஆட்சியை பலம்பெறச் செய்து புத்துயிர் அளித்தது. இந்தவிதமான சலுகைகளும், அன்பளிப்புகளும், அரபு மக்களை துருக்கிய சாம்ராஜ்யத்தில் ஓர் அங்கமாக இருக்கத் தூண்டவில்லை. உள்நாட்டுச் சண்டைகளும், சிறிய புரட்சிகளும் பல ஆண்டுகள் தொடர்ந்து நடந்து

கொண்டிருந்தன. 1860-ஆம் ஆண்டில் 'யூசப்-பை-கராம்' என்பவர் ஆசிரியரின் தாய்வழி உறவினர். ஜிப்ரான் பிறந்த மாவட்டத்தில் இருந்தவர், லெபனான் நாட்டு விடுதலைக்காக பெரிய புரட்சியை, சுதந்திரப் போராட்டத்தை நடத்தினார். வெடிமருந்துகளும், போதிய ஆள்படை பலமும் இல்லாமல் இருந்தும் பல இடங்களில் துருக்கிய படைகளை வென்றார். கடைசியில் எப்படியோ புரட்சி தோல்வி அடைந்தது.

பொதுவாக பேசப் போனால், துருக்கியர்கள் இந்த சாம்ராஜ்யத்தின் பொருளாதாரத்தை உயர்த்த உதவி செய்ய வில்லை; சுல்தானின் அதிகாரம் பெற்ற அதிகாரிகள் அழகான பெண்களைத் தேர்ந்தெடுத்து சுல்தானின் அரண்மனைக்கு அனுப்புவதிலேயே சுறுசுறுப்பாய் இருந்தனர். இந்த அழகிய பெண்கள் சுல்தானுக்கு தகுதியுள்ளவர்களாக இல்லாமல் போனால், அவள் அடுத்த பெரிய அதியாரியையோ, இரண்டாம் தர அதிகாரியையோ திருப்திப்படுத்தினாள், அவள் தன்னை ஆதரிக்கும் அதிகாரியை திருபதிப்படுத்தவில்லையானால் அவள் கைகள் கட்டப்பட்டு, கோணிப்பையில் போட்டு கடலில் எறியப்பட்டு மரணமடைவாள்.

வரிவசூல் செய்பவர்கள் அரசாங்கத்திடமிருந்து ஒழுங்கான சம்பளம் பெறும் அதிகாரிகள் இல்லை. ஒரு நாட்டில் வரிவசூல் செய்து கப்பம்கட்ட ஏலம் எடுத்து, சுல்தானின் அதிகாரம் பெற்றிருந்தனர். வரி, வருமானத்தில் 10-இல் ஒரு பங்கு என இருப்பினும் இந்த அதிகாரிகள் ஆள்பலம் கொண்டு பலாத்காரமாகவும், 10-இல் ஒரு பங்கிற்கு மேலே மக்களிட மிருந்து கவர்ந்தனர்.

ஒரு விவசாயி வரிவசூலிக்கும் அதிகாரி வருமுன்பு கோதுமையை அறுவடை செய்துவிட்டால், அந்த கோதுமையில் பெரும் பகுதியை தெரியாமல்

விற்றுவிட்டதாக குற்றம் சுமத்தப்பட்டான். விவசாயி அந்த வரிவசூல் அதிகாரியின் வருகைக்கு காத்திருநதால், கோதுமை அதிகமாக வந்துள்ளது என்று மதிப்பீடு செய்து அதன்படி அதிகமாக எடுத்து கொண்டார்கள். வரிவசூலிப்போர் பல சமயங்களில் பட்டிகளிலே நுழைந்து ஆடுமாடுகளையும், வீடுகளில் நுழைந்து ஆடைகள், சமையல் செய்யும் சாமான்கள் எல்லாம் எடுத்து விற்று, வரி எனும் பேரில் கவர்ந்து சென்றனர். இந்தப் பழக்கம் துருக்கி நாட்டு வரி விதிப்புமுறை உலகிலேயே அதிகமான கொடுமைமிக்க வரி விதிப்பாக இருந்தது. இதனால் வரி கொடுப்போருக்கு ஒரு நன்மையும் சேரவில்லை.

சுல்தான் சாம்ராஜ்யத்தின் சொந்தக்காரன் என்பதால் கனிவளங்கள் எல்லாவற்றையும் தன் கட்டுப்பாட்டில் வைத்திருந்தான். எல்லா கனிப்பொருள்களும் பூமியில் புதைந்து கிடந்தன. எல்லா மக்களும் வறுமையில் வாடித் தவித்தனர்.

## சூயஸ் கால்வாய்

ஒரு பிரெஞ்சு நாட்டு பொறி வல்லுநர் 'பெர்டினாட் டீ லெசிப்ஸ்' ஓர் அழகான பெண்ணின் மேல் காதல் கொண்டிருந்தார். அவள் இவரை ஒதுக்கிவிட்டு நெப்போலியன் III-ஐ திருமணம் செய்து கொண்டாள். மகாராணியாய்விட்ட அந்த அழகி தன் பழைய காதலனான பொறிவல்லுநனை சக்கரவர்த்தியின் கோபத்திலிருந்து காப்பாற்ற பிரெஞ்சு நாட்டை விட்டு போகத் தூண்டினாள்.

அந்த 'பெர்னாட் டீ லெசிப்ஸ்' வெளியேறி திரிந்து கடைசியில் எகிப்து நாட்டில் போய்ச் சேர்ந்தார். இந்த எகிப்து நாட்டை துருக்கி நாட்டின் சுல்தானின் ராஜ்யப்பிரதிநிதி ஆண்டுவந்தார். அவரிடமிருந்து இந்த

'லெசிப்ஸ்' மத்தியதரைக் கடலையும், செங்கடலையும் இணைக்கும் ஓர் கால்வாயை வெட்ட அங்கீகாரம் பெற்றார். இது ஓர் புதிய எண்ணம் அல்ல. இதற்கு முன்பு எகிப்தை ஆண்ட மன்னர்களும், அரபியர்களும், எகிப்தை ஆண்ட பலரும் பலமுறை கால்வாய் வெட்டினர். ஆனால் அவையெல்லாம் பாலைவனத்திலிருந்து வீசும் மணல் காற்றில் வரும் மணல், கால்வாய்களை நிரப்பி மூடி பழுதடையச் செய்தது.

பல ஆண்டுகள் பெரும் போராட்டத்துடன் வேலை செய்து, பல இடையூறுகளும், இடைஞ்சல்களும் ஏற்பட்டு, பொருளாதார பற்றாக்குறை உண்டாகி எகிப்து நாட்டை திவாலாக்க வைத்து கடைசியில் சூயஸ் கால்வாயை திறக்க தயாரானது. இந்த 'டீ லெஸிப்ஸ்'தன் பழைய காதலியிடம், தான் நிர்மாணித்த மிகப்பெரிய சாதனையை காண்பிக்க, வைஸ்ராய் கேடீவ் இஸ்மாலின் என்பவரிடம் ஐரோப்பிய நாட்டின் எல்லா அரசர்களையும், புகழ்மீக்கவர்களையும் திறப்புவிழா விற்கு அழைக்க ஏற்பாடு செய்தான்.

வைஸ்ராய் 'கேடீவ்' கேளிக்கைகளில், படாடோபத்தில், விழாக்களில், ஆடம்பரத்தில் மனம் விரும்பியவர். வரும் விருந்தினரை உபசரித்து கவனிக்க ஒரு பெரிய அரண்மனையே கட்டினார்; மரங்களை சுற்றும் வளர்க்க நேரம், காலம் இல்லாததால் மிகவும் அதிகமான செலவில் வளர்ந்த மரங்களையே வேரோடு பெயர்த்து வந்து அரண்மனையைச் சுற்றிலும் நட்டார். ஒரு பெரிய கலைக்கூடத்தையும் கட்டினார்; அதில் விருந்தினரை மகிழ்விக்க நடனம், நாட்டியம், நாடகம், இசைவிழா எல்லாம் நடத்தினார். இவர் கட்டிய கலைக்கூடம் இன்றும் உலகிலேயே மிகப் பழைமையான உபயோகத்தில் உள்ள கூடமாய் விளங்குகிறது.

'வெர்டி' எனும் இத்தாலிய இசை அமைப்பாளரைக்

கொண்டு எகிப்திய கதையை மேற்கத்திய இசைக்கு உகந்ததாய் அமைக்கச் செய்தார். அந்தக் கலைக்கூடத்தின் பெயர் 'எய்டா.'

இவையெல்லாம் ஜிப்ரான் வாழ்க்கையை எப்படி பாதிக்கும்? ஜிப்ரான் வாழ்க்கைக்கும் இவற்றுக்கும் என்ன சம்பந்தம்? 1869-ஆம் ஆண்டில் ஜிப்ரான் பிறப்பதற்கு 14 ஆண்டுகளுக்கு முன்பு நெப்போலியன் III-ஆம் சக்கரவர்த்தியும், அவனின் ராணி 'எகுனி'யும் 'போர்ட் செட்' என்ற துறைமுகத்திலிருந்து முதல் கப்பலில் புறப்பட்டு சூயஸ் கால்வாயைத் திறந்து வைத்தனர். மத்தியதரைக்கடலும் செங்கடலும் இணைந்தது. கப்பல்கள் இதன் வழியாக நேரே சென்றதால் மேற்கிலிருந்து கிழக்கு நாடுகளுக்கு வியாபாரத்தொடர்பு ஏற்பட்டது.

இப்படியாக பேரரசர்களும், ஐரோப்பாவிலிருந்து வந்த சக்கரவர்த்தி, அரசர், பெரும் பணக்காரர், புகழ்பெற்றோர், பெருவணிகர்கள் கலைக்கூடத்தில் அமர்ந்து 'எய்டா' இசையில் மயங்கி நின்றனர்.

அந்த நேரத்தில்தான் சாவுமணி ஒலித்தது. தரை வழியாக இந்தியா, அரேபியா, சிரியா, லெபனான், துருக்கி, எகிப்து முதலிய நாடுகள் வழியாக நடைபெற்று வந்த ஒட்டகப்பாதை, வியாபாரிகள் கூட்டம் முழுமையாக ஒழிந்தது; கப்பல் மார்க்கம் வளர, தரை வியாபார மார்க்கம் வீழ்ந்தது.

நூற்றுக்கணக்கான ஆயிரக்கணக்கான மக்கள் குதிரைகள், ஒட்டகங்கள் இவற்றை வளர்த்து விற்று வந்தவர்கள், உணவு விடுதிகள் நடத்தியவர்கள், ஒட்டக வியாபாரிகள், கிழக்கு நாட்டிற்கும் ஐரோப்பாவிற்கும் இடையே வியாபாரம் செய்தவர்கள், அவர்களுக்கு உதவியாக இருந்த பணியாட்கள் எல்லோரும் வேலையின்றி தவித்தனர். இந்த வியாபாரப் பாதைகள்

எல்லாம் துருக்கிய சாம்ராஜ்யத்தில் அடங்கி இருந்தன.

இப்படியாக வெறும் புல்தான் ஒட்டகத்தின் முதுகை ஒடித்தது. இதுநாள்வரை அரபு நாடுகள் பெரிய பொருளாதார இடிபாட்டிலிருந்து மீளமுடியவில்லை. துருக்கி நாட்டு சுல்தான்கள் சொந்த பூமியிலேயே புரட்சியை சந்திக்க நேர்ந்தது. தங்களின் அழிவைத் தாங்களே தேடிக் கொண்டனர்.

எகிப்து நாடு சூயஸ் கால்வாயை வெட்டியதால் திவாலாகி, ஆங்கிலேய படைகளுக்கு அடிபணிந்தது. இந்த படை ஆங்கிலேயரின், முதலீட்டையும் சூயஸ்கால்வாயையும் பாதுகாக்க வந்தது. கால்வாயிலிருந்து வருமானம் வரவில்லை. அதன் பொருளாதாரம் சீரடையவே இல்லை. மீள முடியவில்லை. துருக்கி நாட்டு சுல்தான்கள் சொந்த பூமியிலேயே புரட்சியை சந்திக்க நேர்ந்தது. தங்களின் அழிவைத் தாங்களே தேடிக்கொண்டனர்.

எகிப்து நாடு சூயஸ் கால்வாயை வெட்டியதால் திவாலாகி, ஆங்கிலேய படைகளுக்கு அடிபணிந்தது. இந்த படை ஆங்கிலேயரின், முதலீட்டையும் சூயஸ் கால்வாயையும் பாதுகாக்க வந்தது. கால்வாயிலிருந்து வருமானம் வரவில்லை. அதன் பொருளாதாரம் சீரடையவே இல்லை. மீள முடிய வில்லை. மத்திய கிழக்கு நாடுகள் ஓர் மூழ்கும் கப்பலாகவே மாறிவிட்டது. அப்பகுதி மக்கள் வீடு வாசலை விட்டு வேறு நாடுகளுக்குப் போக வேண்டியதாயிற்று. உயிருக்குப் பாதுகாப்பில்லை.

ஏழை மக்கள் மட்டும் அல்லாமல் பெரும்பாலான அறிவாளிகளும் வெளிநாடு சென்றனர். கால்வாய் தோண்டப் பட்டதால்தான் இப்படிப்பட்ட பொருளாதார சீர்கேடு ஏற்பட்டது என்று அறிவாளிகள் உணர்ந்தனர்.

பெரும்பா லானோர் சுதந்திரத்தின் மேன்மையையும், மேற்கு நாடுகளின் நாகரிக முன்னேற்றம் பற்றியும் நன்கு தெரிந்துகொண்டிருந்தனர். இதற்குக் காரணம் ஜீயிஸ்ட்களின் பள்ளிப் படிப்பறிவு. சூயஸ் கால்வாய் திறந்ததால் ஏற்பட்ட விளைவுகள் நிலைத்திருக்கக் கூடியவை என்று எதிர்பார்த்தனர். மற்றவர்கள் வரிவசூல் செய்யும் ஆட்சியாளர்களை எதிர்த்து போரிட்டனர். துருக்கி நாட்டு ஆட்சிப்பீடத்தின் கொடுங்கோன்மையை எதிர்த்தனர்.

பல சிரியர்களும், லெபனான் நாட்டு மக்களும் ஆப்பிரிக்காவில் குடியேறி ஐரோப்பிய வெள்ளையர் களுக்குத் தன் நாட்டைத் திறந்துவிட்டனர். பலர் 'பூயாட்' நகரில் கப்பலில் ஏறி அக்கப்பல் அவர்களை எந்த நாட்டில் விடுகிறதோ அங்கேயே குடியேறிவிட்டனர். அவர்கள் ஆஸ்திரியா, தென் அமெரிக்கா, நியூயார்க், பாஸ்டன் முதலிய எல்லா நாடுகளிலும் நகரங்களிலும் குடியேறினர்.

இப்படி குடிபெயர்ந்த குடும்பங்களிலே ஒன்றுதான் ஜிப்ரானின் குடும்பம்.

# ஜிப்ரான் பிறந்த இடம்

## The Birth Place of Gibran

*மனிதனை அவன் பிறப்பு குறித்தோ, அவன் இறப்பு பற்றியோ, யாரும் கலந்து ஆலோசிப்ப தில்லை. அவனுடைய நிரந்தரமான இருப்பிடம் பற்றியும் யாரும் கலந்து ஆலோசிப்பதில்லை. குழந்தை பிறக்கும்போதே அழுதுதான் உலகில் தோன்றிவிட்டதை அறிவித்து முறையிடுகிறது; உலகைவிட்டு பிரியும் முன்பு மரண பயத்தால் முறையிட்டு அலறுகிறது.*

*இப்படி ஜிப்ரான் ஆறாம் தேதி டிசம்பர் மாதம் 1883-ஆம் ஆண்டில் பிறந்தார். எங்கு? லெபனான் நாட்டில் 'பெயிரி' என்ற நகரில். பெயிரி நகர் 'வாடிகோடீஸா' மலைச் சிகரத்தின் ஒரு முனையில் உள்ள சிறிய பீடபூமியில் ஒரு பறவைபோல் அமைந்துள்ளது. இப்போது 'பெயிரி' செல்ல பாதை அமைந்துள்ளது. ஆனால் ஜிப்ரான் பிறந்த நாட்களில் மலை மேல் செல்ல ஓர் ஒற்றை அடிப் பாதைதான் இருந்தது. நகரிலும் அதைச் சுற்றிலும் நடைப்பாதையே மேலே ஏறியும் இறங்கியும் இருந்தன. வெள்ளைக் கற்களாலும் சிவப்பு ஓடுகள் வேய்ந்த கூரையும் அமைந்து கட்டிய சிறிய வீடுகள் நிறைந்தன.*

*பயிரியை இப்போது 'எலிகாப்டர்' மூலமாயும், நவீன*

இயந்திர வாகனங்களால் அடையலாம். ஆனால் ஜிப்ரான் பிறந்த காலத்தில் எந்தப் படையும் நாட்டின் மேல் படையெடுத்து ஆக்கிரமிக்க முடியாதபடி மதில் சுவரற்ற இயற்கைக் கோட்டையாய் இருந்தது.

ஜிப்ரானின் முன்னோர் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கடவுள்களை முக்கியமாக 'பால்' கடவுளை கோபமூட்டி இருக்க வேண்டும். அதனால் தான் பெரிய புயல், இடி, மழை, பூகம்பம் இவற்றால் பெரிய மாற்றம் ஏற்பட்டு கடலின் அடிப்பாகம் மேல்வந்து ஐரோப்பாவிலிருந்து அரேபியாவில் செங்கடல் வரை ஒரு மலைத் தொடர்ச்சியை உருவாக்கி இருக்க வேண்டும்.

'புயூரட்' நகரின் காட்சி சாலையில் ஒரு கோடி ஆண்டுகளுக்கு முன்பு ஒரு பாறையில் ஒட்டிக் கொண்ட மீன் உள்ள கல் உள்ளது. இந்த மீன் பெச்சிரி நகருக்கு அருகில்தான் மலைமேல் கிடைத்தது. இந்த கடவுளின் செயல் பல உயர்ந்த சிகரங்களையும், ஆழ்ந்த பள்ளத் தாக்குகளையும் உண்டாக்கியது. அதில் மிகவும் ஆழமானது 'வாடி கொடீஸா.' இதன் பொருள் புனித பள்ளத்தாக்கு; தெய்விக பள்ளத்தாக்கு. இது கடற்கரையில் ஆரம்பமாகி மலை உச்சியில் முடிவடைகிறது. ஜிப்ரான் உடன் இந்த நவீன கால பயணிகள் இவற்றை எண்ணிப் பார்க்காமல் இருக்க முடியாது; எந்த பெரிய சக்தியால் இப்பாறைகளின் படிவங்கள் உயர்ந்தெழுந்தது ஆகாயத்தை நோக்கி உயர்ந்து நிற்க வைக்கிறது; இது எப்படி சமுத்திரத்தின் அடிப்பாகத்தை ஒரு ரிப்பன் துணி போல அலை அலையாய் மடிப்பு மடிப்பாய் மலைகளை மைல்கணக்காய் பரப்பி விட்டிருக்க முடியும்?

'பார்பரா யங்' எனும் தோழியும், ஜிப்ரானின் வாழ்க்கைச் சரிதத்தை எழுதியவரும் ''வாடிகொடீஸாவிற்கு செல்வது என்பது நவீன உலகைவிட்டு நம் உடம்பையும், உணர்வையும் மிகப்

பழைமையான ஆதி அந்தமற்ற காலத்தில் அடங்காத ஒரு சூழ்நிலையில் நம்மை மூழ்கடிப்பது போல'' என்று கூறுகின்றார்.

''இது ஓர் பேரழகு மிக்க காடுகள், மனித நடமாட்டமற்ற தூய்மையும் அழகும் பொருந்தியது. இங்கிருந்தால் நம் மனம் அதிலேயே லயித்து, ஒன்றி ஈர்க்கும் பெரும் சக்தி படைத்தது. நிலைத்த, முடிவற்ற, அழிவற்ற உலகம் எப்படி இருக்கும் என்று எண்ண வைக்கும்'' என்று கூறுகின்றனர்.

லெபனான் நாட்டு மலைகளையெல்லாம் 'சிடார்' (தேவதாரு) மரங்கள் அடர்த்தியாக பல நூற்றாண்டுகளாக மூடி மறைத்திருக்கிறது. இது பற்றி பைபிள் நூலில் 103 இடங்களில் குறிப்பிடப் பட்டுள்ளது. அவற்றை 'கடவுளின் சிடார்' என்றும் 'கடவுளின் சொர்க்கத்தில் உள்ள சிடார்' என்றும் குறிப்பிடுகின்றனர்.

இப்போது ஜிப்ரானின் வீட்டிற்கு அருகே உள்ள 'சிடார்' மரங்களை 'புனித சிடார்' என்று கூறுகின்றனர். சிடார் மரங்களைப் பாதுகாக்கும் பொறுப்பையும், அதன் பாதுகாவலர் என்ற பட்டத்தையும் அளிப்பதானால் அந்த பெருமை 'பெச்சிரி' நகரையே சேரும். ஜிப்ரானின் தாத்தா ஓர் பாதிரியார்; இவர் குடும்பமே முதல் உரிமை பெற்றவர்களாக இருப்பார்கள். இந்த சிடார் கடவுளை அடையும் வாயிலைத் திறக்க ஜிப்ரானின் முன்னோர்கள் 'பொயினீஷியன்' என்னும் பிரிவினர்; இவர்கள் தங்கள் மதச்சடங்குகளையெல்லாம் இந்த சிடார் மரக்காடு களிலேயே கொண்டாடினார்கள். சிடார் மரங்கள் அவர்கள் வாழ்வோடு ஒன்றி உரிமையாயின.

மிகப் பழைய கதைகளான 'ஜீலகாமிஸ்' இஸ்டார், தாமிஷ் இவை அனைத்தும் இந்த சிடார் மரக்காடு களிலேயே நிகழ்ந்தன. (இவை 'One White Race' ஒரு வெள்ளை இனம் என்ற நூலில் உள்ளன.)

இயந்திர வாகனங்களால் அடையலாம். ஆனால் ஜிப்ரான் பிறந்த காலத்தில் எந்தப் படையும் நாட்டின் மேல் படையெடுத்து ஆக்கிரமிக்க முடியாதபடி மதில் சுவரற்ற இயற்கைக் கோட்டையாய் இருந்தது.

ஜிப்ரானின் முன்னோர் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கடவுள்களை முக்கியமாக 'பால்' கடவுளை கோபமூட்டி இருக்க வேண்டும். அதனால் தான் பெரிய புயல், இடி, மழை, பூகம்பம் இவற்றால் பெரிய மாற்றம் ஏற்பட்டு - கடலின் அடிப்பாகம் மேல்வந்து ஐரோப்பாவிலிருந்து அரேபியாவில் செங்கடல் வரை ஒரு மலைத் தொடர்ச்சியை உருவாக்கி இருக்க வேண்டும்.

'புயூரட்' நகரின் காட்சி சாலையில் ஒரு கோடி ஆண்டுகளுக்கு முன்பு ஒரு பாறையில் ஒட்டிக் கொண்ட மீன் உள்ள கல் உள்ளது. இந்த மீன் பெச்சிரி நகருக்கு அருகில்தான் மலைமேல் கிடைத்தது. இந்த கடவுளின் செயல் பல உயர்ந்த சிகரங்களையும், ஆழ்ந்த பள்ளத் தாக்குகளையும் உண்டாக்கியது. அதில் மிகவும் ஆழமானது 'வாடி கொடீஸா.' இதன் பொருள் புனித பள்ளத்தாக்கு; தெய்விக பள்ளத்தாக்கு. இது கடற்கரையில் ஆரம்பமாகி மலை உச்சியில் முடிவடைகிறது. ஜிப்ரான் உடன் இந்த நவீன கால பயணிகள் இவற்றை எண்ணிப் பார்க்காமல் இருக்க முடியாது; எந்த பெரிய சக்தியால் இப்பாறைகளின் படிவங்கள் உயர்ந்தெழுந்தது ஆகாயத்தை நோக்கி உயர்ந்து நிற்க வைக்கிறது; இது எப்படி சமுத்திரத்தின் அடிப்பாகத்தை ஒரு ரிப்பன் துணி போல அலை அலையாய் மடிப்பு மடிப்பாய் மலைகளை மைல்கணக்காய் பரப்பி விட்டிருக்க முடியும்?

'பார்பரா யங்' எனும் தோழியும், ஜிப்ரானின் வாழ்க்கைச் சரிதத்தை எழுதியவரும் ''வாடிகொடீஸாவிற்கு செல்வது என்பது நவீன உலகைவிட்டு நம் உடம்பையும், உணர்வையும் மிகப்

ஜிப்ரான் இந்த சிடார் மர நிழலிலே நடந்தார்; உறங்கினார்; தியானம் செய்தார். ஜிப்ரான் பல நூல்களில் இந்த பழைய கடவுள்கள் பற்றியும், சிடார் மரச் சரித்திரத்தில் இந்த மரங்களெல்லாம் மிக அதிகமாக அரண்மனைகளில் அசரியா, பாபிலோனியா, ஜெருசலேம் கோயில்கள், பரோவா (எகிப்து அரசர்) களின் சவப்பெட்டிகள் செய்ய எப்படி எல்லாம் உபயோகப்படுத்தப்பட்டன என அறியலாம். இந்த சிடார் மரங்களைக் கொண்டுதான் பினோஷியன் கப்பல்களுக்கு அதிகப்படியான வலிமையும் நீளமான தன்மையும் இயற்கைச் சக்திகளை (பஞ்சபூதம்) எதிர்க்கும் சக்தியையும் கொடுத்தன.

ஜிப்ரான் நியூயார்க் நகரின் வானளாவிய உயர்ந்த கட்டடங்களின் நிழலிலே வாழ்ந்த கொண்டிருந்தாலும் சிடார் மரங்கள் நிறைந்த கடவுளின் சொர்க்கத்தை மறக்கவில்லை; கடவுள்கள் அங்கே வாழ்ந்ததையும், விளையாடியதையும் மறக்கவே இல்லை. அது அவர் ஆத்மாவின் கண்ணாடியில் பிரதிபலித்தது. அது அவர் எழுதிய நூல்களிலும் விரிவாக எழுதப்பட்டுள்ளது.

ஜிப்ரான் தன் உறவினருக்கு எழுதிய கடிதத்தில் ''குழந்தைகள் விரும்பும் எல்லாம் அவர்களின் வயதான கிழப்பருவம்வரை மன சாம்ராஜ்யத்தில் இருக்கிறது. வாழ்க்கையிலேயே மிகவும் அழகான ஒரு பொருள் என்ன தெரியுமா? நம் அத்மா, நாம் ஒரு காலத்தில் மிகவும் மகிழ்ச்சியுடன் விரும்பி இன்பமடைந்த இடங்களிலே பறந்து சுற்றித் திரிகிறது. அப்படிப்பட்டவர்களிலே நான் ஒருவன்; எப்போதும் அந்த இடங்களைக் காலம், தூரம் கருதாமல் நினைவு கூர்கின்றேன்.''

ஜிப்ரான் தன்னுடைய ''ஏசுநாதர் மனிதனின் மகன்'' என்ற நூலில், 'பைபோஸ்'இல் இருந்து வந்த பெண் என்னும் அத்தியாயத்தில் பின்வருமாறு எழுதுகிறார்.

''என்னுடன் கதறி அழுங்கள்! ஆஸ்டர்டீயின் பெண்களே தாமோஸ்-ஐ காதலிக்கும் பெண்களே! உங்கள் இதயம் கரைந்து, பொங்கி இரத்தக் கண்ணீர் வழிந்தோட கதறி அழுங்கள்! பொன்னாலும் தந்தத்தாலும் ஆன 'என் ஏசு' இப்போது உயிருடன் இல்லை, இறந்து விட்டார்! இருள் காட்டிலே, கடவுளைக் காட்டுப்பன்றி கொன்றுவிட்டது. காட்டுப் பன்றியின் தந்தப் பற்கள் ஏசு சதையைக் கிழித்தது. அவர் சென்ற ஆண்டு உதிர்ந்து உலர்ந்த இலைகள் மேல் இரத்தக் கறையுடன் சாய்ந்துவிட்டார். இனிமேல் ஏசுவின் கால் சுவடுகள் வசந்தத்தின் வயிற்றிலே தூங்கும் விதைகளை எழுப்பாது! ஏசுவின் குரல் இனி காற்றோடு கலந்து காலை மலரும்போது மிதந்து வந்து ஒலிக்காது. நான் இனி என்றும் தனியனாய் தவிப்பேன்;

''என்னுடன் கூவி கதறி ஓலமிடுங்கள்! ஆஸ்டர்டீன் பெண்களே! தாமோஸ்-ஐ காதலிக்கும் கண்மணிகளே! என் உயிருக்குயிரான காதலன் தப்பி விட்டான். அவர் அருவி பேசுவதுபோல் பேசினார், அவர் குரலும் காலமும் இரட்டைப்பிறவி, அவர் சிவந்த வாய் இனிமையாய் இருந்தது. அவர் உதடுகள் பித்த நீரையும் தேனாக மாற்றிவிடும்!''

''என்னுடன் கூவி அழுங்கள்! ஆஸ்டீரேட்டின் பெண்களே! 'தாமோஸ்'ன் காதல் ஓவியங்களே! அவர் சவப் பெட்டியைச் சுற்றி நின்று, கதறி அழுங்கள்! வானின் உடுக்கள் அழுகின்றதே! நிலவின் இதழ்கள் உதிர்ந்து வீழ்கின்றன! என் ஏசுவின் புண்கள் எல்லாம் மூடி மறைத்தன! உன் பட்டு மெத்தையும், பஞ்சு தலையணையும், உன் கண்ணீர் வெள்ளத்தில் நனைந்து மிதக்கும்! என் கனவிலே என் இன்னுயிர் கூடி இருந்து, நான் விழித்தெழுந்தேன்; மங்கி மறைந்தது.''

''நான் அவரை குறை கூறுகிறேன். 'அஸ்டீரேட்டின் பெண்களே! தாமூஸீன் காதலர்களே! தேம்பி, கதறுங்கள்!

மார்மேல் அடித்து கூவி ஓலமிடுங்கள்; எனக்கு ஆறுதல் அளிக்கும், ஐயோ! நாசரத்தின் ஏசுநாதர் இறந்துவிட்டார்!''

'பைப்லோஸ்' எனும் நகரம் பலம் பொருந்திய ஒரு 'போனீஸியன்' நகரமல்ல. ஆனால் இது ஓர் மிகப் பெரிய மதத்தின் மையம்! மதபீடம். பழைய ஏற்பாட்டை 'பைப்லோஸ்' புத்தகம் எனக் கூறுவர். அந்நகரின் முக்கிய தலைமைக் கடவுள் 'எல்' கடவுள்களுக்கு எல்லாம் தந்தை; 'எல்' எனும் கடவுளை பைபிளில் 'எலோரும்' என்று அழைக்கின்றார்கள்; அரபிக் மொழியில் 'எல்' என்பதை 'எல்லா' என்று அழைக்கின்றனர். மிகப் பழைமையான வரிசைக்கிரமமான எழுத்துக்கள் எழுதப்பட்டிருப்பதை 'பைலோஸ்' நகரில் கண்டு பிடித்துள்ளனர். ஜிப்ரான் 'புய்ரூட்' பள்ளியில் படித்ததால் ஒவ்வொரு முறை வீட்டிற்குப் போகும் போதும் 'பைப்லோஸ்' 'திருபோலி' நகர் வழியாக சென்றிருக்க வேண்டும். பைப்லோஸ் கடற்கரையிலே 'புயூருட்'க்கு வடக்கே உள்ளது. ஒரு நாள் முழுவதும் குதிரை மேல் சவாரி செய்து தான் 'பெச்சரி'யிலிருந்து 'புய்ரூட்' போய் சேர முடியும்.

ஜிப்ரான் சரித்திர பூகோள அறிவு அவர் பிறந்த ஊரையும், படித்த ஊரையும் அதன் மார்க்கத்தையும் மட்டும் அறிந்த ஒன்றல்ல. அவருடைய விளக்கமான வர்ணனைகள், ஊர்கள், நிகழ்ச்சிகன், பழக்க வழக்கங்கள், மத்திய கிழக்கு நாடுகளின் சரித்திரம் பற்றியெல்லாம் எழுதிய முறை, அவர் இந்த எல்லா இடங் களுக்கும் போய் நேரில் தெரிந்திருப்பதை நிரூபிக்கிறது. ஜிப்ரான் ஐக்கிய அமெரிக்காவிற்கு வந்தபோது 12 வயது ஆன இளைஞர். இரண்டு ஆண்டு பாஸ்டன் நகரின் பள்ளியில் படித்த பின்பு லெபனான் நாட்டிற்கு திரும்பி வந்து படிப்பை முடித்தார். கோடை விடுமுறையில்

ஜிப்ரானின் தகப்பனார் அவரை லெபனான், சிரியா, பாலஸ்தீனம் முதலிய நாடுகளையெல்லாம் சுற்றிக் காண்பித்தார். பிறகு நான்கு ஆண்டுகள் அரபிக், பிரரெஞ்சு மொழிகளைக் கற்றபின் கிரீஸ், ரோம், ஸ்பெயின், பாரீஸ் முதலிய நாடுகளுக்குப் போய் படித்தார். இரண்டு ஆண்டுகள் பாரிஸில் படித்த பின்பு பாஸ்டன் நகருக்குத் திரும்பினார்.

ஜிப்ரான் சுற்றிப் பார்த்த இடங்களில் நாசரத், பெதல்ஏம், ஜெருசெலம், டயர், திருபோலி, பால்பெக், டமாஸ்கஸ், அலிப்போ, பல்னமா, முக்கியமானவை. இந்த இடங்களெல்லாம் உலகப் படத்திலே சில சிறுபுள்ளிகள்தான்; ஆனால் இந்த இடங்களைப் பார்த்தால் ஜிப்ரானின் மனத்திலே மிகப் பெரிய சிந்தனைகளை எழுப்பி பெரும் பாதிப்பை ஏற்படுத்தின; அவருடைய நூல்களிலும் எழுத்துக்களிலும், அவருடைய தத்துவச் சிந்தனைகளையும் உருவாக்க இந்த இடங்கள் மிகவும் உந்துதல் அளித்தன. அவர் எழுதிய ஒவ்வொரு வார்த்தைகளிலும் அவருடைய ஆத்ம தரிசனத்திலும், கண்ணாடியிலும் பிரதிபலித்தன. ஜிப்ரானின் கால்கள், நாசரத்தின் கற்களின் மேல் நடந்து தள்ளாடிய பொழுதுதான் அவர் 'ஏசுநாதர் - மனிதனின் மகன்' என்னும் நூலை எழுத எண்ணம் உண்டாகியிருக்க வேண்டும் என்று நினைக்க ஆதாரங்கள் உள்ளன.

'பால்பெக்' உலக அதிசயங்களில் ஒன்று. அங்கே சிதைந்து அழிந்து சிதறிக் கிடக்கும் கற்கள், தூண்கள் இவற்றிடையே மனிதன் நின்றால் தன் சிறுமையை, பணிவை உணர்வான். அவர்கள் தங்கள் கடவுள்களுக்காக கட்டிய மிகப்பெரிய கோயில்களில் எவ்வளவு திறமை, பக்தி, பலம், எல்லாம் கொண்டு கட்டி இருக்கின்றான் என்று பயபக்தியுடன் தலை வணங்குவோம். மத்திய தரைக்கடல் பிரதேச எல்லைக்குள் உள்ள மலைத்

தொடரின் மிக உயர்ந்த சிகரத்திற்குக் கிழக்கு திசையிலே தான் 'பால்பெக்' கோயில்கள் கட்டப்பட்டன. சிடார் மரக்காடுகள் இந்த சிகரத்தின் மேற்குப் பக்கம் உள்ளன. ஜிப்ரானின் எளிமையான வீடு இந்த பால்பெக் கோயிலுக்கும் சிடார் மரக் காடுகளுக்கும் சிறிது தூரத்திலேயே அமைந்துள்ளது.

பால்பெக் மிகப் பழைமையான மிகப் பெரிய மத மையம், வெள்ளையருக்கு எகிப்து நாட்டு பஹராஸ் (அரசர்கள்) சிடார் மரங்களால் ஆன படகுகளை அவர்களின் சமாதிகள் அருகில் வைத்துள்ளனர்; உயிர் பெற்று எழும் நன்னாளில் தாங்கள் பயணம் செய்வதற்காக இவை முன்னேற்பாடாக வைக்கப்பட்டன. அவர்கள் எகிப்திலிருந்து மத்திய தரைக்கடல் வழியாக பால்பெக் நகரை அடையவே இந்த ஏற்பாடு. 'பால்' கடவுள் வெள்ளையர்களின் எல்லா புனித ஸ்தலங்களிலும் காணப்பட்டார்; பாபிலோனியாவிலிருந்து பால்டிக் கடல் வரையில் ('ஓர் வெள்ளை இனம்' எனும் புத்தகத்தில் 'பால்' எனும் அத்தியாயத்தில் காண்க) ஜெவோஹாவிற்கு மிகப்பெரிய போட்டி 'பால்' கடவுளிடமிருந்தும் 'பால்'லின் தாய் த'ஈஸ்டர்' இடமிருந்தும் தான் வந்தது. 'பால்' உயிர் வாழும் எல்லாம் பயன்பெற மழையை உண்டாக்கினார். அவர் சில சமயங்களில் கோபங் கொண்டு பூகம்பம், புயல், இடி, மின்னல் இவற்றையும் உண்டாக்கினார். ஜிப்ரானால் எப்படி தன் ஆத்ம கண்ணாடியிலிருந்து அவரை விலக்க முடியும்? இந்த 'பால்' கடவுளின் கோபத்தால் உண்டான 'வாடிகொடீஸா'வை தினம் தினம் பார்க்கும்போது எப்படி அவரை விலக்க முடியும்?

யாரால் ஜிப்ரானின் புத்தகமான 'பூலோகக் கடவுள்கள்', பெர்ச்சி மலைச் சிகரங்களின் மேல் நடமாடிய போதும், பால்பெக் அழிந்த இடிபாடுகளுக்கிடையே உலவிய போதும் எழுத எண்ணம் உதயமாகவில்லை என்று சொல்ல முடியும்? அவர் கதை

கட்டுரை கவிதைகளில் பால்பெக் நகர மதக் கோட்பாடுகளும் மந்திர சக்திவாய்ந்த வாழ்க்கையும் பின்னணியாகக் கொண்டு பலப்பல எழுதப்பட்டன.

'டமாஸ்கஸ்'. உலகிலேயே மிகப் பழங்காலத்தி லிருந்து தொடர்ந்து மனித இனம் வாழும் நகரம்தான் இஸ்லாமியரின் பொற் காலத்தில் தலைநகராக விளங்கிற்று. ஐரோப்பா கண்டமே இருள் நிறைந்த காலத்தில் இருந்த போதே, இதை ஆண்ட அரசர்களுக்கே தங்கள் பெயரை எழுதத் தெரியாத நாட்களிலேயே எண்களும், எழுத்துகளும், விஞ்ஞானமும், பேய் பிசாசுகளின் வேலை என்ற மூட நம்பிக்கை பரவியிருந்த நாட்களிலேயே, 'ஏமியாட்' சந்ததியினர் 'டமாஸ்கஸ்' நகரில் உலகின் நான்கு மூலைகளிலிருந்தும் ஞானிகளை, அறிவாளிகளை ஒன்று சேர்த்து பெர்ஷியன், கிரீக், ரோமர்கள் எல்லோருடைய நூற்களையும் மொழி பெயர்த்தனர். அவர்களுடைய சாம்ராஜ்யம் ஸ்பெயின் முதல் இந்தியா வரை பரவி இருந்தது. சிலுவைப் போருக்குப் பிறகு எல்லா நவீன மொழிகளிலும் பெயர்த்து எழுதி பாதுகாத்தனர். கிரேக்க மொழி நூல்களை அரபிக் மொழியிலும் பிறகு அரபிக்கிலிருந்து ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்தனர்.

''டமாஸ்கஸ்'' நகரின் மசூதிகதளிலும், தெருக் களிலும் அலைந்து திரிந்த ஜிப்ரானுக்கு அரபு நாட்டத் தலைவர்களின் படங்களே இல்லாமல் இருப்பதை உணர்ந்தார். இதற்குக் காரணம் 'இஸ்லாம்' மதம் பொம்மை, சிலை, படங்கள் இவற்றைத் தடை செய் கிறது. ஜிப்ரானுக்கு 16 வயது ஆகுமுன்பே அரபு நாட்டு தத்துவ ஞானிகள், கவிஞர்களுடைய நூற்களை கற்று தெளிந்தார். அவர்களின் குணங்களைப் படித்து உணர்ந்ததி லிருந்து அந்த ஆண் பெண் கவிஞர்கள் தத்துவ ஞானி களின் படங்களை வரைந்தார்.

ஜிப்ரான் பிறந்த ஊருக்கு அருகில் உள்ள நகரங்கள் 'டயர்', 'சிடான்'. அவை இரண்டும் முக்கியமான 'பெனோசியன்' நகரங்கள். அவையே நாகரிகத்தையும், வியாபாரத்தையும் தெரிந்த உலக நாடுகளுக்கு எடுத்துச் சென்றது. கிரீஸ் நாட்டில் குடியேறி அதை நாகரிகமடையச் செய்தது; ரோம் நகரை நிர்மாணித்தது; வட ஆப்பிரிக்காவில் குடியேறி, 'கார்த்தேஜ்' நகரில் அரசியல் சாசனத்தையும் அரசாங்கத்தையும் வளர்த்தது. இந்த அரசியல் முறை பெச்சிரி - டியூட் நகருக்கு இடையே உள்ள 'திரிபோலி' நகரிலிருந்துதான் 'கார்தேஜ்' நகரிற்குச் சென்றது. பிறகு கார்தீஜ்லிருந்து இந்த பெரிய பொயினேஷியன் நகரிலிருந்து அமெரிக்க நாட்டு அரசியல் சட்டம் எனும் பட்டயம் என உலகிற்கு வெளிப்பட்டது. இந்த அமெரிக்க நாட்டிலிருந்துதான் ஜிப்ரான் சுதந்திரமாக அரபிக், ஆங்கிலம் படிப்போர்க்கு எழுதலானார். இந்த சிறிய பூமி, ஜிப்ரான் பிறந்த இடம்தான் மேற்கு நாகரிகம் தோன்றவும், அரசியல் சட்டங்களும் அரசாங்கங்களும் தோன்றக் காரணமாய் அமைந்தது.

ஜிப்ரான் ஓர் ஆசிபெற்ற அதிர்ஷ்டசாலியான பிள்ளை; இவர் அமெரிக்காவில் வாழ்ந்து அமெரிக்க நாட்டிற்கே பெரும் பெருமையைத் தேடித் தந்தார்.

# 4

# எச்சரிக்கை
words of Caution

## லெபனானா சிரியாவா?

ஜிப்ரான், லெபனான் நாட்டின் மகன் என்று எல்லோரும் அறிவார்கள். ஆனால் அவர் 'என் நாடு சிரியா' என்று எழுதினார். மத்திய கிழக்கு பற்றி எழுதும் ஆசிரியர்களுக்கு இது ஓர் பிரச்சினையை எழுப்பும்; வெறுப்பூட்டும் குறைபாடு என்று நினைக்கின்றனர்.

ஒரு வழிகாட்டியாக இதைக் கூறுகிறேன். எல்லா ஆறுகளிலிருந்தும் வண்டல் மண் கடலுக்கு வருகின்றது; புதிய நிலப்பரப்புகள் தோன்றுகின்றன; புதிய நகரங்கள் அந்த நிலப்பரப்பில் தோன்றுகின்றன; அந்த நிலையில் ஒரு நகரம் மற்றதைவிட பழைமையானதாக இருக்கும். மத்திய கிழக்கு நாடுகளில் கடலின் அடிப்பாகம் நில மாற்றங்களால் மேலே உயர்ந்து எழுந்து நின்றது; அப்போது கடல் வாழ்மீன்கள், கடலின் அடிபாகத்திலிருந்து மேலெழுந்த மீன்களும் காலம் செல்லச் செல்ல கல்லாக மாறியது; மலையின் உச்சியில் அப்படியே தங்கிவிட்டன. மத்திய தரைக் கடலுக்கு கிழக்கே உள்ள நிலப்பகுதி எல்லாம் இப்படித்தான் ஒரே சமயத்தில் தோன்றின. ஆகவே இதில் ஒரு பகுதி மற்றொரு பகுதியை விட பழைமையானது இல்லை.

மனித இனம் வட ஆப்பிரிக்கா, மத்திய கிழக்குப் பகுதியில் வேட்டையாடி அலைந்து திரிந்தது; அது சுமார் ஆயிரம் ஆயிரம் அல்லது லட்சம் லட்சம் ஆண்டுகளுக்கு முன்பு. இப்படி இருந்த கால கட்டத்தில் அரசியல் பிரிவுகளோ நாட்டு எல்லைகளோ இல்லை; அந்தக் காலத்தில் யாருக்கும் எந்த தேசம் செல்லவும் 'பாஸ்போர்ட்' தேவைப்படவில்லை; இப்படி குடிபெயர்ந்து, வேற்று நாடுகளில் குடியேறினர் (ஒரு வெள்ளை இனம் என்ற நூலில் பார்க்கவும்) ஐரோப்பா கண்டம் முழுவதும் 25 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு பனிக்கட்டி படர்ந்த ஒரு கண்டமாக இருந்தது.

ஆகவே அது மனித இனம் வாழ்வதற்கு சீதோஷ்ண நிலை தகுதி உள்ளதாக அமையவில்லை; ஒரு சில பழங்கால மக்கள் சில குகைகளில் பனிப் படலம் உருகி விலகும் காலம் வரை வசித்தனர். பிறகு மனிதன் குகைகளிலிருந்து சிறு கிராமங்கள் அல்லது சுற்றும் பாதுகாக்கப்பட்ட குடியிருப்புகளில் வசிக்க முற்பட்டனர். பிறகு நகரவாசியானான். இந்த 'சூர்' எனும் சொல் ஒரு நகரின் பெயராக மாறி கடற்கரையில் அமைந்த நகரை மேற்கு நாட்டு மக்கள் 'சூர்' யை 'டயர்' என்று அழைக்கலானார்கள். இந்த நகரான 'சூர்' அதன் கடவுளான 'சூர்யா'வை இன்றும் இந்திய நாட்டு மக்கள் வணங்கி வழிபடுகின்றனர். மத்திய தரைக்கடலுக்குக் கிழக்கே உள்ள பகுதியிலுள்ள மக்கள் எல்லோரும் 'சூர்' என்றே அழைத்தனர். 'சூர்' என்ற சொல் லத்தீன் மொழியில் 'டயர்' என்று மாறியது. சூர்யா என்ற சொல் லத்தீன் மொழியில் மாற்றம் அடைந்து 'சிரியா' என்று அழைக்கப்பட்டு, லெபனான் நாட்டு மலைப் பிரதேசமெல்லாம் 'சிரியா' எனப்பட்டது. அதில் ஒரு பகுதியாக சேர்க்கப்பட்டது.

இந்த நகர வாழ்மக்கள் 'ஆத்மா இருக்கிறது' என்ற

தத்துவத்தைப் பேணிக் காத்தார்கள். ஆத்மாவிற்கு அழிவில்லை; மறுபடியும் உயிர் பெறுகிறது; அதுதான் வாழ்ந்த இடத்திலேயே தங்கி வாழும்; அதற்கு உதவியாகவும் வழிகாட்டியாகவும் உதவி செய்தால் சொர்க்கத்தை அடையும் என்று நம்பினார்கள்; இந்த எண்ணங்களை செயிண்ட் அகஸ்டீன் என்பவர் உருவாக்கினார். இந்த சூர் நகரில் வசித்த மக்கள் இந்த சிந்தனைகளை நாடு கடந்து சென்று எகிப்து, பாபிலோனியா, வட ஆப்பிரிக்கா ஐரோப்பிய நாடுகளில் பரப்பினார்கள். அவர்கள் கடல்களை வெற்றி கொண்டு, ஐரோப்பாவில் குடியேறி அங்கு பெரிய நகரங்களை நிர்மாணித்தனர். லண்டன் நகரையும் உருவாக்கினர். அவர்கள் பினேசியர்களை ''அழிவற்றத் தன்மையில் நம்பிக்கை கொண்டவர்கள்'' என்று பெயரிட்டு அழைத்தனர்.

குகை வாழ் மனிதர்கள் ஒன்றாக சேர்ந்து போராடி கொடிய மிருகங்களை வெல்லும் உத்தியை வளர்த்தனர். நகரங்களில் குழுக்களாக பிரிந்து ஒருவர் மற்றவருடன் சண்டையிட்டு அழிக்கத் தொடங்கினார்கள்.

குகை வாழ் மனிதர்கள் ஒரு குகையையோ, அதன் அருகில் உள்ள நீர் ஊற்றையோ பாதுகாக்க ஒன்றாகச் சேர்ந்து சண்டையிட்டனர். சூரி அல்லது நகர மக்கள் நகரைப் பாதுகாக்க சூர் ஐ கட்டினர்; நாட்டைக் காக்க ஒரு படையை நிறுவினர். அதன்படிதான் இப்போதும் நாட்டைக் காக்க ஒவ்வொரு நாடும் படையை வைத்திருக்கிறது.

இவையெல்லாம் ஜிப்ரானின் நாட்டைப் பற்றி அறிவதற்கு எந்த விதத்தில் உதவும்?

இப்படித்தான் நம்மை இது பாதிக்கிறது. சண்டைகள்

புதிய எல்லைகளையும், புதிய அரசாங்கங்களையும், புதிய அரசாங்க தத்துவங்களையும், புது சிந்தனைகளையும் தோற்றுவித்தது. ஆகவே அரசாங்க ஆட்சிப் பிரிவுகள் ஜிப்ரானின் நாட்டை ரோமானியர்கள் ஆட்சிக் காலத்தில் மிகவாக மாற்றியது. ரோம நாட்டு சக்கரவர்த்தி 'ஆட்ரியான்' இதை மூன்று பாகங்களாகப் பிரித்தார். இம்மூன்று மாகாணங்கள்தான் சிரியா, சிரியா பினோஷியா, சிரியா பாலஸ்தீன். ஜிப்ரான் பிறந்தது சிரியா கினேஷியா மாகாணம். ஏசுநாதர் பிறந்தது சிரியா பாலஸ்தீன மாகாணம்.

ஒரு சரித்திர ஆசிரியர் ஏசுநாதரின் பிறப்பைப் பற்றி எழுதும்போது, ''சிரியா மாகாணத்தில் உள்ள, யாரும் அறியாத சிற்றூரில் பிறந்த ஏசுநாதர் மானிட வர்க்கத்திற்கே ஒரு புதிய சரித்திர கால தேதியை கொடுத்து, மனித இனத்தின் மத நம்பிக்கையை மாற்றி அமைக்க முடியும் என்று தோன்ற வில்லை'' என்றார்.

ரோமர்கள் வந்தபிறகு அராபியர்கள், அராபியருக்குப் பிறகு துருக்கியர்கள், துருக்கியர்களுக்குப் பறிகு ஃபிரான்சு நாட்டார், பிறகு ஆங்கிலேயர் என்று தொடர்ந்து அரசாங்கம் கை மாறியது. இவர்களில் எந்தப் படையும், இந்தப் படையெடுப்பாளர்களும், லெபனான் நாட்டு மலையை முற்றுகையிடவோ தாக்கவோ இயலவில்லை. ஏன் தெரியுமா? இந்த மலைப் பிரதேசம் மிகவும் அபாயகரமானது. வெற்றி கொள்ள முடியாதது. இன்னல் விளைவிக்கக்கூடியது. இவை எல்லாவற்றையும் விட இவர்களின் இழப்பிற்கு ஈடு செய்யும் தகுதியோ, வளமோ, செல்வமோ இல்லாதது. இந்த பயனற்ற மலைப் பிரதேசத்தை எந்தப் படையும் வெற்றிகொள்ள விரும்பவில்லை. இந்த மலைப்பிரதேசம் எப்போதும் படைகளால் சூழப்பட்ட நகரம் போன்றது. கிழக்குப் பகுதியில் உள்ள சமவெளிகளையும், கடற்கரைகளில்

உள்ள நகரங்களையும் படை ஆக்ரமித்துக் கொண்டால் ஒரு காலகட்டத்திற்குப் பிறகு மலை மேல் உள்ள இவர்கள் இறங்கி வந்து புதிய படையெடுப்பாளருடன் பேசி ஓர் ஒப்பந்தம் ஏற்படுத்திக் கொண்டு தங்களுக்கென சில சலுகைகளையும் உரிமைகளையும் ஒதுக்கி வைத்துக் கொள்வார்கள்.

அராபியர்கள் இந்தியா முதல் ஸ்பெயின் நாடு வரை வெற்றி கொண்டு ஜெயித்து ஓர் சாம்ராஜ்யத்தை உருவாக்கி, எல்லோரையும் 'இஸ்லாம்' மதத்திற்கு, மதமாற்றம் செய்தபோது கூட மலைவாழ் மக்கள், ஜிப்ரானின் மூதாதையர்கள், தங்கள் கிறிஸ்துவ மதத்தை பழுதடையாமல் பாதுகாத்துக் கொண்டனர். இது மிகப் பெரிய இஸ்லாம் கடலில் ஓர் சிறிய கிறிஸ்துவத் தீவு வாழ்வது போல் இருந்தது.

துருக்கியர்கள் இந்த நாடுகளை ஆக்ரமித்து வென்று அரசாங்கம் ஏற்படுத்தியபோது, சிரியாவை சிறிய மாவட்டங்களாகப் பிரித்தார்கள். (வில்லையா - ஜில்லா) ஒவ்வொரு மாவட்டத்திற்கு ஒரு கவர்னரை ஏற்படுத்தி அவர்களுக்கு பாஷா என்று பட்டமளித்தனர். இந்த சிரிய மக்கள் துருக்கியர்கள் ஆண்ட 400 ஆண்டுகளாய் இந்த வெற்றி கொண்ட துருக்கியர்களால் ஜீரணிக்க இயலாதவர்களாய் தங்களைப் பாதுகாத்துக் கொண்டனர். ஆகவே ஜிப்ரானின் நாடு, அரசாங்கத்திற்கு ஒரு தொல்லை தரும் பகுதியாகவே இருந்தது.

இந்த நாடு புரட்சி செய்த போதெல்லாம், ஐரோப்பிய கண்டத்தில் உள்ள ஏதாவது ஓர் நாடு உதவி செய்தது. 1860-ஆம் ஆண்டில் ஓர் உள்நாட்டு யுத்தம் ஆரம்பமாயிற்று. இங்கிலாந்து ஒரு பெரும் கப்பல் படையை அனுப்பியது. பிரான்ஸ் நாடு 6000 படைவீரர்களை லெபனான் நாட்டில் இறக்கிற்று. இப்படி

படை குவிந்த பிறகு ஒரு தனித்தன்மை வாய்ந்த குழு கூடிற்று. இதில் அரசியல் நிபுணர்கள், ஃபிரான்ஸ், இங்கிலாந்து, ரஷ்யா, ஆஸ்திரியா நாட்டுப் பிரதிநிதிகள், புயூரட் நகரில் துருக்கியின் முதல் மந்திரியுடன் விவாதித்தனர். இதன் விளைவு என்னவென்றால் லெபனான் நாடடிற்கு தனி அந்தஸ்தும் உள்நாட்டு சுதந்திரமும், அதற்கு ஐரோப்பிய நாடுகளின் உத்தரவாதமும் அளிக்கப்பட்டது. துருக்கிய சுல்தான் ஒரு கிறிஸ்துவ ஆளுநரை லெபனானுக்கு அமர்த்துவார்; அதை ஐரோப்பிய நாடுகள் அங்கீகரிக்க வேண்டும். இந்த சுய ஆட்சிப் பிரதேசத்தில் பேக்கா சமவெளிப் பிரதேசமோ, கடற்கரை ஓரம் உள்ள நகரங்களோ, புயூரட் நகரமோ சேரவில்லை. புயூரட் தான் லெபனானின் இப்போதைய தலைநகர்.

ஆகவே அமெரிக்காவிற்கு வந்த மக்கள் மத்தியதரைக் கடலுக்கு கிழக்கேயுள்ள கடற்கரைப் பகுதி மக்கள் சிரியா நாட்டு மக்கள் என்றே கருதப்பட்டனர். அவர்கள் டமாஸ்களி லிருந்தாவது சிடார் மரங்கள் வளரும் மலைப் பகதியி லிருந்தாவது வந்தாலும் சிரியர்கள் என்றே அழைக்கப்பட்டனர்.

முதல் உலக யுத்தத்திற்குப் பிறகு துருக்கிய நாடு விலக்கப்பட்டு ஃபிரான்ஸ் நாடு ஐக்கிய நாட்டு சபையிடமிருந்து சிரியாவையும் லெபனான் நாட்டையும் ஆள உரிமை பெற்றது. இங்கிலாந்து பாலஸ்தீன நாட்டை ஆள உரிமை கொண்டது. இப்படி இருந்த போதிலும் அமெரிக்கா சென்ற இவர்களை எல்லாம் சிரியா நாட்டின் மக்களாகவே கருதினார்கள்.

இரண்டாம் உலக யுத்தத்தில் லெபனான், சிரியா இரண்டு நாடுகளும் பிரான்சு ஆதிக்கத்தை உதறிவிட்டு சிரியா என்றும் லெபனான் என்றும் தனித்தனியே ஐக்கிய நாடுகள் சபையில் பிரதிநிதித்துவம் பெற்றன.

ஆகவே ஜிப்ரானின் நூல்களில் வரும் என் சிரிய நாட்டு மக்களே! எனும்போது அது சிரிய மக்களையும், லெபனான் மக்களையும் குறிக்கும்.

## இளமை

''என் இளமைப் பருவத்திலே பல நூல்களை எழுதினேன்; அவற்றில் கவிதைகளும் உரைநடைகளும் நிறைந்துள்ளன. நான் கட்டாயம் அவற்றை வெளியிடும் பெரிய குற்றத்தைச் செய்ய மாட்டேன்'' என்று ஜிப்ரான் தன் நண்பருக்கு எழுதினார். இருந்தாலும் ஜிப்ரானைப் போற்றி புகழும் அபிமானிகள் ஜிப்ரான் எழுதிய ஒவ்வொன்றையும், எல்லாவற்றையும், கண்டவற்றை யெல்லாம் வெளியிடுகின்றனர். ஜிப்ரானின் நெருங்கிய நண்பர் அவர் உயிருடன் இருக்கும்போதே அவர் எழுதிய வற்றை யெல்லாம் வெளியிட்டார். ஜிப்ரான் அதற்கு எதிர்ப்புக் குரல் எழுப்பினார். ''நான் செய்த பழைய செயல்களைக் குறிப்பிடா தீர்கள்; அவற்றின் நினைவே என் இரத்தத்தைக் கொதிப்படையச் செய்கிறது'' என்றார்.

ஜிப்ரானின் இளமைக் கால புத்தகங்கள் கதை கட்டுரைகள் எல்லாம் முக்கியமில்லாதது; சாதாரண மானது; ஒதுக்கத்தக்கது என்று எண்ணிவிடாதீர்கள்! ஜிப்ரான் தன் 48-ஆவது வயதில் மரணமமைடந்தார் (6-12-1883-10-4-1931).

ஓர் எச்சரிக்கை; அவருடைய பலப்பல புத்தகங்களாக இப்போது இருப்பதெல்லாம் ஒரு காலத்தில் நண்பருக்குக் கடிதமாகவோ பத்திரிகைகளுக்குக் கட்டுரையாகவோ எழுதப்பட்ட மூலங்களே என்பதை மட்டும் எல்லோரும் மனதில் கொள்ள வேண்டும்; மறந்துவிடக் கூடாது.

## மறுபதிப்பு

ஜிப்ரானின் புத்தகங்கள் அனைத்தும் இல்லை யெனினும் பெரும்பாலானவை கணக்கிலடங்காதபடி,

மறுபதிப்பு செய்யப்பட்டன. இப்படி வெளியான சிலவற்றில் முதன் முதலாக நூல் எப்போது பதிப்பித்து வெளியிடப்பட்டது என்ற தேதியே இல்லாமல் வெளிவந்துவிட்டன; இதன் உள் அடங்கிய கதை, கவிதை, கட்டுரைகள் முதலில் எப்படி எதில் வெளிவந்தன என்றே தெரியவில்லை; முக்கிய அராபிக் மொழியில் வந்த நூல்களின் முதல் பக்கத்தில் மறுபதிப்பு தேதி மட்டும் உள்ளது.

இனி வரும் காலத்தில் வாழ்க்கை வரலாற்றை எழுதும் ஆசிரியர்கள் செய்தித் தாள்களில் எந்த சூழ்நிலையில் எந்த கால கட்டத்தில் ஜிப்ரான் எழுதினார் என்பதையே வரையறுத்து கூற இயலாது?

உதாரணத்திற்கு 'அரபிக்' பதிப்பு ஒன்றில் ''ஆத்மப் புரட்சி ஜிப்ரான் 1959'' என்று உள்ளது. இன்றும் ஆங்கில பதிப்பு 'எனிம்மான்' வெளியிட்டதில் ''ஆத்மப்புரட்சி'' ஜிப்ரான், அராபிக்கிலிருந்து மொழி பெயர்த்தது; ''முதல் வெளியீடு 1949'' என்று இருக்கின்றது. ஆனால் முன்னுரையில் இக்கதைகள் 1908-ஆம் ஆண்டில் எழுதப்பட்டன என்று விளக்கப் பட்டுள்ளன.

'பார்பரா யங்' இந்த புத்தகமே புயூரட் நகரின் கடைவீதிகளில் 1901-ஆம் ஆண்டு முதல் 1903-ஆம் ஆண்டு வரையில் கொளுத்தப்பட்டன; எரிக்கப்பட்டன என்று எழுதி இருக்கின்றார்.

## மேற்கோள் குறி

அரபிக் மொழியில் மேற்கோள்குறி ''....'' இல்லை. இருந்தாலும் பிரெஞ்சு மொழி, ஆங்கில மொழி படிக்கும் அரபிக் மாணவர்கள் அடிக்கடி இக்குறியை ஒழுங்கு இல்லாமல், நினைத்தபடி உபயோகிக்கின்றனர்.

ஒரு லெபனான் நாட்டு வாழ்க்கை வரலாற்று ஆசிரியர் சில பத்திகளை அரபிக்கில் எழுதினார். அதில் மேற்கோள் குறியை உபயோகித்தார். அவற்றை ஜிப்ரானின்

பழைமையான ஆதி அந்தமற்ற காலத்தில் அடங்காத ஒரு சூழ்நிலையில் நம்மை மூழ்கடிப்பது போல'' என்று கூறுகின்றார்.

''இது ஓர் பேரழகு மிக்க காடுகள், மனித நடமாட்டமற்ற தூய்மையும் அழகும் பொருந்தியது. இங்கிருந்தால் நம் மனம் அதிலேயே லயித்து, ஒன்றி ஈர்க்கும் பெரும் சக்தி படைத்தது. நிலைத்த, முடிவற்ற, அழிவற்ற உலகம் எப்படி இருக்கும் என்று எண்ண வைக்கும்'' என்று கூறுகின்றனர்.

லெபனான் நாட்டு மலைகளையெல்லாம் 'சிடார்' (தேவதாரு) மரங்கள் அடர்த்தியாக பல நூற்றாண்டுகளாக மூடி மறைத்திருக்கிறது. இது பற்றி பைபிள் நூலில் 103 இடங்களில் குறிப்பிடப் பட்டுள்ளது. அவற்றை 'கடவுளின் சிடார்' என்றும் 'கடவுளின் சொர்க்கத்தில் உள்ள சிடார்' என்றும் குறிப்பிடுகின்றனர்.

இப்போது ஜிப்ரானின் வீட்டிற்கு அருகே உள்ள 'சிடார்' மரங்களை 'புனித சிடார்' என்று கூறுகின்றனர். சிடார் மரங்களைப் பாதுகாக்கும் பொறுப்பையும், அதன் பாதுகாவலர் என்ற பட்டத்தையும் அளிப்பதானால் அந்த பெருமை 'பெச்சிரி' நகரையே சேரும். ஜிப்ரானின் தாத்தா ஓர் பாதிரியார்; இவர் குடும்பமே முதல் உரிமை பெற்றவர்களாக இருப்பார்கள். இந்த சிடார் கடவுளை அடையும் வாயிலைத் திறக்க ஜிப்ரானின் முன்னோர்கள் 'பொயினீஷியன்' என்னும் பிரிவினர்; இவர்கள் தங்கள் மதச்சடங்குகளையெல்லாம் இந்த சிடார் மரக்காடு களிலேயே கொண்டாடினார்கள். சிடார் மரங்கள் அவர்கள் வாழ்வோடு ஒன்றி உரிமையாயின.

மிகப் பழைய கதைகளான 'ஜீலகாமிஸ்' இஸ்டார், தாமிஷ் இவை அனைத்தும் இந்த சிடார் மரக்காடு களிலேயே நிகழ்ந்தன. (இவை 'One White Race' ஒரு வெள்ளை இனம் என்ற நூலில் உள்ளன.)

எழுத்துக்கள் என்று விளக்கினார். நடைமுறையில் மேற்கோள்குறி வரலாற்று ஆசிரியரின் கற்பனையின் சிதறல்கள் என்பதைக் காட்டவே, கோடிட்டு உணர்த்தவே உபயோகிக்கப்பட்டது. அதை மொழி பெயர்த்தபோது இந்த மேற்கோள் குறிகள் நீக்கப்படவில்லை. ஒரு வாழ்க்கைக்குறிப்பு ஆசிரியர் ஆங்கிலத்தில் எழுதும்போது, அரபிக் மொழிப் பயிற்சி அற்றவராய் இருப்பின் இந்த மேற்கோள் குறியை ஜிப்ரானின் சொந்த கருத்துகளாய், நம்பிக்கைகளாய், வாக்குமூலம் என தவறாக உணர்ந்து கொள்கிறார்கள்.

இந்த விதமான குழப்பங்கள் ஜிப்ரானுக்கு நாம் இழைக்கும் தீங்கு நல்லதல்ல. நியாயமல்ல. வருங்கால ஆசிரியர்களுக்கும் நியாயமல்ல; படிப்பவர்களுக்கும் நல்லதல்ல. ஆகவே தான் நான் இந்த எச்சரிக்கையை அவசியமெனக் கருதுகிறேன்.

# 5

# ஜிப்ரானின் இரட்டைத் தோற்றம்

## Gibran's Dual Personality

மனிதன் சூழ்நிலையின் சுற்றுச் சார்பின் செய்ப்பொருள். ஜிப்ரான் பிறந்தபோது மத்திய கிழக்கு நாடுகளின் பொருளாதாரம் மோசமாய், அரசியல் நிலைமை மிகவும் மோசமாய் இருந்தது. பல ஆண்டுகள் துருக்கி நாடு பல போர்களில் ஈடுபட்டிருந்தது; அவற்றில் எல்லாம் துருக்கியே எல்லா கஷ்டங்களையும் அடைந்தது. ஆகவே துருக்கிய சாம்ராஜ்யத்தின் எல்லைக்கோடு சுருங்கிக் கொண்டே வந்தது. இதற்கிடையில் துருக்கி நாட்டினுள் அரசாங்கம் செய்யும் கொடூர ஆட்சி அதிகரித்துக் கொண்டே இருந்தது. எல்லாப் பகுதிகளிலும் சிறுபான்மையான குடிமக்களை வருத்தி வாட்டவும், கைது செய்து திட்டி தண்டிக்கவும் முற்பட்டனர். லெபனான் நாட்டு மக்கள் சேனைப் படையிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருந்தனர்; அவர்களுக்கு 1860-ஆம் ஆணடில் ஐரோப்பிய நாடுகளின் நிர்ப்பந்தத்தால் சுய உரிமை வழங்கப்பட்டிருந்தது என்பது கொடுமையான ஆட்சி செய்யும் இராணுவத்தின் பிடியிலிருந்து தப்பிக்க வேண்டி நகரங்களிலிருந்து லெபனான் நாட்டு மலைப் பிரதேசத்திற்குப் பல குடும்பங்கள் குடிபெயர்ந்து சென்றன. பல முஸ்லிம் குடும்பங்கள் கிறிஸ்துவ மதத்தைத் தழுவி மதம் மாறினர்.

அரபு நாடுகள் அனைத்தும் இரகசிய சங்கங்கள் தோன்றி துருக்கிய ஆட்சியைத் தூக்கி எறிய தேன் கூடுகள் போல் வளர்ந்து கொண்டிருந்தன. துருக்கி அரசாங்கம் யாரையும் நம்ப முடியவில்லை. ஆகவே துருக்கியர் அல்லாதவரை அரசாங்க அலுவல்களிலிருந்து திட்டமிட்டு வெளியேற்றினார்கள்; அவர்களுக்குப் பதிலாக துருக்கி நாட்டு மக்களை அவ்வேலையில் அமர்த்தினர்; நீதிபதிகள்கூட பதவியிலிருந்து விலக்கப்பட்டனர். இந்த நிலையில் இரகசிய சங்கங்கள் தைரியம் கொண்டு பாரீஸ் நகரில் நடந்த அரபு நாடுகளின் மகா நாட்டிற்குப் பிரதிநிதிகளை அனுப்பி வைத்தன. பல சிரியன்களும் லெபனான் நாட்டு மக்களும் அமெரிக்காவி லிருந்து வந்து பாரீஸில் இம்மகாநாட்டில் கலந்து கொண்டனர்; அவர்கள் சீர்திருத்தம் செய்யும்படி கோரினார்கள்; பல தலைவர்கள் தங்கள் உயிரையே பணயம் வைத்தனர். அவர்களை முக்கியமான பொது சதுக்கங்களில் தூக்கிலிட்டு மற்ற ஜனங்களின் மனதிலே பீதியையும் பயத்தையும் உண்டாக்கினார்கள்.

ஜிப்ரான், அமெரிக்காவில் வசிக்கும் இளைஞனாய், தூக்கு கயிற்றுக்கு எட்டாதவனாய், இருந்தான்; தன் நாட்டு மக்களை புரட்சி செய்யும்படி வேண்டுகோள் விடுத்தான். அரபிக் பத்திரிகைகள், புத்தக வெளியீடுகளுக்கு கட்டுரைகள் எழுதினான். 'என் நாட்டு மக்களே' என்று தலைப்பிட்டு நிறைய எழுதினான். இந்த கட்டுரைகள் எல்லாம் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டு எந்தவிதமான விளக்கங்களும் இன்றி வெளிவந்தன; இது ஜிப்ரான் தன் நாட்டு மக்களை அவர்கள் வந்து குடிபுகுந்த அமெரிக்க நாட்டிற்கு எதிராக புரட்சி செய்யத் தூண்டுவது போல் நினைத்தனர். எனவே ஜிப்ரானில் நாம் இரட்டைத் தோற்றத்தைக் காண்கின்றோம். அவர் அரபிக் மொழியில் தன் நாட்டு மக்களை ஆயுதம் ஏந்த ஊக்கம் தந்தார்; ஆங்கிலத்தில் எழுதும் போது சமாதானமும்

மனத்திருப்தியும் வேண்டுமென்று கோரினார். கீழ்க்கண்ட கவிதை ஓர் உதாரணம். இது அவர் நாட்டு மக்களுக்கு எழுதியது; அதை மொழி பெயர்த்து வெளியிட்ட போது ஒருவிதக் குறிப்பும் இல்லாததால் வேறு விதமாக எண்ண வைத்தது. இனி தொடர்ந்து லெபனான் மக்களுக்கு, சிரியா நாட்டு மக்களுக்கு எழுதிய 4, 5 கவிதைகளில் எப்படி அமெரிக்காவிற்கு ஒரு தோற்றமும் சிரியா லெபனானுக்கு ஒரு தோற்றமும் உண்டாகின்றது. மேலும் பார்க்கலாம் :

''என் நாட்டு மக்களே!''

*என்னிடம் என்ன வேண்டும் என் நாட்டினரே?*
*பொய்யான சத்தியம் செய்து,*
*வார்த்தைகளால் மாளிகைக்கட்டி,*
*வெறும் சொற்களால் கோயில் கட்டி,*
*கனவையே கூரையாக்கி, உங்களை*
*ஏமாற்ற வேண்டுமென விரும்புகிறீர்களா?*
*அல்லது பொய்யர்களின் புரட்டுகளை,*
*தகர்த்தெறிந்து தூள் தூளாக்கி,*
*கோழைகளின் கோட்டைகளை,*
*கொடியவர்கள், கபடர்களின்,*
*நாடகத்தைக் கிழித்தெறிந்து,*
*கொடுங்கோலனின் ஆட்சியை*
*அழித்து ஒழிக்க வேண்டுகிறீர்களா?*
*நான் என்ன செய்ய வேண்டும் சொல்லுங்கள்,*
*என் நாட்டினரே! கூறுங்கள்!*

*நான் புறாக்களைப் போல கூவட்டுமா?*
*அதில் தான் நீங்கள் மகிழ்வீர்களா?*
*நான் சிங்கம் போல் சீறி கர்ஜனை*
*செய்யட்டுமா? என் திருப்திக்கு?*
*நான உனக்காக பாட்டுகள் பல பாடினேன்;*

*ஆனால் என் பாட்டிற்கு நீ ஆடவில்லை!*
*நான் புலம்பினேன்; கூவினேன்!*
*நீயோ கண்ணீர் சிந்திக் கதறவும் இல்லை!*
*நான் ஒரே சமயத்தில் பாடவும்*
*அழவும் வேண்டுமென விரும்புகிறீர்களா?*

*உங்கள் ஆத்மாக்கள் பசியால் துடிக்கின்றன;*
*அறிவு எனும் ரொட்டி குவிந்து கிடக்கிறது;*
*பள்ளத்தாக்கிலே கற்கள் கொட்டிக் கிடப்பதுபோல்!*
*ஆனால் என் தோழனே நீ உணரவில்லையே!*
*உன் இதயம் தாகத்தால் தவிக்கிறது;*
*உன் வீட்டைச் சுற்றி வாழ்க்கை ஊற்றுக்கள்*
*பொங்கிப் பெருகி வழிகின்றன; ஆறாய் ஓடுகிறது!*
*என் நண்பனே! நீ நீரைக் குடிக்கவே இல்லையே!*
*கடலிலே அலைகள் பொங்கிச் சீறுகின்றன்!*
*அலைநீர் வற்றி பின்வாங்குகிறது!*
*நிலவு வளர்ந்து வளர்ந்து முழு நிலவாகிறது;*
*அதுவே தேய்ந்து தேய்ந்து இருளாகிறது!*
*ஆண்டிற்கும் பருவங்கள் மாறும்;*
*கடுங் கோடைக்குப்பின் வரும் குளிர்;*
*இன்ப வசந்தம் பின் இலை உதிர்க்கும்;*
*ஆனால் நீதி என்றும் மாறுவதில்லை!*
*நீதி என்றும் தட்டுத் தடுமாறுவதில்லை!*
*நீதி என்றும் செத்து மடிவதுமில்லை!*
*நண்பனே! என் நாட்டோனே! பின் நீ ஏன்*
*உண்மையை உருக்குலைக்கின்றாய்?*
*உண்மையை வெட்டி முடமாக்க முயல்கின்றாய்?*

*நான் உன்னை இரவின் அமைதியிலே அழைத்தேன்!*
*உனக்கு நிலவின் பேரழகைக் காட்ட முற்பட்டேன்!*
*கண்சிமிட்டும் உடுக்களின் கண்ணியத்தை,*

*வானிலே வாரி இறைத்த வைரக்குப்பையை,*
*கணக்கிலடங்கா மாணிக்கக் கற்களை,*
*பளிச்சிடும் இந்து மகாக்கடல் முத்துக்களை,*
*காட்டத் துடித்தேன்; களிக்க அழைத்தேன்!*
*ஆனால் பதறி, பயந்து, துடித்து எழுந்தாய்,*
*வாளினை உருவி, ''எங்கே பகைவன்?*
*எங்கே? அவனை வெட்டி வீழ்த்துவேன்!''*
*என்றே மலர்ந்தது, பகைவன் குதிரை ஏறிவந்தான்.*
*நான் உன்னைக் கூவி அழைத்தேன்;*
*நீயோ எழுந்திருக்கவே மறுத்தாய்!*
*தூக்கத்திலே சுகம் கண்டாய்! ஆம் நீ*
*கனவில்தான் பகைவனை வெட்டி வீழ்த்துவாய்!*
*வெட்கம் ! வெட்கம்! ஐயோ பரிதாபம்!*

*''நாம் மலைஉச்சிக்கு ஏறுவோம்!*
*நான் உலகின் ராஜ்யங்களைக் காட்டுவேன்''*
*என்று உன்னைக் கூவி அழைத்தேன்.*
*ஆம் அதற்கு நீ என்ன பதில் சொன்னாய்?*
*''இந்த மாமலையின் மடியிலேதான்,*
*பசுமை நிறை பள்ளத்தாக்கின் ஆழத்தில்தான்,*
*என் தகப்பனும் தாயும், தாத்தாவும் பாட்டியும்,*
*வாழ்ந்தார்கள்; உழுதார்கள்; உழைத்தார்கள்!*
*இதே மலை நிழலில், மர நிழலில் மாண்டார்கள்;*
*மடிந்தார்கள்; மண்ணிலே புதைந்தார்கள்!*
*மண்புழுவாய் நெளிந்தார்கள்; ஒழிந்தார்கள்*
*குகைகளிலே புதைக்கப்பட்டு உறங்குகின்றார்,*
*ஐயோ அவர்களை விட்டு விட்டா நான் வருவேன்?*
*அவர்கள் போகாத இடங்களுக்கு ஊர்களுக்கு*
*நாடுகளுக்கு நான் எப்படிப் போவேன்? என்றாய்!*

''நண்பனே! நாட்டோனே! வா நாம் சமவெளி
செல்வோம்; நல்வயல் வெளியை
வற்றாத வளம் கொழிக்கும் பொன் கோதுமை
குவியலை, நற்கனியை, செம்பொன்னை,
நல்வயிர மணிகளை, பொற் களஞ்சியத்தை,
காட்டுகின்றேன்; களிப்பூட்டுகின்றேன்.''

''ஐயோ நான் மாட்டேன், வரவே மாட்டேன்
தங்கும் சமவெளியில் கொள்ளையர்கள் பலபேர்;
பதுங்கித் திரியும் திருடர்களும் பலபேர்
வெட்டுவோர்; குத்துவோர் கொலை செய்வோர்
பலப் பலபேர் நான் வரவே மாட்டேன்!''
என்றே மறுத்துரைத்தாய்; என் செய்வேன்?

''பொங்கும் கடற்கரையில், தூங்கும்
மணல் பரப்பில், கொழிக்கும் கடல் வளங்கள்,
வெண் முத்து, நல்முத்து, செம்பவளம்,
சங்குகளும், பல்கடல் பொருளும் கொழிப்போம்''
என்று நான் வேண்டினேன்; மறுத்து விட்டாய்
''கிடு கிடு பள்ளமும்,பாதாளம் காணும்
ஆழமும், கர்ஜிக்கும் கடல் அலையும்
பொங்கும் கடல்நீரும் என்னை பயப்படுத்தி,
மரணமே வந்துவிடும், நான் வரவேமாட்டேன்.''

நான் உன்னைக் காதலிக்கின்றேன்
என் நாட்டு செம்மல்களே! சிங்கங்களே!
உன்மேல் நான் கொண்ட காதல்
எனக்குத் துன்பத்தையே தருகின்றது.
நான் இன்று உன்னை வெறுக்கின்றேன்,
வெறுப்பென்ப தோர் பெரு வெள்ளம்,
அதில் உலர்ந்த மரம் மிதந்து போகும்
இடிந்த வீடுகள், கட்டடங்கள், மாளிகைகள்

எல்லாம் மட்டமாகி ஒதுக்கப்படும்.
நான் உன் பலவீனத்திற்கு பரிதாபப்பட்டேன்,
ஆனால் என் பரிதாபம் உன் சோம்பலைத்தான்
உயர்த்தியது; உற்சாகப்படுத்தியது.

என் நாட்டு மக்களே! என்ன வேண்டும்
என்னிடம் உங்கள் கோரிக்கை என்ன?
வாழ்க்கையில் உங்கள் கோரிக்கை என்ன?
உங்களை நான் இனியும் வாழ்க்கையின்
குழந்தைகள் எனக் கருதமாட்டேன்!
குறி சொல்வோன் கைகளிலே
உங்கள் ஆத்மா கெஞ்சிக் கூத்தாடும்,
சூனியக்காரனிடம் பல்லிளிக்க,
மந்திரக் காரனிடம் மயங்குகின்றீர்;
உங்கள் உடல்களோ இரத்தவெறி
கொண்டலையும் கொடிய ஆள்வோரின்
கைப்பிடியில், நடுங்கி அஞ்சி சாகும்.
உன் நாடே ஆக்ரமித்தவனின் காலடியில்
தரையை நக்க வீழ்ந்து வணங்கும்!
நீ என்னதான் எதிர்பார்க்கின்றாய்?
உன் தேவைதான் என்ன? சொல்
சூரியனின் முன் நின்று சொல்வேன் பார்க்கலாம்!

ஐயோ என்ன பரிதாபம்! எவ்வளவு கேவலம்
உன் வாளெல்லாம் துருப்பிடித்து தோய்ந்ததே!
உன் ஈட்டி முனையெல்லாம் உடைந்து ஒழிந்ததே!
உன் கேடயம் மண்படிந்து பாழ்பட்டதே!
நீ ஏன் இன்னும் போர்முனையில் நிற்கிறாய்?
நீ எப்படி போரிடுவாய்; வெற்றி கொள்வாய்?
உனக்கு வெளிவேஷம்தான் மதமானது!
உனக்கு கபட நாடகமே வாழ்வானது!

உனக்கு பாசாங்குத்தனமே தொழிலானது!
உனக்கு மண்ணான உடம்பே முடிவானது!
என் இன்ப நாட்டானே ! நீயேன் உயிர் வாழ்கிறாய்?
பாதகனே! ஈனனே! உதவாக்கனியே!
இழிவானவனே! தன்மானம் இழந்தவனே!
உனக்கு மரணம்தான் ஒரே ஓய்விடமா!
நீ வாழ்ந்து என்ன பயம்? இறந்து படு!

இளமையிலே வாழ்க்கை ஓர் தீர்மானம்,
திடமான நெஞ்ச முடிவு; அசையா நிலை;
மனித நிலையிலே வாழ்க்கை ஓர் போராட்டம்
சண்டை, சச்சரவு, விவாதம் எல்லாம்!
முதுமையிலே வாழ்க்கையே ஞானம்!
பேரறிவு, விவேகம், பாண்டித்தியம்.
ஆனால் என் நாட்டின் நன்மக்களே!
நீங்கள் கிழவனாகவே பிறந்தீர்கள்
உங்கள் உடலிலே பலமே இல்லை,
உங்கள் தலைகளோ குன்றி குறுகி விட்டன.
உங்கள் தோல்கள் உலர்ந்து வாடிவிட்டன
நீங்கள் குழந்தைகளாகவே மாறிவிட்டீர்,
நீங்கள் சகதியிலே சேற்றிலே விளையாடுகிறீர்,
ஒருவர் மேல் ஒருவர் கல்லெறிந்து
சொல்லெறிந்து, செத்து மடிகின்றீர்!

மனித சமுதாயம் ஓர் தெளிந்த நீரோடை;
பளிங்கு நீர் பாயும் வற்றாத ஆறு,
பண்ணிசைக்கும் பாங்கான அருவி,
சிற்றலைகள் படர பறந்தோடும் காட்டாறு,
பெருமலைகளின் இரகசியங்களை, செல்வங்களை
ஏந்தி கடலின் ஆழத்தில் மறைத்துவிடும்.
ஆனால் நீயோ ஒரு சேற்றின் குட்டை!
அதில் ஆயிரம் புழுக்கள் நெளிகின்றனவே!

வண்டலிலே நாசக் கிருமிகள் கோடி கோடி!
கரையெல்லாம் பாம்புக் கூட்டம்!

ஆத்மா புனிதமானது, தெய்விகமானது,
அதன் நீல நிற எரிசுடர், அணையாஒளி
கடவுளின் முகங்களை பிரகாசமாக்கும்,
ஆனால் உங்கள் ஆத்மாக்கள்?
உங்கள் ஆத்மாக்கள் சுட்ட சாம்பலாய்,
பயனற்ற வெறும் மண்ணாய், தூசியாய்
காற்று ஏந்திச் சென்று பனிமலை மேல்தூவ,
புயல் காற்று, சாம்பலை கடல் ஆழத்தில்
கொட்டி புதைத்து மூடி விட மாட்டாதா?

என் நாட்டு மக்களே! நான் உங்களை வெறுக்கிறேன்
நீங்கள் பெருமை, புகழ், உயர்வு அனைத்தையும்
இகழ்ந்தீர்கள்; நிந்தித்தீர்கள், ஒதுக்கினீர்கள்.
நான் உங்களைத் தூற்றுகின்றேன்
நீங்களே உங்களை தூற்றித் தாழ்த்திக் கொண்டீர்!
நான் உங்களின் ஜென்ம விரோதி!
ஏன்? நீங்கள் கடவுளின் விரோதிகள்.
உங்களுக்கு அது தெரியவே இல்லை!

முதல் உலக யுத்தத்தின் போது கணக்கிடும் நாள் வந்தது. துருக்கி, ஜெர்மனி நாட்டுடன் கூட்டாகி உலக யுத்தத்தில் பங்கேற்றது; இரு நாடுகளின் படைகளும் மத்திய தரைக்கடலுக்குக் கிழக்கே உள்ள கடற்கரைகளையெல்லாம் கவர்ந்த படைகள் முகாமிட்டது. இதனால் கூட்டு நாடுகளின் படைகள் இங்கு இறங்காமல் இருக்க எடுக்கப்பட்ட நடவடிக்கை மிக முக்கியமானது; இதனால் துருக்கி, ஜெர்மனி இரு நாடுகளுக்கும் உணவுப் பொருள் எடுத்துச் செல்லும் நாட்டிற்கு முழு முற்றுகை ஏற்பட்டு, தடுத்து நிறுத்தாமல்

இருக்க இந்த நடவடிக்கை.

லெனபான் நாடு சுதந்திரக் கோரிக்கை விடுக்க முடிவாக இந்த சலுகை அளிக்கப்பட்டது. லெபனான் தன்னிறைவு பெற்ற நாடு அல்ல. இப்போது முற்றுகை அதிகரிக்க, உணவுப் பொருள் இறக்குமதி முற்றும் இல்லாமல் போனது. இரண்டு ஆண்டுகள் தொடர்ந்து வெட்டுக்கிளிகள் வயல்களின் மேல் படையெடுத்து எல்லா பயிர்களையும், இலைகளையும், மரங்களின் இலைகளையும் ஓர் அரும்பு விடாமல் தின்று தீர்த்தது. லெபனான் நாட்டு மக்கள் பசியாலும் பட்டினியாலும் பஞ்சத்தாலும் தாக்கப்பட்டு, பாதை ஓரங்களிலும் வீட்டிலும் மாண்டார்கள். மக்கள் தலைவர்களை பொறுக்கி எடுத்து பொது இடங்களில் சதுக்கங்களில் தூக்கிலிட்டது அரசாங்கம். இந்த உலக யுத்தம் தொடர்ந்திருந்தால், மக்களினம் பூண்டோடு அழிந்திருக்கும்; கதை முடிந்திருக்கும்; ஒரு மனிதனும் இருந்திருக்க மாட்டான்.

ஜிப்ரான் இந்த மிகப் பெரிய சோக நாடகத்தை உலகிற்கு உணர்த்த அரபிக் மொழியில் கீழ்க்கண்ட ''என் மக்கள் மடிந்தார்கள்'' என்று எழுதினார். அதன் ஒரு பகுதிதான் கீழே...

''என் மக்கள் மடிந்தார்கள்''

*என் மக்கள் மடிந்தார்கள் பட்டினியால்!*
*நான் மட்டும் இருக்கின்றேன் உயிரோடு!*
*என் தனிமையிலே நான் தேம்பி அழுகின்றேன்.*
*''என் நாட்டின் சோகம் தனித்தல்ல!*
*உலகின் சோகத்தின் ஒரு பகுதிதான்!*
*என் மக்கள் விடும் கண்ணீரும்,*

அவர் சிந்திய இரத்தமும் இவ்வுலகின்
இரவு பகலும், பள்ளத்தாக்கிலும் சமவெளியிலும்
ஓடுகின்ற இரத்த ஆற்றில் பொங்கி
வழிந்து பாயும் கண்ணீர் பெருநதியில்
கலந்து ஓடும் துளிகளே அன்றோ!
ஆம் உண்மைதான்; ஆனாலும்
என் மக்கள் மௌனம் பூண்டோர்;
பேசமாட்டார்; சாதுக்கள், வாயற்றோர்
நாட்டின் அரசியலார், கட்டுவிரியன்கள்
நஞ்சுப் பாம்புகள், பெற்றெடுத்த
சோகம்தான் இப்பஞ்சமும் பட்டினியும்
இதற்கு யாரும் சோககீதம் பாடவில்லை!
ஆம் இதற்கு ராணுவ மரியாதையும் இல்லை;
பட்டினியால் செத்த பிணத்தை பார்ப்போர்
எவர்? புதைப்போர் யார்? ஐயகோ!
கொடுங்கோல் ஆட்சியை வெட்டி வீழ்த்த,
எதிர்த்துப் போர்கொடி உயர்த்தியிருந்தால்,
புரட்சிப் போர் பூண்டு, ஆள்வோனை சாடியிருந்தால்
போரிலே, புரட்சியிலே செத்திருந்தால்
மகிழ்ந்திருப்பேன்; பண்பாடியிருப்பேன்!
சுதந்திரத்தின் தாகத்தால் செத்தார் என்றால்
நான் பூரிப்பேன், பெருமையுறுவேன்,
அடிமையாய் ஊர்ந்து வாழ்வதினும்
வீரனாய் செத்துமடிவது சிறப்பன்றோ!
ஆனால் பசியால் பதை பதைத்து செத்தார்;
பஞ்சத்தின் கோரப் பிடியிலே சிக்கி மாண்டார்;
பட்டினியால் துடிதுடித்துத் துவண்டார்!

என்னே பரிதாபம்; இதுவே கேவலம்.
கையிலே வாளேந்தி முடிவற்ற சொர்க்கம் சென்றால்
நீதி, நேர்மை, நியாயம் உள்ளவரை வாழ்வார்!
உலகப் போரிலே வீரராய் என்மக்கள்
போரிட்டுச் செத்திருந்தால், மகிழ்ந்திருப்பேன்!
சூறாவளிக்காற்று சுழன்றடித்து
மரங்களையும், செடிகளையும், கொடிகளையும்,
பயிர்களையும், மக்களையும் மாய்த்த தெனில்
இது இயற்கையின் சீற்றமென்றும்,
தவிர்க்க முடியா விபத்தென்று அமைதியுறுவேன்!
நரை, திரை, புறை கண்டு தள்ளாடி,
கோலூன்றி, தவித்து சாவதினும்
சண்டையிலே சாவதுதான் சிறப்பன்றோ!
பூமி பிளந்து, கடல் பொங்கி,
பூகம்பம் என்நாட்டை விழுங்கிற்றாயின்
இயற்கையின் நியதியென்றும், மனித
சக்திக்கப்பால், ஏற்பட்ட நிகழ்ச்சி என்றும்,
மர்மத்தை அறிய முயல்வதே மடமை என்றும்,
மன ஆறுதல் அடைந்திருப்பேன்!
ஆனால் என் மக்கள் புரட்சியிலே மாளவில்லை;
சண்டையிலே சாகவில்லை;
பூகம்பத்திலே புதைக்கப்படவில்லை,
செத்தார்கள், சிலுவையிலே செத்தார்கள்;
கைவிரித்து, மெய்செத்து, கண்குத்தி,
செத்தார்கள், மடிந்தார்கள், மாண்டார்கள்
கிழக்கே ஒரு கையும் மேற்கே ஒரு கையும்
ஏந்தி இறைஞ்சுகின்றனார்; கெஞ்சுகின்றார்

*கண்களோ வானிலே, இருட்டிலே*
*எதைத் தான் தேடுகிறதோ அறியேனே!*
*என் மக்கள் மாண்டார்கள் ஏன்? எப்படி?*
*என் மக்கள் ஊமைகள்; பேசி அறியாதார்!*
*உலகமெல்லாம் பரப்பி நிற்கும் மனிதஇனம்*
*செவிடாயிற்று; எம் மக்கள் கூக்குரலே*
*கேட்காத செவிடர்களாய், கவலையற்று*
*பரிதாபமற்று, கருணையற்று, முகந்திருப்பி*
*உதாசீனம் செய்தார்களே! ஐயகோ!*
*அவர்கள் குற்றவாளியல்லர்; இறந்தார்கள்;*
*சண்டைக்காரர் அல்லர்; மடிந்தார்கள்;*
*பாலும் தேனும் புரண்டோடும் பூமியிலே*
*பிறந்தவர்தான்; ஆனால் பட்டினியால் செத்தார்கள்!*
*நகரிலேயிருந்து நகர்ந்து வந்து*
*அவர் ஆட்டு மந்தையை அப்படியே விழுங்கி*
*கோதுமை அறுவடையை கொத்திக் கொண்டே*
*ஏப்பம் விட்டார்; ஆளவந்தோர்,*
*ஆட்சி செய்தோர்; அதிகாரம் கொண்டோர்.*
*என் மக்கள் மாண்டார், மடிந்தார்,*
*துடித்தார், செத்தார், இறந்தார் ஐயகோ!*

*1914-1918 முதல் உலகப்போருக்குப்பின் பிரான்சு நாடு சிரியாவையும் லெபனானையும் 'லீக் ஆஃப் நேஷன்' இடமிருந்து ஆணைப்படி 3 ஆண்டுகளில் அவர்களே சுதந்திர அரசாங்கத்தை நிறுவி பின் ஒப்படைக்க அதிகாரம் பெற்றனர். 3 ஆண்டுகள், 6 ஆண்டுகளாகி, பிறகு 12 ஆண்டுகள் ஆகி பிரான்சுக்காரர்கள் நிரந்தரமாகவே லெபனானிலும், சிரியாவிலும் ஆட்சி செய்வது போல் நீண்டது.*

இந்த நிலைமையை மாற்றி விழிப்படையச் செய்வதற்காக ஓர் கட்டரை எழுதினார். அதுவே "நீ உன் லெபனானை வைத்துக்கொள், நான் என் லெபனானை பெற்றுக் கொள்கிறேன்."

You have Your Lebanon and
I have my Lebanon.

நீ உன் லெபனானை வைத்துக் கொள்
நான் என் லெபனானை எடுத்துக் கொள்கிறேன்.

நீ உன் லெபனானை வைத்துக்கொள். அதன் சிக்கல்களையும் குழப்பத்தையும் ஏற்றுக்கொள். நான் என் லெபனானையும் அதன் அழகையும் எடுத்துக் கொள்கிறேன்.

உன் லெபனான் மேற்கு நாட்டு மக்களுக்கும் கிழக்கு நாட்டு மக்களுக்கும் சண்டையிட, விளையாட ஓர் விளையாட்டும், போர் அரங்கம்.

என் லெபனான் பறவைகள் கூட்டம் கூட்டமாய் காலை வேளையிலே பறந்து பறந்து திரியும் ஆகாய வெளியும், ஆட்டிடையர்கள் தங்கள் ஆட்டு மந்தைகளை பச்சைப் பசும் புல்வெளிக்கு மேய்வதற்கு ஓட்டிச் செல்ல, மாலையிலே திராட்சைத் தோட்டத்திலும் வயல் வெளிகளிலும் உழைக்கும் விவசாயிகள் உழைத்து களைத்து திரும்ப, இன்பம் தவழும் லெபனானை நான் வைத்துக் கொள்கிறேன்.

நீ உன் லெபனானையும் அதன் மக்களையும் வைத்துக்கொள். நான் என் லெபனானையும் இதன் மக்களையும் எடுத்துக் ொகள்கிறேன்.

உன்னுடைய மக்களின் ஆத்மாக்கள் மேற்கு நாட்டு வைத்திய சாலைகளிலே பிறந்த ஆத்மாக்கள்; அவர்கள்

கோபமாய் பொங்கும் கடல் மேல் பாய்மரமில்லாத, சுக்கான் இல்லாத கப்பல் போன்றது. அவர்கள் மிகவும் பலசாலிகள், பேச்சு வன்மை படைத்தவர்கள், அவர்களுக்குள்ளேயே வாழும்போது; ஆனால் பலமற்ற, பேச்சற்ற ஊமைகள் ஐரோப்பிய மக்களிடையே.

அவர்கள் தைரியசாலிகள், விடுதலை வீரர்கள், சீர்திருத்தவாதிகள், தங்களின் சொந்த பிரதேசத்தில். ஆனால் அவர்கள் கோழைகள். எப்போதும் ஐரோப்பியர் களால் பின்னுக்கு இழுத்துச் செல்லப்படுவோர்கள். அவர்கள் தவளைபோல் கத்தித் தற்பெருமை பேசிக்கொள்வோர்; தங்கள் அடிமையை, கொடுங்கோல் ஆட்சி புரியும் பகைவனை, வெற்றி கொண்டதாய் தம்பட்டம் அடிப்போர். ஆனால் உண்மையில் அவர்களின் கொடுங்கோல் ஓச்சும் பகைவன் இன்றும் அவர்களின் ஆத்மாக்களிலேயே ஒளிந்து கொண்டிருக் கின்றார். அவர்கள் இன்னும் கொத்தடிமைக் கூட்டம் தான். காலம் அவர்களின் துருப்பிடித்த சங்கிலிகளை மாற்றிவிட்டு புதியதாக பளபளக்கும் பொன் விலங்குகளை மாட்டி விட்டது. அவர்கள் தங்கள் அடிமைத் தளைகளிலிருந்து விடுதலை பெற்று விட்டதாய் மகிழ்ந்து வீண்பெருமை பேசுகின்றனர். இப்படி இருக்கும் இந்த குழந்தைகள் தான் உன் லெபனான். இவர்களிலே யாராவது ஒருவரேனும் வலிமைக்கு பிரதிநிதியாய், லெபனான் மலைகளிலே உயர்ந்து வானளாவ நிற்கும் பாறை போல் இருக்கின்றார்களா? ஒருவரேனும் இதன் தூய்மையான அருவி நீரையோ, காற்றிலே தவழ்ந்து வரும் மலர் மணத்தையோ பிரதிபலிக்கிறார்களா? இவர்களிலே யார் தைரியமாக ''நான் இறக்கும்போது என் தாய்நாட்டை நான் பிறந்தபோது இருந்ததை விட உயர்ந்த நிலையில் முன்னேற்றமடையச் செய்திருக் கிறேன்'' என்று மார்தட்டிச் சொல்ல முடியும்?

இவர்களிலே யாருக்கு ''என் வாழ்க்கை லெபனான் நாட்டு இரத்தத் தடாகத்திலே உள்ள ஒரு சொட்டு இரத்தம்

என்னுடையது; லெபனானின் கண்களிலே என் கண்ணீர் துளி கரைந்துள்ளது; அவள் பூக்கும் புன்னகையிலே என் சிறுநகை சேர்ந்திருக்கிறது'' என்று தைரியமாகச் சொல்ல முடியும்!

நான் உனக்குச் சொல்லட்டுமா யார் எல்லாம் என்னுடைய லெபனானின் குழந்தைகள் என்று !

அவர்கள்தான் விவசாயிகள், நிலத்தை உழுது திருத்தி அதை தோப்பாயும், தோட்டமாயும் மாற்றுபவர்கள். அவர்கள் தான் ஆட்டு இடையர்கள்; தங்கள் ஆட்டு மந்தையை மலையிலும் புல்வெளியிலும் பள்ளத் தாக்கிலும் மேய்த்து கொழுக்கவைத்து, உங்கள் உணவாக மேசைமேல் கொழுப்பு மிக்க மாமிசத்தைப் படைத்து வைப்பவன்; நீ குளிரிலே நடுங்கி நலியாமல் இருக்க, ஆட்டு ரோமத்தைக் கம்பளமாய் பதம் செய்து கொடுப்பவன்.

அவர்கள் திராட்சை ரசம் பிழிவோர்; திராட்சையைப் பிழிந்து சாறெடுத்து காய்ச்சி பதம் செய்து சர்க்கரை கலந்து உனக்கு குடிக்கக் கொடுப்போர்.

அவர்கள்தான் சிறுவர்களின் பள்ளியைப் பராமரிப்போர்; அவர்களின் தாய்தான் முதுகு ஒடிய நூல் நூற்று பட்டாடை புனைபவள்.

அவர்கள்தான் கணவன்மார்கள் கோதுமையை விதைத்து, வளர்த்து, காத்து, அறுத்து, அடித்து பொன் மலை குவிப்போர்; மனைவிதான் கதிர்களை அறுத்து, பிரித்து, தூற்றி பொற்களஞ்சியம் ஆக்குபவள்.

அவர்கள்தான் கட்டுந்தொழிலாளிகள்; நெய்யும் நெசவாளிகள், பானை செய்யும் பாட்டாளிகள், ஆலய மணியை உருவாக்கும் உழைப்பாளிகள்.

அவர்கள்தான் கவிஞர்கள், தங்கள் ஆத்மாவையே புதுக்கோப்பையில் ஊற்றி உங்களைப் பருக வைக்கும் பெருங்கவிஞர்கள்.

அவர்கள்தான் நாடுவிட்டு நாடு குடியேறி தங்கள் இதயத்திலே தைரியமும் கைகளிலே வலிமையும் மட்டும் நம்பி, தலைமேல் புகழ், பெருமையால் ஆன மலர்ச்கிரீடமும் தாங்கி வருவோர்.

அவர்கள்தான் எங்கெங்கு சென்றாலும் வெற்றி வீரராய், எங்கெங்கு குடியேறினாலும் மரியாதையும் அன்பும் பெற்றவராய் திகழும் என் மக்கள்.

அவர்கள் குடிசையிலே தான் பிறந்தார்கள். ஆனால் அறிவெனும் அரண்மனையில் வாழ்கிறார்கள். அவர்கள் தான் லெபனானின் குழந்தைகள். இவர்கள் அணையாத ஒளி விளக்குகள்; எந்தக் காற்றாலும் அணைக்க முடியாது; அவர்கள் உப்பு போல் காலத்தால் கெடுக்கமுடியாது நிலைத்து நிற்பவர்.

அவர்கள் மெதுவாக ஆனால் நிலையாக அசையாமல் அழகை, உண்மையை, முழுமையை நோக்கி முன்னேறு கின்றனர்.

ஒரு நூற்றாண்டிற்குப் பிறகு உன் லெபனானில் என்ன மிஞ்சும்; மீதமிருக்கும்? சொல்லுங்கள்! பொய் புனைசுருட்டு, முட்டாள்தனம், அறிவின்மை, தற்பெருமை, வீண் டம்பம் இவைதான் மிஞ்சும். நீ காலம் தன் நினைவில், ஏமாற்றத்தையும், புறங்கூறல், சூது, வஞ்சனை, வெளிவேஷம், கபட நாடகம் பாசாங்கு இவற்றையெல்லாம், மறக்காமல் வைத்தருக்க வேண்டுமென விரும்புகிறாயா? நீ இந்த காற்றுவெளி மண்டலம், மரணத்தின் நிழலையும், புதை குழியின் துர்நாற்றத்தையும் பாதுகாக்கும் என்று நினைக்கின்றாயா?

வாழ்க்கை, ஒட்டு போட்ட கந்தல் துணியை உடுக்கும் ஆடையாய் ஏற்கும் என்று நம்புகிறாயா? நிச்சயமாய் நான் கூறுகின்றேன், லெபனான் நாட்டு மலையிலே உயர்ந்து வளர்ந்த ஆலிவ் மரம் நீண்டு வாழும். ஆனால் உங்கள் செயல்களும், வேலைகளும் காலத்தால் அழிந்துவிடும்.

இரு எருதுகள் இழுக்க நிலத்தை உழும் மரத்தால் ஆன உழவுக் கருவிகள் லெபனானின் வயல்வெளியை வளமாக்கும்; அது உங்கள் கனவுகளை விட விருப்பங்களை விட பெருமைமிக்கது; கண்ணியமானது.

காலத்தின் மனசாட்சி என் வார்த்தைகளை கேட்குமானால் நான் உங்களுக்குச் சொல்வேன்; லெபனான் நாட்டு பள்ளத்தாக்குகளிலே மூலிகைகளைப் பறித்து சேர்க்கும் பெண்மணியின் பாடல்கள் நீண்ட காலம் வாழும்; ஆனால் உங்களிலே உயர்ந்த வாயாடியின் பிதற்றல்கள் எல்லாம் அழிந்து விடும். உங்களால் எதையும் சாதிக்க முடியவில்லை. உங்களுக்கு எதுவும் பெற முடியாத எனத் தெரிந்தால் உங்களுக்காக இரக்கப்படுவேன்; ஆனால் உங்களுக்கு ஒன்றுமே தெரியவில்லை.

நீங்கள் லெபனானை வைத்துக் கொள்ளுங்கள். நான் லெபனானை எடுத்துக் கொள்கிறேன்.

(ஜிப்ரான் லெபனானின் அரசியல்வாதிகளை மிகவும் கடுமையாக, கசப்பாகத் தாக்கினார். ஆனால் அவர் தன் நம்பிக்கையையும், விருப்பத்தையும் மிகவும் நளினமாக அமெரிக்காவில் குடியேறிய லெபனான் நாட்டு இளைஞரிடமும் சிரியா நாட்டு மாணவரிடமும் வைத்தருந்தார். மேற்கண்ட ஜிப்ரானின் பொன்னான வேண்டுகோள் ஜிப்ரான் நாட்டு மக்களின் வீடுகளில் சட்டமிட்டு போற்றி புகழப்பட்டது; விரும்பி பின்பற்றப்பட்டது.

-ஆசிரியர் குறிப்பு)

உன்னை நான் நம்புகிறேன்

நான் உன்னை நம்புகிறேன், உன் விதியை நான் நம்புகின்றேன்.

நீங்கள் இந்த புத்துலக நாகரிகத்திற்கு மிகப்பெரிய

அளவில் உங்கள் பங்கை அளிக்கின்றீர்கள் என்று நான் நம்புகின்றேன்.

நீங்கள் உங்கள் முன்னோர்களிடமிருந்து பழைய கனவுகளை, கவிதைகளை, குறி சொல்லுதலை வருமுன் கூறுவதை பரம்பரைச் சொத்தாக பெற்றிருக்கின்றீர்கள். இவற்றை அமெரிக்க மக்களின் மடியிலே, உங்கள் நன்றியுணர்வின் பரிசாக, பெருமையுடன் கர்வத்துடன் வைக்கலாம்.

நீங்கள் இந்த மிகப் பெரிய நாட்டை நிர்மாணிக்கும் தலைவர்களிடம் சொல்லலாம்; ''நான் இளைஞன், இங்கே இருக்கின்றேன், இந்த இளம் மரக்கன்றை லெபனான் நாட்டு மலைகளிலிருந்து வேருடன் பிடுங்கி வந்து அமெரிக்க நாட்டில் நட்டு விட்டார்கள். நான் இங்கு ஆழமாக வேர் ஊன்றிப் போனேன். நான் இந்த நாட்டிற்கு உபயோகமாய் இருப்பேன், என் கனிகளை நீங்கள் உண்ணக் கொடுப்பேன்.''

நீங்கள் மக்களின் நல்லாசி பெற்ற ஆப்ரகாம் லிங்கனுக்குக் கூறலாம். ''நாசரத்தின் ஏசுநாதர் உங்கள் உதடுகளை, நீங்கள் பேசும்போது தொட்டார்; நீங்கள் எழுதும்போது உங்கள் கைகளுக்கு வழிகாட்டினார். நீங்கள் சொன்ன எல்லாவற்றையும் ஆதரித்துக் காப்பாற்றுவேன்; நீங்கள் எழுதிய எல்லாவற்றையும் போற்றிப் பரப்புவேன்''

நீங்கள் எமர்சன், வால்ட்விட்மன், ஜேம்ஸ் முதலிய அனைவருக்கும் சொல்லலாம்; ''என் இரத்த நாளங்களிலே இந்த கவிஞர்களின், ஞானிகளின், பெரியோர்களின், மேதைகளின் இரத்தம்தான் ஓடுகிறது; நான் உங்களிடம் வந்து எல்லாவற்றையும் பெற வேண்டும் என்பதே என் பேராவல்; ஆனால் நான் வெறுங் கைகளுடன் வரமாட்டேன்''

நான் நம்புகின்றேன், உங்கள் பெற்றோர் கூட இந்த நாட்டில் வளம் கொழிக்க வந்தார்கள். நீங்கள் இந்த நாட்டில் பிறந்திருப்பதும் அறிவை வளர்க்க, செல்வம் செழிக்க, வளம் பெருக்க, உழைப்பால் உயரத்தான்!

உன்னில் இந்த நாட்டின் உண்மையும் நேர்மையும் கொண்ட நல்ல குடிமகனாய் இருக்கவேதான் என்று நான் நம்புகின்றேன்.

மற்றவர்களின் சுதந்திரத்தை, உன் சுதந்திரத்தை நிலை நாட்டுமுன் ஏற்றுக் கொள்கிறாய், மதிக்கின்றாய், போற்று கின்றாய்; ஆனால் எப்போதும் உன்னுடைய உரிமையில் கருத்தாய் இரு.

சொல்லிலும், செயலிலும் சுதந்திரமாய் இரு; உன் சுதந்திரம் மற்றவர்கள் சுதந்திரத்தை பாதிக்காமல் இருக்கும்படி பார்த்துக்கொள்வதே என்று தெரிந்துகொள்.

உன் கைகளால் உபயோகமானவற்றை மிக அழகாக உற்பத்தி செய்து காட்டு; மற்றவர்கள் காதலாலும், நம்பிக்கை யாலும் உற்பத்தி செய்தததை நீ ரசிக்க, ருசிக்க, போற்ற, புகழத் தெரிந்துகொள்.

உழைப்பால் மட்டும்தான் உருவாக்க முடியும். நீ சம்பாதிப்பதை விட குறைவாகச் செலவிடு. நாளைக்கு நீ இல்லாமல் போனால் உன் குழந்தைகள் நாட்டின் மேல் ஆதாரப்பட்டு சார்ந்திருக்கக் கூடாது. சிக்னமாய் செலவு செய்.

நியூயார்க்கின் விண்முட்டும் கோபுரங்கள் முன் நின்று, வாஷிங்டன், சிகாகோ, சான்பிரான்சிஸ்கோ முதலிய நகரில் நின்று உன் இதயத்திற்குச் சொல்லுங்கள்.

''நான், டமாஸ்கஸ், பைப்லோஸ், டயாசிடான், ஆண்டியோச், முதலிய நகரங்களை உண்டாக்கிய, கட்டிய

*மக்கள் கூட்டத்தின் வழித் தோன்றல், சந்ததியில் தோன்றியவன், இப்போது நான் திடமான நெஞ்சத்துடன் உன்னையும் நிர்மாணிக்க, கட்டிச்காக்க வாழ்கின்றேன்.''*

*நீ அமெரிக்க குடிமகனாய் இருப்பதிலே பெருமையும் கர்வமும் கொள்; உன் தந்தையும், தாயும், கடவுளின் அன்பான ஆசிபெற்ற, எழில் கரங்கள் வாழ்த்துரைக்க வளர்ந்த நாட்டிலிருந்து தான் இங்கே வாழ வந்தார்கள் என்பதிலும் கர்வமடை! கடவுளின் செய்தியை கட்டளைகளைப் பரப்ப வந்தோம்.*

*சிரியாவிலிருந்து தோன்றி அமெரிக்கா வந்தடைந்த இளைஞர்களே! உங்களை நம்புகின்றேன்.*

*ஜிப்ரான் தன் கனவுகளும், சிந்தனைகளும், செயலில் உருவாகும் நாள் வரை வாழவில்லை. ஜிப்ரான் விரும்பிய லெபனான் கடைசியாக சுதந்திரம் பெற்று தனித்த சுதந்திர பூமியாய் வெற்றி பெற்றது.*

*1964-அம் ஆண்டு கோடையிலே, லெபனான் அரசாங்கம் ஒரு நான்கு வழிப் பாதையை புயூட்டிலிருந்து சர்வதேச விமான நிலையம் வரை உருவாக்கிக் கலீல் ஜிப்ரானுக் அர்ப்பணித் தார்கள். அதன் பெயர் 'நொடட் அல் மொக்டார்ரிபென்' (லெபனானின் கடல் கடந்த) இந்தப் பாதைதான் ஜிப்ரான் தன் முதற் காதலியைக் காண்பதற்காக அடிக்கடி நடந்த சென்ற பாதை. ஜிப்ரான் நேசித்தத் தாய்நாடு எப்படி எல்லாம் இருக்க வேண்டுமென கனவு கண்டாரோ அந்த விதமான கனவுகளை உள்ளடக்கியுள்ளது இப்பாதை. கண்ணைக் கவரும் ஓட்டல்கள், நவீன வான் முட்டம் கட்டடங்கள், அழகான பொழுதுபோக்கு இடங்கள், ஜெட்-கால விமான நிலையம், அதில் சிறந்த தங்கும் வசதிகள் எல்லாம் அடங்கியுள்ளது. ஒவ்வொரு நாளும் லெபனானில்*

வறுமையில் பிறந்து வெளிநாடு செல்வோர் ஜிப்ரான் பாதையிலேதான் தங்கள் வருங்கால வளமிக்க கனவுகளைத் தாங்கி பயணப்படுகின்றனர்.

''லெபனான் நாட்டு காடுகளிலே மலைகளிலே வேரூன்றிய இளங் கன்றுகள் உலகின் பல்வேறு நாடுகளிலும் நடப்பட்டு வளர்ந்து துளிர்த்து, பூத்து, காய்த்து கனிகளைக் கொட்டுகிறது''

என் மனக்கண்ணால் காண்கின்றேன். ஜிப்ரான், படையின் அணிவகுப்பை கவனித்துக் கொண்டே இருக்கின்றார்.

(அவர் எழுதவில்லையா-
''நான் கொஞ்ச நேரம் காற்றின் மேல் மிதந்து ஓய்வெடுக்கின்றேன்; என்னை இன்னொரு பெண்மணி ஈன்றெடப்பாள்''-

ஆசிரியர் குறிப்பு)

# 6

## ஜிப்ரானின்
## ஓவியமும் காவியமும்
## Gibran's Painting and poetry

இஸ்லாம் மதம் சிலைகள், உருவங்கள் வைப்பதைத் தடை செய்து உள்ளது; முகமது நபியின் உருவம் அல்லது சிலை கூட எங்கும் இல்லை. இஸ்லாமிய மதத்தனர் கிறிஸ்தவ நாடுகளை வென்று கைப்பற்றிய போது கிறிஸ்துவர்களின் மாதா கோயில்களையெல்லாம் மசூதிகாளக மாற்றி விட்டார்கள்; இதில் இருந்த சிலைகள், ஓவியங்கள் எல்லாம் சுலபமாக அகற்றப்பட்டன. மொஸாக் கலையில் செய்த அழகான சுவர் படங்கள் சாந்தால் மூடி மொழுகப்பட்டன. எனவே ஓவியங்களும் கையால் செய்யும் மண், கல், மரம், தந்தம் இவற்றால் ஆன உருவங்களும் பொம்மைகளும் இஸ்லாமிய உலகை விட்டே மறைந்து போயின. புது கட்டடங்களின் தோற்றத்தை உயர்த்தி அழகாகத் தோன்ற, கட்டடக் கலைகளும், அழகுக் கலை நிபுணர்களும், கோடுகள், கோணங்கள், கோலங்கள், அழகான இயற்கைக் காட்சிகள் இவற்றைக் கையாண்டனர்.

லெபனானில் சிறிய மாணவனாக ஜிப்ரான் படித்த போது அவரை எந்த ஒரு மனிதனின் தனி கலையும்

ஆழமாகக் கவரவில்லை; ஓவியங்கள் உள்ளத்தைத் தொடவில்லை. அரபு நாட்டு தத்துவ ஞானிகளின் புத்தகங்களை ஆழ்ந்து படித்தபோது ஜிப்ரான் அவர்கள் உருவங்களைத் தோற்றங்களை கற்பனை செய்து புத்தகங்களில் உள்ளபடி கிட்டத்தட்ட அவர்களைப் போல் உருவம் அமைத்தார். காகிதத்தல், தட்டில், மண்பாண்டங்கள் மேல் வரைந்தார். ஜிப்ரானுக்கு அப்போது வயது 17. பிறகு அவர் ஓவியம் தீட்ட ஆரம்பித்து பாஸ்டன் நகரின் ஓர் ஓவியக்கூடத்தில் தன்னுயை ஓவியங்களைக் கண்காட்சியாக வைத்தார்.

அந்த கலைக்கூடத்தில் தீ விபத்து ஏற்பட்டு, அக்கலைக்கூடமும் இவர் வரைந்த ஓவியங்கள், வண்ணப் படங்கள் எல்லாம் அழிந்து போயின. இளைஞனான ஜிப்ரானுக்கு இது ஓர் பெரிய அதிர்ச்சியைக் கொடுத்தது; ஏனெனில் ஜிப்ரான் இவற்றை விற்று அதில் வரும் பொருளைக் கொண்டு அன்றாட வாழ்க்கைச் செலவை ஈடுகட்ட நினைத்தார். பிற்காலத்தில் இதுபற்றி குறிப்பிடும் போதுதான் ஓவியக் கலையில் முற்றும் திறமை பெற்று முதிர்ச்சி அடையாததால் தான் தன் இளமைக்கால ஓவியங்கள் தீ விபத்தில் அழிந்து போயின போலும் என்று குறிப்பிட்டார். இப்போது ஜிப்ரானின் ஓவியங்களும், சித்திரங்களும் மத்திய கிழக்கு, அமெரிக்கா, ஐரோப்பா முதலிய எல்லா நாடு நகரங்களிலும் நிறைந்திருக் கின்றன.

வாழ்க்கையின் ஆரம்பத்தில் ஜிப்ரான புத்தகங்கள், கவிதைகள், கட்டுரைகள், கதைகள் எல்லாம் அரபிக் மொழியில் எழுதினார். அவர் ஒரு புது பாணியையும, சகாப்தத்தையும் மேற்கு நாட்டு சிந்தனைகளின் தாக்கம் அதிகமாய், புரட்சிக் கருத்துகள் இளைஞர்களின் உள்ளத்தை ஆட்கொள்வதாய் தன் நாட்டு மக்களைக் கவர்ந்து மாற்றம் ஏற்படுத்தியது. இருந்தாலும் இதனால் எல்லாம் அவருக்கு வாழ்க்கைக்குப் போதுமான வருவாய் வரவில்லை; ஆகவே அவர் ஓவியக் கலையில் புகழ் பெற்றவர்கள், பணக்காரர்களின் படங்களை வரைவதில்

முழு கவனம் செலுத்தினார். அவருடைய புத்தகங்களில் வரும் எல்லா சித்திரங்களும், ஆண் பெண் உருவங்களும் ஆடைகளின்றியே கறுப்பு, சாம்பல் நிற வண்ணத்தால் வரையப்பட்டன. அந்தப் படங்களின் அசைவுகள், பின்னணிகள் எல்லாம் (ஜிப்ரான் ஒருவர் மட்டுமே இவ்வுலகில் கையாண்ட தனி பாணி. இதுபோல் எவரும் தன் தத்துவ சிந்தனைகளை சித்திரங்களிலே தீட்டி பேருண்மைகளைக் கூறவில்லை) தெரிந்ததைக் கொண்டு தெரியாதவற்றை விளக்கின. அவை காதல், துயரம், வாழ்க்கை இவற்றில் மனிதனுக்கும் கடவுளுக்கும் உள்ள உறவு சம்பந்தம், பிணைப்பை விளக்குகின்றன.

ஜிப்ரானின் தனித்தன்மை என்ன தெரியுமா? அவர் ஆடைகள் ,மரங்கள், கட்டடங்கள், மாதா கோயில்கள் எந்த மதத்தயும் குறிக்கும் உருவங்கள், பூமியின் எந்தப் பகுதியையும், காட்சிகள் எதையும் தன் ஓவியங்களிலே, சித்திரங்களிலே வரயவில்லை. அவை ஜிப்ரானையும், கடவுளின் கைவினைப் பொருள்களில் ஜிப்ரானுக்கு உள்ள உறவையும் மட்டுமே விளக்கின; வெளிப்படுத்தின. ஜிப்ரானின் பெற்றோர், மூதாதையர் கடவுளை ஒரு பழைய தகப்பனாரின் நீண்ட தாடியும் தரையில் புரளும் அலைகளுடனும்தான் உருவாக்கி இருந்தார். இந்தக் கோட்பாடு, சிந்தனை எண்ணங்கள்தான் மாதா கோயிலில் இருந்தன. மத்திய காலத்தில் (இடைக்காலம்) பெரிய மனிதர்களின் நிர்மாண வேலைககளுக்கு பொருள் உதவி செய்யவும், ஒத்துழைப்பு அளிக்கவும் செய்தன மாதா கோயில்கள். ஜிப்ரானை எந்த மாதா கோயிலும் ஆதரிக்கவில்லை. இளம் வயதில் எந்த ஓர் ஓவியப் பாணியாலும் மனதைக்கவர்ந்து ஈர்க்கவிடவில்லை; அவர் சுதந்திரமாய் நிலையாக நின்று தனக்கென ஒரு தனித்தன்மை வாய்ந்த பாணியை உருவாக்கி வளர்த்தார்.

ஜிப்ரான் ஒரு சில கவிதைகளே இயற்றினார்; அவர் அரபிக் மொழிகளில் கவிதை எழுத முதலில் கற்றார்; ஆங்கிலத்தில் எழுதுவதற்கு அறியும் முன்பே அரபிக் மொழியைக் கற்றுத் தேர்ந்தார். மற்ற அரபிக் கவிஞர்களும்

ஜிப்ரானின் சூழ்நிலையும் சுற்றச் சார்புமே கொண்டு இருந்தவர்கள் நிலையும் இதுவே! அரபிக் கவிதைகளின் சட்ட திட்டங்கள், நாம் ஆங்கிலத்தில் கவிதைகள் என்பதற்கு, மோனை தொடர் மொழி என்றே பொருள். வேறு சொற்களால் சொல்ல வேண்டுமானால் அரபிக் பாடல்களை ஒரு 'மாதிரி'யாக ஒத்துக்கொண்டால், ஆங்கில மொழியில் பாடல்களே இல்லை என்றாகிவிடும்.

ஜிப்ரான் தன் வாழ்க்கையின் இளமைப் பருவத்திலேயே பெரும்பான்மையான அரபிக் கவிதைகளை எழுதி விட்டார் எனலாம். அரபிக் கவிஞர்கள் பெரும்பாலும் கவிதைகளில் உபயோகிக்கும் சொற்களை அகராதியின் துணை கொண்டு பார்த்தால் தான் புரிந்து கொள்ள முடியும்படியாக சொற்களைக் கொண்டு கவிதை பாடி கர்வம் கொண்டனர். ஜிப்ரானின் அரபிக் கவிதைகள் ஒரு புது சகாப்தத்தை உருவாக்கியது; சுருக்கமான சாதாரண வார்த்தைகளைப் பயன்படுத்தியே கவிதை எழுதி ஒரு புதிய அடிவானத்தைக் காட்டினார்.

ஜிப்ரான் தன் வாழ்வின் பிற்பகுதியில் ஆங்கில வாசகர்களுக்காக பாட்டெழுதினார். ஜிப்ரானின் படைப்பாற்றலைப் பொறுத்தவரை ஆங்கிலத்தில் கவிதை எழுதுவது என்பது ஷேக்ஸ்பியரின் எல்லா கவிதைகளையும் நாடகங்களையும் சாதாரண ஆங்கிலத்தில் திரும்ப எழுதுவது போல ஆகும். ஆகவே ஜிப்ரானின் மிக அதிகமான நூல்களிலும் மிகக் குறைவான கவிதைகளே உள்ளன எனலாம்.

அவர் எந்த தத்தவ ஞானத்தை உரைநடையில் எழுதினாரோ அதையேதான் கவிதைகளிலும் எழுதினார். கீழ்க்கண்ட வரிகள் மொழிபெயர்க்கப்பட்டவை அவரின் தத்துவங்களுக்கு ஓர் உதாரணமாகும்.

கடல் அலை பின்வாங்கியபோது
நான் மணல்பரப்பில் ஓர் வரி எழுதினேன்
உள்ளத்தும் ஆத்மாவிலும் உள்ளதையெல்லாம்

ஒப்பித்தேன்; எழுத்தால் எழுதினேன்.
நான் மறுபடியும் அலை உயர்ந்தபோது
படித்து சிந்திக்க ஓடிவந்தேன்,
நான் கடற்கரையில் கண்டதென்னை?
அப்பப்பா? என் அறிவின்மையைத் தான் கண்டேன்!

ஜிப்ரானின் அரபிக் கவிதைகளில் ஒன்றான 'ஊர்வலம்' (The Procession) இருவேறு ஆசிரியர்களால் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டது. இரண்டு நூல்களையும் ஒத்திட்டுப் பார்க்கும்போது மாறுபாடுகள் மிக அதிகமாக உள்ளன; அதிலே ஏதோ சில காணவில்லை. நானே அதை மொழிபெயர்க்க முயன்றாலும் அவர்களைவிட நன்றாக செய்ய முடியும் என்று சொல்ல முடியாது. ஒரு மொழியிலிருந்து இன்னொரு மொழியில் எழுதும்போது மொழியின் ஆட்சியிலும் சொற்களை உபயோகித்தலிலும் அடிப்படையில் சில சொற்களை மொழிபெயர்க்க இயலாதவாறு இயற்கையாய் அமைந்த சில பொருள்கள், சொற்கள், வழக்குகள் தங்கிவிடுகின்றன. (உதாரணம் ''போனால் போகட்டும் போடா!'' என்பதை ஆங்கிலத்தில் எப்படி எழுத முடியும், சொல்லுங்கள்; முயன்று பாருங்கள்!) ஓர் ஆசிரியர் மொழிபெயர்த்தார் ''தெளிவற்ற உருவமற்ற காரணத்தால், மொழிபெயர்க்க முடியாத குணத்தை, சொல் ஆட்சியை உடைய அரபிக் மொழி... சில சமயங்களில் சமயசந்தர்ப்பத்தால் நேரான மொழி பெயர்ப்பிலிருந்து விலகிச் செல்ல அவசியமாகிவிடுகிறது; அப்போதுதான் ஜிப்ரானின் வலிமைமிக்க, சக்தி வாய்ந்த செய்தியை, எண்ணங்களை சிந்தனைகளை உள்ளபடி முழுமையாக கைக் கொள்ள முடிகிறது.''

அரபிக் மொழி தெரிந்த ஒரு விமர்சகர் ''அரபிக் மொழி ஓர் வேகமும், சக்தியும், உணர்ச்சியும் நிறைந்த மொழி. அதன் செழிப்பான, சொற்களின் தொகுதி மிக்க, சத்தான விருத்தியுள்ள வார்த்தைகளும் மிக அழகான நயமும், இனிமையும் நிறைந்தது. அதன் மிக

மென்மையான, நளினமான, ஒலி நயமும், பொருள் செறிவும், நிறைந்து இனிமையான வீணை ஒலி எழுப்பி கேட்போரின் கண்களிலிருந்து கண்ணீரை வரவழைக்கும், இன்றேல் பெரு மகிழ்ச்சியில் தன்னையே மறந்த மன நிலையை ஏற்படுத்தும்.''

நாம் அரபிக் மொழியின் உணர்ச்சியையும், வேகத்தையும், சக்தியையும், இனிமையையும் மொழி பெயர்ப்பில் இழந்தாலும், அது ஜிப்ரானின் அடிப்படையான தத்துவத்தை, சிந்தனைகளை, எண்ணங்களை ஏந்திச் செல்கிறது; ஜிப்ரானின் தத்துவம் உச்ச கட்டத்தை, தெளிவாய் சொல்லி, சிந்தனையைய வெளியிட்டு உயர்ந்து நிற்பது அவருடைய பிற்கால நூலான ''தீர்க்கதரிசி'' இல்தான்.

மொழிபெயர்ப்பாளர் 'G.கெய்ராலய்யா' இந்நூலைப் பற்றி கூறும்போது ''இந்த கவிதைகள் தன் நினைவு அறியாமல் கூறும் சுயசரிதையாக, ஜிப்ரானின் உண்மை உள்ளத்தின் பிரதிபலிப்பாக அமைகின்றது; ஜிப்ரான் ஞானி, துறவி, முனிவர், தவசி. தன் வயதிற்கு மேலும் அப்பாலும் கனிந்து பக்குவமடைந்து விட்டார்; ஜிப்ரான் ஓர் புரட்சிக்காரன்; ஒற்றுமை, உலக நேயம் உயிர்வாழ் இனங்களெல்லாம் நிலைத்திருத்தல்; சாதாரண, தனக்கே என்றில்லாத சர்வ சுதந்திரம் வேண்டுமென்று விரும்பி வேண்டினார்; உலகின் எல்லா பொருள்களுடனும் இனிமை பொங்க வீணை ஒலியினும் உள்ளம் உருக இணைந்து தோய்ந்தார்.

# 7

## ஜிப்ரானின் தத்துவம்

The Philosophy of Gibran

ஒரு தத்துவஞானி என்பவர் ஒரு சாதாரணமான மனிதர்தான்; ஆனால் அவர் ஆழ்ந்து சிந்திப்பவர்; அதே சமயத்தில் மற்ற மக்களைவிட மிகவும் பிடிவாதமுள்ளவர்.

அமெரிக்க தத்தவ ஞானி 'வில்லியம் ஜேம்ஸ்' என்பவர் தத்துவம் என்பதைப் பின்வருமாறு வரையறுத்த கூறுகின்றார். ''அசாதாரணமான பிடிவாதத்துடன் நிலையாக மாறாமல் எதைப் பற்றியும் ஆழமாக சிந்திக்க முயல்பவர்.''

தத்தவம் என்ற சொல் கிரேக்க மொழியிலிருந்து வந்தது; பொருள் ''அறிவிற்கு ஆசைப்படுதல்'' ''ஞானத்தைத் தேடுதல்'' ''ஞானத்தின் ஆசை'' எனப்படும்.

வாழ்க்கையின் உண்மைகளையும், செயல்களையும் அறிந்துணரும் செய்முறை; மன உலகிலும் பொருளுலகிலும் அறிவுபூர்வமான காரண காரியங்களை பகுத்துணர்த்து தெளிதல்; தன்னை ஆளும் சட்டங்களின் பான்மை அறிதல், பொதுப்படையான கொள்கை, ஒழுங்கு, எண்ணம் இவற்றில் நியதிகளை அறிந்து

உணர்தல், முடிவு கண்டறிதல்; சாதாரணமாக இதை நடைமுறை வாழ்க்கையில் உபயோகித்து முடிவான இலக்கை அறிதல். (அதாவது மானிட வாழ்க்கையின் பிறப்பு, வாழ்வு, மரணம், இன்பம், துன்பம், விதி, கடவுள், நரகம், சொர்க்கம், பசி, இப்பிறப்பு, மறுபிறப்பு, அறம், பொருள், வேதனை, நோய், பாதிப்பு இவை எல்லாவற்றிற்கும் பொருள், காரண, காரியம், விழைவுகளை அறிதல்தான் தத்துவம்)

நாம் ஒரு மிகச் சிக்கலான, குழப்புகிற, தடுமாறச் செய்யும், சிந்தனையைச் சிதறச் செய்யும் உலகில் வாழ்ந்து கொண்டிருக் கின்றோம். நம்மில் சிலரே மிகப்பெரிய தத்துவ ஞானிகளின் கொள்கைகளின் விளைவுகளைக் காண்கின்றோம்; அறிந்திருக் கின்றோம்.

நல்வாழ்க்கை, நம்முடைய உறவுமுறைத் தொடர்புகள், சிலவற்றை சரியென்று ஒப்புக்கொண்டு நாம் பெற்றுக்கொள்ளும் எண்ணங்கள், மனத் தோற்றங்கள் இவற்றில் பெரிய தத்தவ ஞானிகளின், வேதாந்திகளின் தாக்கத்தை வெகு சிலரே உணர் கின்றோம். உதாரணமாக பசி என்பது இக்காலத்தில் மிகவும் தூய்மையைக் கெடுக்கும், இயற்கைத் தன்மையைக் கெடுக்கும், எளிமையைக் கெடுக்கும், மனிதனுக்குப் பழங் காலத்தில் இருந்ததைவிட, ஒரு செய்மறையாக அமைந்து விட்டது. மனிதன் இன்று தன் பசிக்கேற்ற மாதிரி உணவை உட்கொள்ளுவதில்லை; தனக்குச் சுலபமாக கிடைக்கும் உணவை ஏற்பதில்லை; ஆனால் தன் உணவின்மேல் உள்ள ஆசையை அளந்து பார்த்து, நாக்கின் சுவைக்குத் தக்கபடி தன்னால் அதற்கான பணத்தைக் கொடுக்க வசதியும், கைப் பொருளும் உள்ளதா என்று கணக்கிட்டுத்தான் உண்கின்றான். இந்த சுய அடக்கம், தன்நிலை கட்டுப்பாடு எப்படி ஏற்பட்டது? ஆயிரம் ஆயிரம் ஆண்டகளாக, நாம்

அனுசரித்த மதக் கோட்பாட்டின், அரசியல் அமைப்பின், சட்டத்தின் தாக்கத்தால் ஏற்பட்டது.

நாம் வாழும் உலகம் மிகவும் சிக்கலானது, நாம் உண்டாக்கும் பொறியியல் சாதனைகள், செயல் முறைகள், பழங்காலத்து ஏழு அதிசயங்களையும் குள்ளமாக்கிவிடும், சிறியதாக்கிவிடும் என்று நமக் குள்ளேயே ஒரு முடிவாக ஏற்றுக் கொள்கின்றோம்; ஆனால் நம்மால் இயலுமா? நாம் ஏறிச் செல்லும் ரயில்பாதை இந்த உலகின் வளைவை அப்படியே உள்ளபடி பின்பற்ற முடியுமா? இயலாது. ஏனெனில் புகை வண்டிப்பாதையிலிருந்து குதித்துவிடும், பாதை ஒரே மட்டமாக இருந்தால் நாம் நியூயார்க் நகரின் மிக உயரமான கட்டடங்கள் (விண் சுரண்டிகள்) உண்டாக்கும் அழுத்தமும் பலப் பிரயோகமும் லட்சத்தில் ஒரு பங்கு என்று கணக்கிடுகின்றோம்.

இருந்தாலும் 'எம்பயர் ஸ்டேட் பில்டிங்' என்ற 125 மாடி கட்டடம் உண்மையிலேயே தொடர்ந்து பல அடி ஊஞ்சலாடுவது போல் ஆடிக்கொண்டே இருக்கின்றது என்ற உண்மையை சரியென்று எடுத்துக்கொள்கிறோம். நாம் மத நம்பிக்கைகளைச் சார்ந்திருந்தால் மாதா கோயிலுக்குப் போவதை நம் விருப்பப்படி ஏற்றுக்கொள்கிறோம். நாம் கடவுள் நம்பிக்கை அற்றவர்களாய் இருந்தால், கோயிலுக்குப் போகாமல் இருப்பதை, தேர்ந்தெடுப்பதை மறு பரிசீலனை செய்யலாம் என்பதைக் கூட ஏற்பதில்லை. இருந்தாலும் நம்பிக்கை இன்மை எனும் சலுகையே தத்துவங்களின் வெற்றியாகும்; பிரதிநிதியா கிறது. இல்லையானால் கோயிலுக்குப் போகாதவர்கள் சிங்கத்தையாவது, கழுமரத்தையாவது தழுவ நேரிடும்.

ஜிப்ரான், தத்துவங்களின் விளக்கங்களையோ, ஆராய்ச்சியையோ எழுதவில்லை; ஆனால் ஜிப்ரான்,

தீர்க்கதரிசி (The Prophet) என்ற நூலை, மிக உயர்ந்த நூலை, எழுத முற்பட்டார் அதில் பிறப்பு இறப்பு என்ற கேள்வியை விவாதிக்க முற்பட்ட போது, அவர் தன்னை சாக்ரடீஸின் சித்தாந்தத்தில் நிறுத்தி ''உன்னை நீ உணர்ந்துகொள்'' என்ற மிக உயர்ந்த சிந்தனையைப் பின்பற்றினார்.

ஒரு பெண்மணி நல்வரவு கூறி கேட்கிறாள். ''கடவுளின் தீர்கக்தரிசியே!... எது பிறப்பிற்கும் இறப்பிற்கும் இடையில் உள்ளதோ, உங்களுக்குத் தோற்றமளித்ததை எங்களுக்குச் சொல்லுங்கள்.''

ஜிப்ரான் எழுதனார் ''நான் மனிதன் இயற்றிய சட்டங்களை நேசிக்கவில்லை; நம் மூதாதைகள் விட்டுச் சென்ற பரம்பரை பழக்கவழக்கங்களை வெறுக்கின்றேன். அகஸ்டீன் முனிவரின் கொள்கையை விளக்கும் படியாக, பிரம்மஞானிகளின் வட்டத்தில தன்னை ஒருவராக்கிக் கொண்டு போதிக்கின்றார். உண்மை என்ற ஒன்று இருக்கிறது என உணர்ந்து, அதைப்பற்றி சிந்தித்து, உயிர் வாழ்ந்து அனுபவித்தால் அல்லாமல், நாம் உண்மையை சந்தேகிக்கக் கூடாது.''

மனித இனம் படிக்கவும் எழுதவும் தெரிந்து கொள்வதற்கு முன்பே, உலகில் உயிர் வாழ்வதன் அர்த்தம்தான் என்ன என்று எண்ணியிருக்கின்றான். மனிதன் எங்கிருந்து வந்தான்? அவன் எங்கே போகின்றான்? ஏன்?

மனிதன் எழுதத் தெரிந்தபின், சாதாரணமான ஆனால் பண்படாத வகையில், வாழ்க்கையின் பிறப்பு இறப்பின் எண்ணங்களை நமக்கு விட்டுச் சென்றான். நவீன கால எழுத்தாளர்கள் இதை 'தத்துவ ஞானம்' என்று அழைக்கின்றனர்.

இருந்தாலும் இந்த சில பக்கங்களில் நாம் இந்த மிகப் பரந்த பொருள் பற்றி அதன் பரப்பைக் கண்டு தெளிய

முடியாது. தத்தவச் சிந்தனைகள் உலகில் உள்ள எல்லா புத்தக நிலையங்களின் அலமாரிகளையும் நிரப்புகின்றது. இப்போது நாம், ஜிப்ரானின் இதயத்திலும் ஆத்மாவிலும் தத்துவ நம்பிக்கையும் அதன் பிரதிபலிப்பும் எப்படி இருந்தன என்பதைத் தெரிந்து உணர முற்படுவோம். அவருடைய பெருமபாலான கதை கட்டுரை கவிதைகள் எல்லாம், பழங்கால மனிதன் கேட்ட அதே கேள்விகளை குழப்பம் அளிக்கும் சிந்தனைகளையே, தன்னைத்தானே கேட்டுக்கொள்கிறார். அவர் 'கடவுள் ஒருவர் இருக்கிறார்' என்னும் சர்ச்சைக்கு ஆதாரமான ஒன்றை ஒப்புக்கொள்கிறார். ஆனால் கடவுள் எது என்று கூறும் வரையறையைத் தான் மற்றவர்கள் விமர்சிக்கிறார்கள்.

ஜிப்ரானின் மூதாதையர்கள் லெபனானிலும் மத்திய கிழக்கு நாடுகளிலும் கடவுளை ஒரு கருணை மிக்க தகப்பனாக, ஒரு வயதான மனிதன் பாறை மேலிருந்து அவர் உருவத்தை நீண்ட தாடியுடைய மனிதனாகக் காட்டுகின்றார். இந்த கொள்கைகளை மேற்கில் தோன்றிய மூன்று மதங்களும், கிறிஸ்துவம், முகமதியம், ஜிடாயிசம் ஆகிய மூன்று மதங்களும் விளக்குகின்றன.

சில தத்துவ ஞானிகள் முக்கியமாக அரபிய வேதாந்திகள் கடவுள் என்பதற்கு எல்லோரும் புரிந்து கொள்ளக்கூடிய ஒரு கடவுளைத் தேடினர்.

அவிர்ரோயிஸ் (1126-1198) என்ற தத்துவ ஞானி அரபு நாட்டினர், எழுதினார். ஒரு சாதாரண மன நிலையுள்ள நம்பிக்கை மிகுந்தவன் சொல்வான் ''கடவுள் சொர்க்கத்தில் இருக்கிறார்'' ''மனதைப் பயிற்சி செய்து பக்குவப்படுத்திய மனிதன் சொல்லுவான் கடவுள் வானவெளியில் இருக்கும் ஓர் உடலுடன் கூடிய உயிர்ப்பொருள்; கடவுள் எங்கெங்கும் இருக்கின்றார்; சொர்க்கத்தில் மட்டும் இல்லை'' என்பான்.

''ஆனால் கடவுள் எங்கும் இருக்கின்றார் என்பதை உடலும் உருவமும் என்று எடுத்துக்கொண்டால் இந்தக்கோட்பாடும் குறையுள்ளதாகவே தோன்றும்.''

''அதன்படியே தத்தவஞானி, கடவுளின் ஆத்மீகத் தன்மையை தேவையான அளவு விளக்கிக் கூறுகின்றான்; கடவுள் வேறு எங்கும் இல்லை உன் உள்ளத்திலேயே இருக்கினற்ார்; கடவுள் வானவெளியில் இருக்கின்றார் என்று சொல்வதற்கு பதிலாக மிகவும் தெளிவாக நாம் கூறலாம், உலகின் பஞ்ச பூதங்களும், வானவெளியும் கடவுளில்தான் இருக்கின்றது'' என்று!

ஜிப்ரான் லெபனானில் படித்தார்; ஆகவே அவர் அவாரோயின் விளக்கங்களை ஏற்றுக்கொண்டிருக்க வேண்டும். ஜிப்ரானுடைய 'தீர்க்கதரிசியின் பூந்தோட்டம்' (The Garden of the Prophet) என்னும் நூலில் ஒரு மனிதக் கூட்டத்திலிருந்து ஒருவன் கேட்கின்றான். ''ஆசானே! கடவுளைப் பற்றி எல்லோரும் பேசக் கேட்கிறோம். மற்றவர்கள், ஜிப்ரான் மதவாதிகளைக் கண்டித்து, அவர்களின் செயலைத் தாக்கியதால் அவர் ஓர் நாத்திகர் என்று குற்றம் சாட்டுவார்கள்.

ஆகவே ஜிப்ரானின் தத்துவத்தை அறிய வேண்டுமானால், புரிந்துகொள்ள வேண்டுமானால் அவருடைய வாழ்க்கை வரலாற்று ஆசிரியர்களின் சில வாதங்களை ஒதுக்கவேண்டும்; பின்பு ஜிப்ரான் எழுதியவற்றிலே எண்ணி எப்படி எவ்வாறு கூறுகின்றார் என்று துருவி ஆராய வேண்டும். ஜிப்ரான் அரபிக் மொழியில் மிகப் பெரிய தத்துவஞானிகளைப் பற்றி கட்டுரைகள் எழுதியுள்ளார். அவர்களில் 'அவிசின்னா அல்பரீட், அல்கசாலி' சிலர். ஜிப்ரான் தன் எண்ணங்கள் அவசின்னாவின் எண்ணங்களுடன் ஒத்திருக்கக் கண்டார்; கீழ்க்கண்டவை அரபிக் மொழியிலிருந்து மொழி பெயர்க்கப் பட்ட ஜிப்ரானின் சிந்தனைகள்.

ஆத்மா பற்றிய சுருக்கம்,
அவிசின்னா எழுதியது-ஜிப்ரான்:

*பழங்காலக் கவிஞர்கள் யாரும் என் நம்பிக்கைகளுக்கு நெருங்கிவரும் கவிதைகளை எழுதவில்லை. என் ஆத்மாவின் ஈர்ப்பையும், சார்பையும் எதிலும் காணவில்லை; ஆனால் அவிசின்னா எழுதிய ஆத்மா பற்றிய சுருக்கம் மட்டும் என்னை நெருங்கிய கவிதை.*

*இந்த கம்பீரமான, பயபக்தியூட்டும் கவிதையில், ஒரு வயதான துறவி, மனிதனின் பேராசைகள், பெரிய நம்பிக்கைகள், எதிர்ப்புகள், பேரறிவு, மனிதனின் சிந்தனையால் உருவாக்கிய ஆழமான கற்பனைகள், எல்லாவற்றையும் தன்னுயை உடம்பில் ஏற்றுக் கொள்கிறார். அவர் 'முதல் மனிதன் எதைத் தேடி அலைந்தான்' என்ற கேள்வியை எழுப்புகின்றார்; நீண்ட தியானத்தாலும், ஆழ்ந்த சிந்தனையாலும் கண்ட கொள்கைகள், கோட்பாடுகள் யாவை என்று தேடினார்.*

*அவிசின்னாவின் பேரறிவிலிருந்து இப்படிப்பட்ட கவிதை வெளிவருவது ஆச்சரியமல்ல; அவர்தான் அந்தக் காலத்தின் பேரறிவாளர், மகாமேதை. ஆனால் தன் வாழ்நாள் எல்லாம் உடம்பின் இரகசியங்களை அறிய வாழ்வை வீணாக்கியும் உலகின் ஐம்பொருள்களின் (பஞ்சபூதம்) விசித்திரமான தன்மைகளை அறியவும் பாடுபட்டார். இவருடைய தெளிவான, வெளிப்படையான எண்ணங்கள் முன்னுக்குப்பின் முரணானவையா? அவர் ஆத்மாவின் பரம இரகசியத்தை ஐம்பொருள்களை ஆழ்ந்து படித்தறிவதிலே கண்டார். இப்படியாக தெரிந்ததைக் கொண்டு தெரியாததை அறிந்து கொண்டார். அவருடைய பாடல் அறிவுதான் மனத்தின் உயிர். நேரடியான அனுபவம்தான் ஆழ்ந்து அறிந்த முடிவுகளை, தெய்விக உணர்ச்சியை, கடவுளை அடைய*

வழிகாட்டும் என்று திடமான சான்றுகளைக் கொடுக்கின்றன.

மிகப்பெரிய மேற்கு நாட்டு எழுத்தாளர்களின் பாடல்களில் இவருடைய சிந்தனைகள் சிதறிக் கிடப்பதை அறியலாம்.

உதாரணத்திற்கு ஷேக்ஸ்பியரின் அழியாத நாடகங்களில் சில வரிகள் அவிசின்னாவின் எழுத்தை ஒத்திருக்கின்றன.

''நான் இந்த பூமியில் பிறந்ததை நிந்திக்கின்றேன்; அப்படியே இப்பூமியை விட்டு இறப்பதையும் நிந்திக்கின்றேன்; இது ஓர் சோக நாடகம்.''

ஆங்கிலக் கவிஞர் ஷெல்லியின் பாக்களிலே வரும் வரிகள் சில ஒத்திருக்கின்றன.

''நான் கண்களை மூடி உறங்கினேன். அதில் கடவுளை என் பேரியற்கை சக்தியால் அறிந்தேன். திறந்த கண்களால் பார்க்க முடியாததை நான் மூடிய கண்களால் பார்த்துக் களித்தேன்.''

கவிஞர் 'ப்ரவுனிங்' எண்ணங்களில் சமமானவை: ''அது மின்னல்போல் பளிச்சிட்டது. அது உடனே மறைந்து விட்டது; பளிச்சிடவே இல்லை போலும் என்பதாக மறைந்துவிட்டது.''

இந்த ஆங்கிலக் கவிஞர்கள் தோன்றுவதற்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்பே அவிசின்னா வாழ்ந் திருக்கின்றார்; அவருடைய ஒரு பாடலில் வரும் சிந்தனைகளைப் பல ஆசிரியர்கள் பல பாடல்களில் எழுதி இருக்கின்றார்கள், பல வேறுபல கட்டங்களில். இதுதான் அவிசின்னாவை மகாமேதை, பேரறிஞர் என்று அவர் வாழ்ந்த நூற்றாண்டில் மட்டுமல்ல. இனி வரும்

நூற்றாண்டுகளிலும் அவருக்கு இணையில்லை என்று நிலைத்து நின்றது.

இந்த 'ஆத்மாவின் சுருக்கம்' என்ற பாடல் மிகவும் கம்பீரமானது; பயபக்தியை ஊட்டவல்லது. இந்தப் பொருள் பற்றி, பெருமை மிக்க ஆத்மா பற்றி இதுவரை புனையப்பட்ட பாடல்களிலே மிகச் சிறந்தது.

(அவிசின்னா மிகப்பெரிய மருத்துவ அறிஞர். அவருடைய நூல்கள் இந்த நாள்வரை ஐரோப்பிய பல்கலைக் கழகங்களினால் பாடப் புத்தகமாக படிக்கப்பட்டு வருகின்றன. 100 ஆராய்ச்சி கட்டுரைகள் எழுதியுள்ளார். அவர் மருத்துவம் மட்டுமன்றி, கணக்கு, வானவியல், தத்துவம் முதலிய அனைத்திலும் மகாமேதை. 'ஒரு வெள்ளை இனம்' **(One White Race)** என்ற நூலில் பக்கம் 241-இல் காண்க. ஆசிரியர் ஜோசப் ஷீபென்.)

## அல்பரீட்

அல்பரீட் ஒரு பக்திக் கவிஞர். அவருடைய தாகம் தணியாத ஆத்மா, ஆவிகளின் தெய்விக மதுவைக் குடித்து போதையுடன் அலைந்து திரிந்து, கவிஞர்களின் கனவுலகிலே, காதலர்கள், துறவிகள் அந்த உலகத்திலே வாழ்ந்தார்கள்; பிறகு மயக்கம் தெளிந்தவுடன் அவன் ஆத்மா இந்த உலகிற்குத் திரும்பி வந்து அங்கே பார்த்ததையும் அழகான சொற்களால் கேட்டதையும் பதிவு செய்வார்கள்.

அல்பரீட்டின் நூல்களை அதன் பதிப்பைத் துருவிப் பார்த்தால், அவரை ஒரு புனிதமான மனிதராக சுதந்திர எண்ணங்கள் கொண்ட கோயிலிலே வாழ்பவராக, கற்பனை சாம்ராஜ்யத்தை ஆளும் ஓர் பேரரசராக, மந்திர சக்தி வாய்ந்த, பலமிக்க போர்ப்படைத் தலைவராக

காண்கின்றோம். அந்த வலிமை மிக்கப் படை நிதானமாக அங்குலம் அங்குலமாக முன்னேறுகிறது; கடவுளின் சாம்ராஜ்யத்தை அடைகிறது; வழியில் சாதாரணமான, அல்பமானவற்றை வெற்றி கொண்டு, ஆனால் எப்போதும் கம்பீரமான, ஆடம்பரமான, அற்புதமான வாழ்வைத் தேடிக் கொண்டு செல்கிறது.

அல்பரீட், சகாப்தத்தில் (1119-1220) தானே சிந்திக்கவும், புதியன சமைக்கும் திறமையோ இல்லாமல் மக்கள் இருந்தனர். அவர் வாழ்ந்த மக்களிடையே மக்கள் பழைய பழக்கவழக்கங் களைக் கிளிப்பிள்ளை போல் சொல்லிக்கொண்டே இருந்தனர்; மற்றவர் மேல் முழு சக்தியுடன் விமர்சனம் செய்து, இஸ்லாம் மதத் தத்துவத்தையும், அறிவையும் மிகப் பெரிய பாரம்பரியத்தையும் விளக்கினார்.

அவர் ஓர் மேதை. மேதைமை ஓர் அற்புதம். அல்பரீட் தன் காயத்தை ஒதுக்கிவிட்டு, சமூக சூழ்நிலையை வெறுத்து ஒதுக்கினார். தனிமையை நாடி எழுதினார்; மக்களை ஒன்றாகத் தன் சர்வதேச கவிதைகளை எழுதி தெரியாததைத் தெரிந்த வாழ்வாய் உணர்த்தினார்.

அல்பரீட் தினசரி வாழ்க்கையிலிருந்து தன் எழுத்தின் கருவைத் தேர்ந்தெடுக்கவில்லை. ஆனால் அல்முட்டாநபிதான், மக்கள் பிரச்சினைகளைக் கொண்டு கவிதையாக்கினார். (அல்முட்டாநபியும் மேரியும் மிகப் பெரிய அரபிக் கவிஞர்கள்) அவர் வாழ்க்கையின் புதிர்களில், விடுகதைகளில் அக்கறை கொண்டு ஈடுபடவில்லை. ஆனால் மேரி எனும் கவிஞர் ஈடுபட்டார். அல்பரீட் தன் கண்களை மூடிக் கொண்டு உலகத்தைப் பற்றி சிந்திக்காமல் இவ்வுலகத்திற்கும் அப்பால் உள்ளதைக் காண முயன்றார்; உலகத்தின் அதிர்ச்சிகளையும் சந்தடிகளையும் அமளியையும்

கேளாதவராய் இருந்தார்; ஏனெனில் அவர் அழியாத மேல் உலகப் பாடலைக் கேட்க முயன்று கொண்டிருந்தார். இவர்தான் அல்பரீட், அவர் சூரியனின் ஒளிக்கதிர் போல் தூய்மையானவர், இதயம் சுடர் ஒளி, மனம், மலைமேல் ஏரிபோல் அமைதியாய் அவர் கவிதைகள், அவருக்கும் முன்பு இருந்தவர்கள் பின்னால் வந்தவர்களின் கனவுகளை அடையும்படி எழுதினார்.

அல்கசாலி

அல்கசாலிக்கும் துறவி அகஸ்டின் இருவருக்கும் இடையே ஒரு தெய்விக ஒற்றுமை நிலவுகிறது. அவர்கள் இருவரும் இரு சகாப்தத்தன் பிரதிநிதிகள்; ஆனால் ஒரே எண்ணம் அவர்களிடையே, காலமாறுபாடுகள் இருப்பினும், மதம் மாறுபாடுகள் இருந்தும், அவர்களின் காலத்திய சமூகவாழ்க்கை வேறுபட்டிருந்தும், எண்ணங்களிலே ஒற்றுமை நிலவிற்று. அந்த எண்ணம், அந்த ஆவல் அவர் ஆத்மாவின் ஆழத்திலே தோன்றி மனிதனைக் காணும் ஒன்றிலிருந்து காணாத தெய்வத்தையும், தத்துவங்களிலிருந்து தெய்விகத்தையும் நாடுகின்றனர்.

அல்கஸாலிக்கு பெருமைமிக்க வாழ்வையும், உயர்ந்த பதவியையும் தந்தது.

அல்முட்டாநபியும், மேரியும் மிகப்பெரிய அரபிக் கவிஞர்கள்.

அல்கசாலி பாக்தாத் கல்லூரியில் பேராசிரியர், அவர் திடீரென பேராசிரியர் வேலையை உதறிவிட்டு, தன் குடும்பத்தையும் விட்டுவிலகி துறவறம் பூண்டு தன் வாழ்நாளை தெய்விகப் பணியில் கழித்தார். அவர் 69 நூல்கள் எழுதியுள்ளார். அதில் ஓர் நூல் மட்டும் 13 புத்தகங்கள் கொண்டது. அல்கஸாலி டமாஸ்கஸ்,

ஜெருசேலம், ஈரான், மெக்கா, மெதீனா, அலெக்ஸான்டிரியா முதலிய பல நகரங்களுக்கும் சென்று, அலைந்து, தேடித் திரிந்து கடைசியாக அரேபியாவில் உள்ள 'டாஸ்'க்கு வந்து அங்கேயே காலமானார்.

பதவியையும் துறந்து எளிமையான வாழ்வை ஏற்றார். அவர் விஞ்ஞானத்தின் முனையை இணைக்கும் மெல்லிய கோடு, மதத்தின் ஆரம்பத்தை எங்கே இணைக்கின்றது என்று தேடினார். தன் கனவுகளையும் வாழ்க்கையின் ஆசைகளையும் புடம் போடும் மனித அறிவையும் அனுபவத்தையும் மறைத்து வைத்திருக்கும் கவிஞர்களின் பாடல்களிலே தேடினார்.

துறவி அகஸ்டின் அவர்களும் இப்படியே ஐந்து நூற்றாண்டுகளுக்கு முன்பு, இந்த விதமாகவே தேடினார். அகஸ்டின் அவர்களின் (Confession) 'பாவ மன்னிப்பு' என்ற நூலைப் படிப்பவர்கள் அவர் இந்த உலகையும் அதன் பலன்களையும் அழியாத உண்மையைத் தேடி அறியும் மனசாட்சியை அடைய ஓர் ஏணியாகவே உபயோகித்தார்.

எப்படி இருப்பினும் துறவி அகஸ்டினை விட அல்கஸாலி பொருளின் இரகசியத்தையும் இதயத்தையும் மிகவும் நெருங்கி அறிந்து கொண்டார் என்பேன். இதற்கான காரணம் கால இடைவெளியாகக் கூட இருக்கலாம். அல்கஸாலி அராபியர், கிரேக்கர்களின் ஞானத்தையும், தத்துவங்களையும் நன்கு அறிந்து கொண்டார்; அவர்கள் இவரின் முன்னோடிகள்; அகஸ்டினின் ஞானமும் அறிவும் கூட இவரால் அறிந்து புரிந்து கொள்ள உதவியது. இவர்கள் எல்லோரும் தேடி, அலைந்து, அறிந்து, தெரிந்து கொண்ட உண்மைகளைச் சுலபமாக அல்கஸாலி பெற முடிந்தது.

அல்கஸாலியின் தத்துவங்களிலும் ஞான

மார்க்கத்திலும் இந்திய நாட்டின் ஞானிகளை இணைக்கும் ஓர் பொன் சங்கிலித் தொடரைக் காண்கின்றேன். புத்தமதக் கொள்கைகள் பலவும் அல்கஸாலியின் தத்துவங்களில் பரவிக் கிடக்கின்றன. அதே போல் அல்கஸாலியின் எண்ணங்கள் பல 'ஸ்பெனோஸா' 'பிளேக்' இருவரிடமும் காணப்படு கின்றன.

மேற்கு நாடுகளின் பேரறிவாளர்கள் பலரும் அல்கஸாலியை மிகவும் மதித்தப் போற்றுகின்றனர். அவர்களிலே மதநம்பிக்கை மிக்கவர்களின் கருத்து என்ன வென்றால், 'இஸ்லாம் மதக் கொள்கைகள் கோட்பாடு களிலேயே மிகவும் உயர்ந்ததும் கம்பீரமானதும், புகழ் பெற்றதும், போற்றப்படுவதும் அல்கஸாலியின் சிந்தனைகளே! மிகவும் விசித்திரமான ஒன்று என்ன தெரியுமா? வெனிஸ் நகர மாதா கோயிலிலே 15-ஆம் நூற்றாண்டினில் தீட்டப்பட்ட ஓவியங்களில் உள்ள ஞானிகளின் வரிசையிலே 'அல்கஸாலி'யின் ஓவியமும், இடம் பெற்றிருப்பதே! முனிவர், துறவி, புண்ணிய புருஷர்கள், தத்துவ ஞானிகள், பிரம்ம ஞானிகள் அனைவருமே தெய்விகக் கோயில்களின் தூண்களும், மூலைக் கற்களும் என்று கிறிஸ்துவ மதம் கருதுகின்றது.

ஜிப்ரான் தன் நூல்களிலும் சிந்தனைகளிலும் 'அவிசின்னா', 'அல்பரீட்', 'அல்கஸாலி' ஆகிய மூன்று தத்துவ ஞானிகளுக்கும் முதலிடம் அளித்து, போற்றி, புகழ்ந்து பின்பற்றினார் என்பது மிகவும் தெளிவாகிறது. ''என்னுடைய பாடல்கள், கவிதைகள், எல்லாம் 'அவிசின்னா'வின் ஆத்மீக ஞானத்தையும் நம்பிக்கை களையுமே தழுவிச் சார்ந்திருப்பதை தெளிவாக்கும்'' என்கிறார் ஜிப்ரான்.

'அவிநோயிஸ்' என்பவரின் கோட்பாடான ''கடவுளிலேயே அண்டவெளியும், எல்லாப்

பொருள்களும் அடங்கியுள்ளன'' எனும் கோட்பாட்டை, ஜிப்ரானும் பின்பற்றினார். அதையே ''நாம் கடவுளின் மூச்சும் மணமும் ஆக இருக்கின்றோம்'' என்கின்றார்.

'கடவுள் இருக்கின்றார், ஆத்மா நிலைத்திருப்பது, அது அழியாமல் மறுபிறவி எடுப்பது' என்று நம்பினார். ஆனால் அவருக்கு 'நிர்வாணா' (Nirvana) எனும் பௌத்த கொள்கையில் நம்பிக்கையில்லை.

'நிர்வாணா' கொள்கையை, கோட்பாட்டை பின்பற்றியவர்களின் நம்பிக்கை இதுதான். அதாவது, 'ஆத்மா மரணத்திற்குப் பிறகு மிருகங்களின் உடல்களில் குடியேறும் அல்லது மற்ற மனித உடல்களிலே குடிபுகும்; ஓர் உடலிலிருந்து வேறோர் உடலிற்கு ஆத்மா பூரண தூய்மை அடையும் வரை மாறிக் கொண்டே இருக்கும்; பின்பு கடைசியாக கடவுள் வசிக்கும் இடத்திலே வந்து சேரும்'' என்பதே நிர்வாணா.

ஜிப்ரான் இந்த தூய்மையமையும் தத்துவத்தை, நம்பிக்கையை ஏற்றுக் கொள்ளவில்லை. மனிதன் இந்த உலகை விட்டுப்போன பின்புதான் பூர்த்தி செய்யாத செயல்களை செய்து முடிக்கவே ஆத்மா திரும்பி வருகின்றது என்று நம்பினார்.

நிர்வாணா, மறுபிறப்பு, அவதாரம், எனும் பொருள்பற்றி எழுதும்போது தன் ''பால் பெக்கிலிருந்து வந்த கதவிஞன்'' (The Poet from Baalbek) எனும் கட்டுரையில் ஆத்மா மறுபடியும் சமமான அந்தஸ்து உள்ள உடம்பிற்கே திரும்புகிறது என்று எழுதுகிறார்.

ஓர் இளவரசன் கேட்கின்றான் ''ஓ துறவியே கடவுள் மறுபடியும் என்னை இந்த உலகிலேயே இளவரசனாக திரும்ப அமைப்பாரா? இறந்து போன கவிஞனை உயிர்ப்பிப்பாரா? அவர் வாழ்க்கையைப் பற்றி கவிதைகள்

இயற்ற, அழிவற்ற முழுமையை அடைய புனிதச் சட்டங்கள் சம்மதிக்கின்றனவா? அப்போது நான் அக்கவிஞரின் மேல் என் வெகுமதிகளைச் சொரிய, கொட்ட முடியுமா?''

அதற்கு அத்துறவி பதிலளிக்கின்றார். ''ஆத்மா எதற்கெல்லாம் ஏங்குகிறதோ அதையெல்லாம் அடையும்; எப்படி குளிர்காலம் கழிந்தபின் வசந்த காலம் வருவது தெய்விகச் சட்டமோ, அப்படியே உன்னை இளவரசனாக அமர்த்தி, கவிஞனை மறுபடியும் கவிதை புனையச் செய்யும்.''

ஜிப்ரான் தன் ''தீர்க்கதரிசி'' (The Prophet)-இல் கீழ்க்கண்டவாறு எழுதுகின்றார்.

ஆர்பலீஸ் மக்களே! இந்த நாள் முடிந்தது, உங்களுக்கு என் அன்பான வாழ்த்துக்கள்.

மறவாதீர்கள். நான் மறுபடியும் உங்களிடம் வருவேன். கொஞ்ச காலம் என் ஏக்கம் பேராவல் தூசி படியும், பிறகுவேறு உடலிற்காக தவிக்கும். கொஞ்ச நேரம், காற்றின் மேல் கணநேர ஓய்வு கொள்ளும். பிறகு வேறொரு பெண்மணி என்னைப் பெற்றெடுப்பாள்.

ஜிப்ரான் தன் 'தீர்க்கதரிசியின் பூந்தோட்டம்' (The Garden of th Propert) என்ற நூலின் கடைசி பக்கத்தில் எழுதுகின்றார்.

ஓ மூடுபனியே, சோதரியே, சோதரியான மூடுபனியே!
நான் உன்னுடன் இணைந்து விட்டேன் இப்போது;
நான் நானாகவே இனி இல்லவே இல்லை;
நெடுஞ்சுவர்கள் சரிந்து விட்டன!
சங்கிலிகள் நொறுங்கி விட்டன!
நான் உன்னைத் தாவி அணைக்க உயர்கிறேன்.

நாம் இருவரும் ஒன்றாகக் கடல் மேல்
வாழ்வின் இரண்டாம்நாள் வரும்வரை மிதக்கலாம்!
காலை உதிக்க நீ, நந்தவனத்தில்
பனித்துளியாய் தூங்கிடுவாய்.
நானா? நான் ஓர் கைக்குழந்தையாய்
ஓர் மங்கையின் முலைகள் மேல் உறங்கிடுவேன்!

பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே ஐரோப்பிய நாட்டில் (லோகாயுதம்) மூலப் பொருள்களின் தாக்கம், உலக வாழ்க்கைதான் முக்கியமானது என்ற வாதம் ஆட்கொண்டது. சமூகத்தில் பொருளாதார வாழ்க்கைதான் முக்கியம், சமய வாழ்க்கை, சமய நம்பிக்கைகள் முக்கியமல்ல என்ற எண்ணம் பரவியது; 'இயற்கையின் தேர்ச்சிநிலை சித்தாந்தம்' கொள்கையை ஏற்று வலிமையே நேர்வழி; இது தனி மனிதனுக்கும் நாட்டிற்கும் பொருத்தமானது என எண்ணலாயினர்.

'நியிட்சி' (Nietzsche)யும் மற்றும் பல எழுத்தாளர்களும் 'நான்' (Self) என்பது தொழுகையை நெருங்க உதவும் மையமாகும் என்று எழுதலாயினர். நியிட்ஸ்சி 'கடவுள் இறந்து விட்டார்' என்றுகூட பிரகடனப்படுத்தினார்.

ஜான் A.T. ராபின்சன் என்பவர் நெயிட்ஸ்சி ஒரு நாத்திகவாதி இல்லை என்று ஆணித்ரமாக அறிவுறுத்திய தோடு, நெயிட்ஸ்சி மனிதர்களைக் கடவுள் எனும் கொடியவனிடமிருந்து நம்மைக் காப்பாற்ற முயல் கின்றார். கடவுள் நம்மை அடிமையாக்கி, தாழ்த்தி, தரித்திரராக்கி, பலவீனப்படுத்தி அழிக்கின்றார். அவர் அன்பான வயது முதிர்ந்தவர்களை அழிக்க முயற்சிக் கிறார். ஒரு மலையிலே ஒதுக்க முற்படுகின்றார். 'மனிதர்கள் தங்கள் காரியங்களைக் கவனித்துக்கொண்டு ஒதுங்குகின்றார்கள்.'

ஜிப்ரானின் வாழ்க்கைச் சரித்திரத்தை எழுதிய எழுத்தாளர் ஒருவர் 'நியிட்ஸ்சி'யின் நூல்களைப் படித்து, ஜிப்ரான் அவர்பால் கவரப்பட்டு அவர் எண்ணங்களால் ஆக்ரமிக்கப்பட்டார், என்று கூறுகின்றார்.

ஜிப்ரான் மத்திய கிழக்கு நாடுகளில் இருந்த தன் மக்கள் துருக்கிய சாம்ராஜ்யத்தை எதிர்த்து, புரட்சி செய்ய வேண்டுகோள் விடுத்தார். ஆனால் அவர் ஒருபோதும் கடவுள் இருப்பதை மறுக்கவே இல்லை.

ஜிப்ரான் கடவுளை முற்றும் நம்பினார்; ஆத்மா அழியாதது என்று ஒப்புக்கொண்டார். ஆனால் அவர் மனிதனுக்கும் ஆத்மாவிற்கும் ஓர் வழிகாட்டி தேவை என்றும் அது எத்தகைய வழிகாட்டி என்றும் நம்பினாரா?

ஜிப்ரானின் பழக்க வழக்கங்கள், அவர் பின்பற்றிய சமய நெறி, இவற்றின் பின்னணி என்ன என்பதை நாம் தெரிந்து கொண்டால்தான் அவரின் நூல்களில் தோன்றும் கேள்விகளுக்கு விடை காண முடியும். ஓர் மரோனைட் பாதிரியாரின் மகளுக்குப் பிறந்தவர்தான் ஜிப்ரான். ஜிப்ரானுக்கு 'ஞானஸ்நானம்' பெயரிடு விழா நடைபெற்றபோது அவரின் பாட்டனார்தான் ஏசுகிறிஸ்து பேசிய மொழியான 'சிரியிக்' அல்லது 'அராமிக்' என்ற மொழியிலேயே தான் அந்த விழாவை நடத்தினார்.

லெபனான் நாட்டு பழக்க வழக்கங்களுக்கு எடுத்துக் காட்டான 'மரோனெட்' மாதா கோயில் ஓர் தனித்தன்மை வாய்ந்தது.

அது உலகத்தின் தத்துவங்கள், பேரறிவு, இவற்றின் ஒன்றிற்கொன்று மாறுபட்ட மார்க்கங்களைக் கொண்டதாக இருந்தது. லெபனானுக்கு 'மரோனைட்' சடங்குகள் நேராக 'ஆன்டியோச்' திருச்சபையினின்று வந்ததாகும். இவர்களும் 'ரோமன் கத்தோலிக்க'

மதத்தைச் சேர்ந்தவர்களே, ஆனால் மத்திய கிழக்கு நாடுகளிலும் 'ஆன்டியோச்' பரம்பரையின் சடங்கு களையும் பழைமையான ஏசு பேசிய மொழியையும் அப்படியே பின்பற்றி பாதுகாத்தது. இருப்பினும் ரோமநாட்டு கத்தோலிக்க மதத்திற்கு உட்பட்டு இணைந்து இருந்தது. மரோனைட் பாதிரியார்கள் திருமணம் செய்து கொள்ள அனுமதிக்கப்பட்டனர்; திருமணமானவர்களும் பாதிரியாகலாம். ஆனால் மரோனைட் சத்தியங்களை ஏற்று பாதிரியின் தலைமைப் பீடத்தை அடைந்த பிறகு திருமணம் செய்து கொள்ள மாட்டார்.

ஜிப்ரானுக்கு ஐந்து வயது ஆகும்போது கிராம பள்ளிக் கூடத்தில் சேர்க்கப்பட்டார். அந்த பாடசாலை மரோனைட் திருச்சபையின் பராமரிப்பில் இருந்தது. அவருக்கு 11 வயது இருக்கும்போதே கடவுள் தோத்திரப் பாடல்களையெல்லாம் மனப்பாடம் செய்து விட்டார். 13-ஆம் வயதில் திருச்சபைக் கல்லூரியான அல்இக்மட் (Al Hikmat) கல்லூரியில் சேர்ந்து 5 ஆண்டு படித்தார். அவருடன் தந்தை ஜோசப் அட்டாட் அவர்களும் படித்தார் ''இவர் ஒருவரே எனக்கு ஒவ்வொன்றை யும் கற்றுத் தந்தார்'' என ஜிப்ரான் கூறுகின்றார்.

ஜிப்ரான் அறிவிலும் அனுபவத்திலும் முதிர்ந்த பிறகுதான் ''தீர்க்கதரிசியையும்'' ஏசு மனிதனின் மகன்'' ஆகியவற்றை எழுதினார். அவற்றில் கிழக்கு நாடுகள், மேற்கு நாடுகளின் ஆழ்ந்த அறிவையும், சிந்தனை களையும், புனித பைபிளில் அவரின் ஆழ்ந்த அறிவையும் வெளிப்படுத்துகின்றன; ஜிப்ரான் அராபிய தத்துவ ஞானிகளின் அறிவை மட்டுமன்றி மேற்கு நாடுகளின் தத்துவ ஞானியான துறவி அகஸ்டின் அவர்களின் அறிவையும் தன் நூல்களில் எழுதியுள்ளார். அகஸ்டின் தான் லத்தீன் பிரம்மஞானத்தின் தந்தையாகக்

கருதப்படுகிறார். அகஸ்டின், லெபனான் நாட்டு வழித்தோன்றல் ஆவார். (டியூனிக்) (அ) புயூனேஷியன்ஸ்) அகஸ்டின் கார்த்தேஜ் பள்ளியில் புயுனேஷியன் பள்ளி முறையில் படித்து 33-ஆம் வயதில் கிறிஸ்துவ மதத்தில் சேர்ந்து அதை ஏற்றார். துறவி 'பால்' அவர்களின் மனிதனின் பாவங்கள் பற்றி சித்தாந்தத்தை ஏற்றுக் கொண்டார். ஆனால் பாவங்களை மனிதன் தன் இச்சையாகவே செய்கின்றான் என்று விளக்கமளித்தார். கருணையும் உதவியும் பெற்றால்தான் மனிதன் மோட்சம் பெறுவான் என்று எழுதினார். ஆனால் அந்த கொள்கை இப்போது ஒரு மூடபக்தி சித்தாந்தமாக திருச்சபையால் கருதப்படுகின்றது.

ஜிப்ரான் கிறிஸ்துவ மத நூல்களையும், இஸ்லாமிய மத நூல்களையும் ஆழ்ந்து படித்தார். அவர் மிகவும், தொன்மையான லெபனான் நாட்டு இஸ்தார், பால், தாமஸ் இவற்றின் பாதிரியார்களை நன்கு ஆழமாக அறிவார். அவருக்கு மோஸஸ், தீர்க்கதரிசிகள், புனிதர்கள் பற்றி நன்கு தெரியும். அவர் பௌத்த மதம், ஜொராஸ்டர், கன்பூசியஸ், வால்டையர், ரூஸோ, நிமிட்ஸ்சி, ஜெபர்சன், எமர்சன், லிங்கன் முதலிய அனைவருடைய கொள்கைகள், கோட்பாடுகள், உபதேசங்கள், விருப்பங்கள், விளக்கங்கள் அனைத்யையும் கற்றுத் தேர்ந்தார்.

நம் மதங்களை எல்லாம் நமக்குக் கட்டுப்பாடு, வழிகாட்டும் தன்மையைத்தான் வலியுறுத்துகின்றன. அவற்றை முதலில் விழாப் பழக்கங்களாகவும், மதச் சடங்குகள் பல வேறுபாடுகளுடன் இருந்தாலும், மேற்கு நாட்டு நீதிநெறிகள் எல்லாம் ஜிப்ரானின் முன்னோர்கள் மத்திய தரைக்கடல் கரைகளைச் சுற்றியுள்ள நாடுகளின் சட்ட திட்டங்களை வகைப்படுத்தி, பின்பற்றப் படுவதுதான். அந்த சட்ட திட்டங்கள்தான் கருணை,

அன்பு, நீதி, வீரம், சகிப்புத்தன்மை, விவேகம், முன்யோசனை, சுயநலமின்மை, தியாகம் அனைத்தையும் கற்பிக்கிறது.

ஜிப்ரான் ஒரு புரட்சிக்காரர்; அவர் மூட பழக்கவழக்கங்களுக்கும், கண்மூடித்தனமான மத நம்பிக்கைகளுக்கும் எதிரி. அவருடைய முன்னோர்களின் சமூகத்தின் தனித் தன்மைக்கு எதிரியல்லர்.

'பார்பரா யங்' எனும் ஜிப்ரானின் கடைசி 7 ஆண்டுகளாய் உடனிருந்து உதவிய தோழி, செயலாளி, பாதுகாவலர், வாழ்க்கை வரலாறு எழுதிய ஆசிரியை, எழுதுகின்றார்.

''ஒழுங்குபடுத்திய சங்கமாய் இயங்கும் மதம், ஜிப்ரானைக் கவரவில்லை'' ஆனால் ஆழ்ந்து அவர் நூல்களைப் படிக்கும்போது அவர் நாத்திகர் அல்லர் என்பது தெரியும். அவருடைய கோபமெல்லாம் நடைமுறையில் புழங்கி வந்த மதச் சம்பிரதாயங்களும், பழக்கவழக்கங்களும் மட்டுமேயொழிய மதத்தைத் தழுவிய மக்கள் பால் அன்று.

ஜிப்ரான் வளர்ந்து ஆண்மகனின் வயதை அடையும் போது லெபனான் நாட்டைத் துருக்கி நாட்டவர் ஆண்டார்கள்; அவர்களிடம் வரி வசூல் செய்து கப்பம் கட்டி வாழும் ஒரு நிலையை ஏற்றுக் கொண்டது; அப்போதுதான் அது இஸ்லாம் சமூகத்தில் இறவாமல் உயிர் வாழும் மதமாக இருக்க முடியும். கிறிஸ்துவ லெபனானியர், 'மரோனைட்ஸ்' எல்லோரும் திருச்சபைக்கு அதிகமாக நிலங்களை வழங்கினார்கள்; அவர்களால் அந்நிலங்களை விவசாயம் செய்ய இயலவில்லை. இதனால் திருச்சபை உழவர்களுடன் சேர்ந்து விவசாயம் செய்து அதில் பங்கு பெறுபவராக

மாறினர்; ஆகவே அவர்களே நிலங்களை மற்றவர்க்கு பயிரிட ஒதுக்கவும் அதற்கு சொந்தம் கொண்டாடவும், தனக்கு வேண்டியவர்களுக்கே நிலத்தை விடவும் முற்பட்டனர். இப்படி திருச்சபைக்கு அதிகாரம், ஆதிக்கம் அதிகமாக வளர வளர பாதிரிகள், பிஷப்புகள், இவர்களே தன் உறவினர்களையும் நண்பர்களையும் பணக்காரர் களாக்குவதற்கு திருச்சபையின் அதிகாரங்களையும் பட்டம் பதவிகளைக் கொண்டு, நேர்மையற்ற வழியிலே வெறியாட்டம் ஆடினர்.

ஜிப்ரான் மத நம்பிக்கையுடன் திருச்சபையின் புனிதத் தன்மையை வளர்க்க விரும்பினார். ஆனால் திருச்சபையின் உலக ஆசை, பணம், பதவி, அதிகாரம், ஆணவம், வேண்டியவர் களுக்கு சலுகைகள், இவற்றையெல்லாம் கொஞ்சமும் ஒத்துக்கொள்ள வில்லை; அங்கீகரிக்கவில்லை. எதிர்த்தார்; கண்டித்தார்.

தான் முதன் முதலில் காதலித்த செல்மாவை, பாதிரியார் தன்னுடைய சுயநலமும், வெறியும் கொண்ட உறவினனுக்கு மணமுடித்து வைத்தார். ஜிப்ரான் தான் பிறந்த நாட்டை விட்டு அமெரிக்கா சென்று வாழ்ந்தபோது அங்கு நிலவிய சுதந்திரம், விடுதலை, சகிப்புத்தன்மை, அனைத்யையும் கண்டு அனுபவித்த போது லெபனானில் நிலவிய மாறுபட்ட மோசமான சூழ்நிலையை நன்றாக உணர்ந்தார். இவர் மத்திய கிழக்கு நாடுகளில் பழக்கத்தில் இருந்த மதத்தையும் அதை கட்டிக் காக்கும் பாதிரிகள், பிஷப்புகள், முல்லாக்கள், இவர்களின் மத நடைமுறைகள் அனைத்தையும் எதிர்க்கவும் போராடவும் தூண்டின.

ஜிப்ரான் அரபிக் மொழியில் பிற்காலத்தில் 'கலீல் கருத்து மாறுபட்டவன்' (Kahlil The Heretic) என்ற கதையை எழுதினார். இதில் ஓர் புது மாணவன், மடாதிபதியிடம்

தன்னிடம் உள்ள நிலபுலன்களை எல்லாம் ஏழைகளுக்குப் பங்கிட்டு கொடுக்கும்படி வேண்டிக் கொண்டு பிறகு பாதிரிகளை மக்களிடம் போய் கடவுள் பிரசாரம் செய்யுங்கள் என்று வேண்டு கின்றார்.

''நாம் பரந்து கிடக்கும் நிலத்தையெல்லாம் தேவையுள்ள ஏழை விவசாயிகளுக்குப் பங்கிட்டு கொடுப்போம்; நாம் மடத்திலே ஏழைகளிடமிருந்த கொள்ளை கொண்டு சேமித்து வைத்திருக்கும் செல்வத்தையும் தானியத்தையும் அவர்களிடமே திரும்பக் கொடுப்போம்; நாம் மடத்தை விட்டு வெளியேறி, மக்களுக்கு மகிழ்ச்சியாக வாழக் கற்றுக் கொடுப்போம்; சொர்க்கத்தின் கதவுகளைத் திறந்து காட்டி மக்களை மகிழ வைப்போம். வாழ்க்கையின் பெருமைகளையும், கௌரவத்தையும் சுதந்திரத்தையும் போற்றிப் புகழ்வோம்.''

''நாம் மடத்திலே இருந்து அனுபவிக்கும் சுகத்தையும் அமைதியையும் விட, நாம் வெளியுலகில் சென்று மக்களுடன் கலந்து உறவாடி அனுபவிக்கும் துன்பம் தெய்விகமாயும், நம்மை உயர்த்துவதாயும் இருக்கும். இந்த மடாலயத்திலே நம் கண்ணுக்குத் தெரியாத அறநெறியை விட, நாம் நம் அனுதாபத்தை உடன் வாழும் மக்களின் இதயத்தைத் தொடும்படி வாழ்வது உயர்ந்ததாகும். நம் ஆறுதல் வார்த்தைகள் பலமற்றோர்க்கும், குற்றவாளிகளுக்கும், பாபிகளுக்கும் மிகவும் மேன்மையாகவும் சிறப்பு மிக்கதாயும் இருக்கும்; இந்தக் கோயிலிலே உட்கார்ந்து பூஜை செய்து நீண்ட, வரண்ட, வெற்று துதிப்பாடல்களைப் பாடி இறைவனை பூஜிப்பதை விட மக்களுக்குத் தொண்டாற்றுவதே சிறந்தது.

ஜமீன்தார்களும், நிலப்பிரபுக்களும், தங்கள் கோட்டைகளிலே சுகமாக இருந்துகொண்டு, சுல்தான்

தங்களை மக்களுக்கு மேலாக அதிகாரம் செய்து வரி வசூலிக்க அமர்த்தப்பட்ட அதிகாரி என்று கூறுகின்றான்; பாதிரியார் பலி பீடத்திலே அமர்ந்து கொண்டு கடவுள் தங்களை மக்களின் ஆத்மா, நிலப்பிரபுக்கள் ஏழை விவசயிகளின் கைகளைக் கட்டிவிட, பாதிரியார்கள் அவர்களின் சட்டைப் பைகளில் உள்ளதைக் களவாடுகின்றனர். சட்டத்தின் பிரதிநிதியாக நிலப் பிரபுக்களுக்கும் கடவுளின் பிரதிநிதியாக பாதிரியார்களுக்கும் இடையே, லெபனான் நாட்டு மக்களின் உடம்பும் உயிரும், உலர்ந்து, காய்ந்து செத்து மடிகிறது.''

'ஜான் பைத்தியக்காரன்' (John-The Madman) என்ற கதையிலே சாதாரண மக்கள் படிக்கக்கூடாது என்று தடை விதிக்கப்பட்ட பைபிளில் உள்ள புதிய ஏற்பாட்டை ஜான் படிப்பதாக ஜிப்ரான் எழுதுகின்றார்.

ஒரு நாள் ஜான் படித்துக்கொண்டும், தியானம் செய்து கொண்டும் இருந்ததால் தன் ஆட்டு மந்தையை கவனிக்க வில்லை. அந்த ஆடுகள் மடாலயத்தின் புல் வெளியிலே மேய்ந்து அலைந்து கொண்டிருந்தது. பாதிரியார்கள் ஆடுகளை வளைத்துக் கொண்டு ஜானிடமிருந்து சேதமடைந்த தற்கு நஷ்ட ஈடு கேட்டனர். பணம் கொடுக்க இயலாததால் ஜானின் தாயார் தன்னுடைய கழுத்தில் அணிந்திருந்த ஆபரணத்தை பாதிரியாரிடம் கொடுத்து ஆட்டு மந்தையை மீட்டு வந்தாள். இதனால் கோபமடைந்த ஜான் திருச்சபைக்கும் மடாலயத் திற்கும் எதிராக தர்மயுத்தம் செய்பவனாக, பொது சதுக்கங் களிலே பாதிரிகளை எதிர்த்து பிரசாரம் செய்பவனாக மாறி விட்டான்.

''ஓ ஏசுநாதரே! திரும்பி வாருங்கள்; மறுபடியும் உங்கள் திருக்கோயில்களிலிருந்து இந்த தெய்வ நம்பிக்கையை, வியாபாரம் செய்யும் பாதிரிகளை விரட்டி ஓட்ட வாருங்கள். அவர்கள் மெழுகுவர்த்தியும்,

சாம்பிராணி தூப தீபமும் போட்டு அப்புகையால் ஆகாயத்தையே மூடி மறைத்து விடுகின்றனர்; ஆனால் கடவுளின் மேல் நம்பிக்கையுடன் துதிக்கும் பாமர மக்களைப் பட்டினிப் போட்டு கொன்று விடுகின்றனர்''

பாதிரியார்கள் 'ஜான்' என்ற இந்த இளைஞனைக் கைது செய்து விடுதலை செய்ய மறுத்து விட்டனர். அவர் தகப்பனாரை அழைத்து வந்து ஜான் பைத்தியக்காரன் புத்தி சுவாதீனம் அற்றவன் என்று அறிவிக்க வைத்தனர். அதிலிருந்து யாருமே ஜான் கூறும் மொழிகளை செவிசாய்த்து கேட்பதுமில்லை; ஜானை பைத்தியக்காரன் என்று அனைவரையும் நம்ப வைத்தனர்.

ஜிப்ரான் தன் நண்பருக்கு ''ஜான் பைத்தியக்காரன்'' என்பது பற்றி எழுதும்போது,

''நான் இதற்கு முன்பு எழுதிய எழுத்தாளர்கள், மதத் துறவிகளையம் பாதிரிகளையும் கடுமையாக தாக்கி, மத சம்பிரதாய பழக்கவழக்கங்களையும் பாதிரிகளின் கொடுங் கோன்மையைக் கண்டித்தனர். கொடுங்கோல் ஆட்சிக்கு மதத்தை ஒரு சாக்காக வைப்பது உபயோகிப்பது தவறு. அதற்காகத்தான் நான் என் கதையிலே ஜான் ஏசுநாதரின் மேல் சக்தி மிக்க நம்பிக்கை கொண்டவன் என்றும், பைபிளிலும், ஏசுவின் போதனைகளிலும், சுவிசேஷங்களிலும் பற்றும் நம்பிக்கையும் கொண்டவன் என்று திட்டவட்டமாக உருவாக்கினேன்.''

மேற்கு நாடுகளின் நீதிநெறிகள் எல்லாம் மதத்தின் உற்பத்திப் பொருள்கள். மேற்கு நாடுகள் எல்லாம் மதத்தை, நாட்டின் ஆட்சியிலே ஊடுருவாமல் பிரித்து மதம் வேறு நாட்டாட்சி வேறு என்றனர். ஆனால் நம்முடைய சட்டங்கள் கொலை, களவு, காமம், பொய், குடிவெறி இவற்றை மோசஸின் சட்டத்தால் தடைசெய்வதை அங்கீகரிக்கிறது. தனி மனிதனின் சொத்துரிமையை அங்கீகரிக்கிறது. ஜிப்ரான் மதங்களின் நீதி நெறியையும் வழி வழி வந்த பழக்க வழக்கங்களையும்

அங்கீகரிக்கும்போதே வீரம், நீதி, அன்பு, கருணை, தந்நல மறுப்பு, விவேகம் இவை அனைத்தும் இடம் பெற வேண்டும் என்றார். எந்த இடத்திலும் ஜிப்ரான் ''கடவுளை நம்புவது முடியுமா? சமய நெறி முறைகளை வாழ்க்கையில் கடைபிடிக்க முடியுமா? மதச் சடங்குகள் சம்பிரதாயங்கள் இல்லாமல் மோட்சத்தை அடைய முடியுமா?'' என்று கேட்கவில்லை.

இதற்கு ஜிப்ரான் தன் அரபிக் கவிதை ஒன்றின் கேள்வியை அங்கீகரிக்கின்றார்.

## ஓ ஆத்மாவே! O Soul

-கலீல் ஜிப்ரான

ஓ ஆத்மாவே! நான் என்றும் அழியாமல் இருக்கும் 'நிலைத்தத் தன்மை'க்குப் பேராசைப்படாமல் இருந்தால் நான் காலமெல்லாம் பாடப்படும் கவிதைகளைக் கற்றிருக்கவே மாட்டேன்.

அதைவிட நான் என்னையே தற்கொலை செய்து கொண்டிருப்பேன். அப்போது என் சாம்பல் மட்டும்தான் என் சமாதியிலே புதையுண்டு இருக்கும். மீதி ஏதும் என்னில் மிஞ்சி இருக்காது.

ஓ ஆத்மாவே! நான் கண்ணீருடன் ஞானஸ்நானம் செய்யப்படாமல் இருந்தால், நோய் எனும் பிசாசு என் கண்களை மூடி மறைக்காமல் இருந்தால், நான் வாழ்க்கையைக் கருமையாக பார்த்திருப்பேன், திரை வழியே காண்பது போல்.

ஓ ஆத்மாவே! வாழ்க்கையே ஓர் இருள்தான். காலையில் சூரியன் உதிக்கும்போது அது மறைகிறது.

ஏங்கும் என் இதயம் கூறுகின்றது. 'சவக் குழியிலே சமாதியிலே தான் அமைதி நிலவும்' என்று.

ஓ ஆத்மாவே! உடம்பு அழிந்து விடுவது போலவே ஆத்மாவும் அழிகின்றது, சாவது மறுபடியும் உயிர் பெறுவதில்லை; என்று சொல்வானானால் அவனிடம் கூறுங்கள்.

''மலர்கள் வாடி உலர்ந்து அழிகின்றன. ஆனால் விதைகள் வாழ்ந்து நம் முன்னே வாழ்க்கையின் இரகசியத்தை என்றும் அழியாமல் வாழ்விக்கின்றது என்று எடுத்துக் காட்டுகிறதே.''

# 8

## ''உன் நாடு உனக்கென்ன செய்தது என்று கேட்காதே!''

"Ask not what Your Country can do for You!"

*நிலப்பிரபுத்துவம் எனும் அமைப்பு லெபனான் நாட்டு அரசியல், ஜாதி சமய வாழ்க்கையிலிருந்தே மறைந்துவிட்டது; இப்போது லெபனான் சுதந்திர நாடு; மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பாராளுமன்றமும் நாட்டின் தலைவரும் இருக்கின்றனர். ஜிப்ரான் 80 ஆண்டுகளுக்கு முன்பு எழுதிய கட்டுரைகளும் கதைகளும் இன்று ஓர் சரித்திரம்; ஆனால் மற்றவர் எல்லாம் இப்போது இன்றைய புதுமையான அரசியல், சமூக பழக்கவழக்கங்களைக் கொண்டு கால எல்லை இன்றி வாழ்கின்றனர்.*

*இன்று அமெரிக்காவில் (USA) பலரின் இல்லங்களிலே ஜான் F. கென்னடி கூறிய வாசகம் போற்றி பாதுகாக்கப்பட்டு விளங்குகின்றது.*

> *''உன் நாடு உனக்கென்ன செய்தது என்று கேட்காதே, ஆனால் நீ உன் நாட்டிற்கு என்ன செய்தாய்! கேள்.''*

*இந்த வாசகத்தின் கரு ஜிப்ரான் 80 ஆண்டுகளுக்கு*

முன்பு அரபிக் மொழியில் எழுதிய ஓர் கட்டரையில் உள்ளது. அந்த கட்டுரைத் தலைப்பு இதுதான். *'புதிய பங்கீடு'* (The New Deal) or *'புதிய எல்லை'* (The New Frontien)

இதை ஜிப்ரான் மத்திய கிழக்கு நாட்டு மக்களுக்காகவே எழுதினார். ஆனால் அதன் தத்துவம், புகட்டும் பாடம், மனிதன், இந்த சுதந்திரமான சமூக அமைப்பில் வாழும் காலம் வரை உயிர் வாழ்ந்து, மக்களுக்கு வழிகாட்டியாய் அமையும். ஆகவே அதன் மொழி பெயர்ப்பைக் கீழே அளிக்கின்றோம்.

*(ஜிப்ரான் மறைந்த தேதி 10-4-1931. ஆகவே இக்கட்டுரை இன்றைக்கு 80 ஆண்டுகளுக்கு முன்பு எழுதப்பட்டிருக்கலாம். இன்றும் இது உயிருள்ளது)*

'புதிய எல்லைப்புறம்'
The New Frontier

மத்திய கிழக்கு நாடுகளிலே இன்று இரண்டு சவால்விடும், சண்டைக்கு அறைகூவும் எண்ணங்கள் உள்ளன; பழைமையும் புதுமையும்.

பழைய எண்ணங்கள் விரைவில் மறைந்து அழிந்துவிடும். ஏனெனில் அவை பலமற்று தளர்ந்து சோர்ந்து விட்டன. மத்திய கிழக்கு நாடுகளிலே இப்போது ஓர் விழிப்புணர்வு உண்டாகி மக்களைத் தூக்கத்திலிருந்து தட்டி எழுப்புகின்றது. இந்த விழிப்புணர்வு கட்டாயம் வெற்றி பெறும். ஏனெனில் சூரியனே இதன் தலைவன்; புலரும் பொழுதே, காலை உதயமே இதன் போர்ப்படை.

மத்திய கிழக்கு நாடுகளின் வயல் வெளிகளிலே ஒரு போது மிகப் பெரிய இடுகாடாக இருந்த இந்த வயல் வெளிகளிலே, இன்று வசந்தமெனும் இளைஞர்கள் இந்த கல்லறைகளிலே சமாதிகளிலே, புதைக்குழியிலே

உறங்கும் அனைவரையும் தட்டி எழுப்பி வீரப்போர் புரிய, புதிய எல்லைப்புறம் நோக்கி படையை நடத்திச் செல்ல வீர முழக்கம் செய்கின்றனர்.

வசந்தம் தன் பாடல்களைப் பாடக் கேட்டு இறந்த குளிர்காலம் துடித்தெழுகின்றது! தங்கள் போர்வையை உதறிவிட்டு வெற்றிநடையுடன் முன்னேறுகின்றனர்.

மத்திய கிழக்கு நாடுகளின் வானவெளியிலே, அடிவானத்திலே, தொடுவானத்திலே, ஓர் புதிய விழிப்புணர்ச்சி பிறந்து, வளர்ந்து, விரிந்து, பரவி வருகிறது; அது உணர்ச்சி மிக்க, அறிவு மிக்க, ஆற்றல் மிக்க எல்லா ஆத்மாக்களையும் அடைந்து ஆட்கொள்கிறது. அது புகழ்மிக்க கம்பீரமான இதயங்களில் புகுந்து, ஊடுருவி, அவர்களின் அனுதாபத்தையும் கவருகின்றது.

இன்று மத்திய கிழக்கு நாடுகளிலே இரண்டு எஜமானர்கள் இருக்கின்றனர். ஓர் எஜமானர் முடிவெடுக்கவும், உத்தரவிடவும், கீழ்ப்படிய வைக்கவும் வாழ்கின்றான்; ஆனால் அவன் மரணமடையும் காலம் நெருங்கிவிட்டது.

ஆனால் மற்றோர் எஜமானன் சட்ட திட்டங்களுக்கு அடங்கி ஒத்துப் போய் மௌனமாய் இருக்கின்றான்; நீதியை எதிர்பார்த்து அமைதியுடன் இருக்கின்றான்; அவன் மிகவும் அசுர பலம் பொருந்தியவன்; அவனுக்குத் தன் பலத்தின் தன்மை நன்றாகத் தெரியும் தான் வாழ்வதன் காரணத்தை மிகவும் தன்னம்பிக்கை யுடன் உணர்ந்து தன் விதியிலே நம்பிக்கை கொண்டுள்ளான்.

இன்று மத்திய கிழக்கு நாடுகளிலே இரு வகையான மனிதர்கள் இருக்கின்றனர். ஒருவன் 'பழைமை விரும்பி', கடந்த காலத்தவன்; இன்னொருவன் புதுமை விரும்பி, வருங்காலத்தவன், இதிலே நீ எந்த இனத்தைச் சேர்ந்தவன்

சொல்? அருகே நெருங்கி என்னிடம் வா! நான் உன்னை கூர்ந்து கவனித்து உன் தோற்றத்தையும் குணத்தையும் புரிந்து கொண்டு நீ வெளிச்சத்தை நாடி வர முற்படுகின்றாயா? அல்லது இருட்டை நோக்கி பின்னோக்கி நடக்கின்றாயா? என்று தெரிந்து புரிந்து கொள்கின்றேன்.

என்னிடம் வந்து நீ யார்? எப்படிப்பட்டவன் என்று தைரியமாகச் சொல்.

நீ ஓர் அரசியல்வாதியா? நாடு உனக்கு என்ன செய்தது என்று கேட்கின்றாயா?

அல்லது நீ நாட்டிற்கு என்ன செய்தாய்? என்று கேட்கின்றாயா?

நீ முதல் கேள்வியின் வர்க்கத்தைச் சேர்ந்தவனானால் நீ ஓர் புல்லுருவி. சுரண்டி வாழ்பவன்; ஊடுருவி.

நீ இரண்டாம் வர்க்கத்தைச் சேர்ந்தவனானால் நீ பாலைவனத்திலே உள்ள ஓர் சோலைவனம்.

நீ ஓர் வியாபாரியா? சமூகத்தின் தேவைகளை உயிர் வாழ்க்கையின் அவசியத் தேவைகளுக்கு உபயோகிக் கின்றாயா? உன் பொருள்களை அளவிட முடியாத அதிலாபம் பெற விற்று ஒருவனே ஆக்ரமித்துக் கொண்டு தனி மனித சாம்ராஜ்யம் நடத்துகின்றாயா? அல்லது நேர்மையாக நாணயமாக, பெரும் உழைப்பால் ஊக்கமும் சுறுசுறுப்பும் கொண்டு விவசாயி களுக்கும் நெசவாளி களுக்கும் இடையே நாணயமான பண்டமாற்று செய்ய உதவுகின்றாயா? வழி வகை செய் கின்றாயா? தேவைக்கும் கொடுக்கல் வாங்கலுக்கும் இடையே நியாயமான லாபத்தை அடையும்படி இடைத்தரகராக, நேர்மையான வியாபாரியாக இருக்கின்றாயா? செயல்படு கின்றாயா?

முதல் இனத்தைச் சேர்ந்தவனானால் நீயோர் குற்றவாளி; நீ மாளிகையில் இருப்பினும் சிறையிலே இருப்பினும் ஒன்றே.

நீ இரண்டாம் இனத்தைச் சேர்ந்தவனானால் நீ ஓர் தர்மவான்; உன்னை மக்கள் வாழ்த்தினாலும் தூற்றினாலும் ஒதுக்கி வெறுத்தாலும் நீ உயர்ந்தவன்.

நீ ஓர் மதத் தலைவனா? : பாதிரியாரின் நீண்ட அங்கியை உன் உடல் மறைக்க அணிந்துகொண்டு பறக்க விடுகின்றாயே அது மக்களின் அறியாமையால் நெய்யப்பட்டதா? மக்களின் இதயத்தில் எளிமையால் செய்யப்பட்ட மணிமகுடத்தை அணிந்திருக்கின்றாயா? மக்களின் வருவாயை நீ அபகரித்து அதன் மூலம் வாழ்ந்துகொண்டு பேய் பிசாசுகளை வெறுத்து விரட்டுவதாக பாசாங்கு செய்து கொண்டிருக்கின்றாயா?

அல்லது நீ ஓர் பக்திமிக்க புனிதமான துறவியா? தனி மனிதனின் தெய்வ பக்தியில் வளர்ந்து முன்னேறும் நாடுகளின் அடித்தளத்தைக் காண்கின்றாயா? இந்த பேருலகை வழிநடத்தும் ஆத்மாவை-அழியாமல் என்றும் நிலைத்து வாழும் ஆத்மாவை-அடைய தன்னுடைய ஆத்மாவையே தேடித் துருவி புனிதமாக்கி அதை ஏணியாக உபயோகித்து அந்த நிலையான ஆத்மாவை அடைய முயல்கின்றாயா?

நீ முதல் ரகத்தைச் சேர்ந்தவனானால் நீ ஓர் நாத்திகன். கடவுள் நம்பிக்கை அற்றவன்; நீ பகலெல்லாம் விரதமிருந்து இரவெல்லாம் கடவுளைத் தொழுது வணங்கினாலும் பயனில்லை.

நீ இரண்டாம் ரகத்தைச் சேர்ந்தவனானால் உண்மையில் தோட்டத்திலே மலர்ந்த ஊதா நிறப் பூங்கொத்து. உண்மையின் நறுமணம் மக்களினத்தின் மூக்கிலே ஏறவில்லையானாலும் அதன் நறுமணம்

வானவெளியிலே காற்றிலே கலந்து மலர்மணம் பாதுகாக்கப்படுகின்றது.

நீ ஓர் தினசரி செய்தித்தாள் விற்பவனா? நீ உன் எண்ணங்களையும், கொள்கைகளையும் அடிமை வியாபாரம் செய்யும் சந்தைக் கடையிலே விற்பவனா? நீ மக்களின் துக்கம், துன்பம், விசனம் இவற்றைப் பற்றி எழுதுகின்றாயா? பிணம் தின்னிக் கழுகுகள் செத்து அழுகி நாற்றமெடுத்த பிணங்களை கால்நடைகளைத் தின்னவே வானிலிருந்து கீழ் இறங்ககின்றன அல்லவா?

நீ ஓர் ஆசிரியனா? நகரத்தின் நடைபாதைகளிலே அனுபவங்களைக் கற்று சேகரித்து வாழ்க்கையை அறிந்து அவற்றை நாட்டு மக்களுக்கு நீதிபோதனையாக விளக்கி படிப்பிக்கின்றாயா?

நீ செய்தித்தாள் விற்பனனாக இருப்பின் நீ மக்களினத்தின் நோய், இரணம், புண்.

நீ ஆசிரியனாக இருப்பின் அந்த புண்ணை ஆற்றும் மருந்து.

நீ ஓர் ஆளுநரா? உன்னைப் பதவியில் அமர்த்தியவர் முன் நீ உன் மரியாதையை இழந்து தாழ்ந்து அடிபணிகின்றாய்; நீ ஆட்சி செய்யும் மக்களை உன்னை அடிபணிய வைக்கின்றாய். நீ உன் பைகள் நிறைய பணம் வருகின்றதென்றால்தான் உன் கையை உயர்த்துகின்றாய். என் பேராசைக்குத் தவிர வேறு எதற்கும் ஒரு நடவடிக்கையும் எடுப்பதில்லை!

நீ ஓர் உண்மை ஊழியனா? மக்களுக்காகவே அவர் நன்மைக்காகவே, பாடுபடும் தொண்டனா?

நீ ஆளுநரானால் நாட்டின் நெற்களங்களிலே ஒதுக்கப்படும் பதர். பூண்டு.

நீ தொண்டனானால் நாட்டின் நெற்களஞ்சியங்களின் ஆசீர்வாதம்.

நீ ஓர் கணவனா? நீ உனக்கு வேண்டியவற்றை அங்கீகரித்து, அதையே உன் மனைவிக்கு மறுக்கின்றாயா? நீ உன் மனைவியை கவனிக்காமல் தவிக்கவிட்டு சிறையிட்டு அதன் சாவிகளை உன் காலணியிலே ஒளித்து வைத்திருக்கின்றாயா? நீ விரும்பும் எல்லா உணவுகளையும் வயிறுபுடைக்க உண்கின்றாயா? உன் மனைவியை பட்டினிப்போட்டு வெற்றுத் தட்டின் எதிரே பசியுடன் உட்கார்ந்து அழவிடுகின்றாயா?

அப்படியானால் நீ குகைகளிலே வாழும் மிருகத்தை விட கேவலமானவன், மிருகங்களின் தோலையே ஆடையாக உடுத்து வேட்டையாடித் திரிந்த கற்கால மனிதர்கள்.

நீ உன் மனைவியின் வாழ்க்கைத்துணைவனா? அவளுடன் கைகோத்து வாழ்க்கைப் பயணத்திலே அவளின் விருப்பம், எண்ணம், ஆசைகள் அனைத்திற்கும் மதிப்பளித்து, அவளுடைய இன்ப துன்பங்களிலே பங்குகொண்டு, உன் வெற்றியை, மகிழ்ச்சியை அளிக்கின்றாயா?

அப்படியானால், நீதி, ஞானம் இவற்றின் உதயத்தை நோக்கி வேகமாக முன்னேறும் நாட்டின் தலைவனாகத் தகுதி பெற்றவன்.

நீ ஓர் எழுத்தாளனா? உன்னையே புகழ்ந்துகொண்டு பழைமைப் புழுதியெனும் பள்ளத்தாக்கிலே தலையை வைத்துக்கொண்டு, நைந்து கிழிந்து கந்தலான காலத்தால் ஒதுக்கப்பட்ட எண்ணங்களைப் பின்பற்றி, நம்பி எழுதுகின்றாயா?

அப்படியானால் நீ ஓர் மடையன்; பலமற்றவன்.

நீ ஓர் தூயச் சிந்தனையாளனா? எது நல்லது சமூகத்திற்கு ஏற்றது, உபயோகமானது என்று உணர்ந்து நல்லதை வளர்த்து கட்டிக்காக்கவும், தீயவற்றை அழித்து ஒழிக்கவும் சமூக நன்மைக்கு அறிவுறுத்துகின்றாயா?

அப்படியானால் நீ பசித்தவனுக்கு ரொட்டி, தாகம் உடையோனுக்கு தண்ணீர் போன்றவன்.

நீ ஓர் கவிஞனா? பிரபுக்களின் வாயிற்படியிலே தம்பூரா வாசிக்கின்றாயா? அவர்களின் திருமணங்களிலே பூக்களை வீசுகின்றாயா? ஊர்வலங்களிலே வாய் நிறைய வெந்நீரையும், கடல் பஞ்சையும் வைத்துக்கொண்டு முன் நடக்கின்றாயா? விழா மேடையை அடைந்தவுடன் வாயில் உள்ள வெந்நீரையும் கடல் பஞ்சையும் அழுத்தி உதடுகள் நாக்கின் வழியே சொரிகின்றாயா?

அப்படியானால் நீ உன் ஆத்மாவின் உந்துதலுக்கு எதிராக, நினைப்பதற்கு மாறுபட்டு சொல்வித்தை செய்யும் மாயாஜாலக்காரன்; பொய்யன்.

அல்லது கடவுள் உன்னிலே வெகுமதியாக அளித்ததை சொர்க்கத்தின் புகழ்பண்ணை, இனிமையாகப் பாடி, வாழ்க்கையின் அழகால் உன் உள்ளம் கவர்ந்து இழுக்கப்படு கின்றதா?

அப்படியானால் நீ எங்கள் இதயத்தே காதலாய், மனத்திலே உள்ளொளியாய் விளங்குகின்றாய்!

மத்திய கிழக்கு நாடுகளிலே இரண்டு ஊர்வலங்கள் நடக்கின்றன. ஒன்றில் கிழவர்கள், கூனல் முதுகுடன் நடக்கின்றனர்; அவர் ஊன்றும் கைத்தடிகளும் வளைந்து விட்டன. அவர்கள் மூச்சுவாங்க மலையிலிருந்து இறங்கிய வழியில் நடக்கின்றனர்.

மற்றோர் ஊர்வலத்தில் இளைஞர்கள் கால்களிலே இறக்கை வளர்ந்ததுபோல் வேகமாக ஓடுகின்றனர்; மிக இனிய பாடல்களை எல்லோரும் பாடிக்கொண்டே மகிழ்ச்சிப்பொங்க ஓடுகின்றனர்; மலை உச்சிக்கு ஏறும்போது ஏற்படும் தடைக் கற்களை தகர்த்தெறிந்து, காந்த சக்தியால் கவரப்பட்டவர்களாய், இதயமெல்லாம் மாய மந்திர மோகினியின் பாட்டிசைக்க ஏறுகின்றனர். நீங்கள் எந்த ஊர்வலத்திலே கலந்து நடக்கின்றீர்கள். உன்னையே நீ கேள்! இரவின் அமைதியிலே தியானம் செய்; நீ நேற்றின் அடிமையா அல்லது நாளையின் சுதந்திர மனிதனா?

கடந்த ஆண்டுகளின் குழந்தைகள் எல்லாம் தங்களுக்காக உண்டாக்கிய பழைய சகாப்தத்தின் மரண ஊர்வலத்திலே நடக்கின்றார்கள் என்று கூறுகின்றேன். அவர்கள் நைந்துபோன கயிற்றால் இழுக்கின்றார்கள்; விரைவில் அக்கயிறு அறுந்து விடும். எல்லோரும் மறதி எனும் ஆழமான படு பாதாளத்தில் வீழ்ந்து மடிவர். அவர்கள் வாழும் வீடுகளின் அடித்தளமே மிகவும் பலவீனமடைந்து உள்ளன. பெரும் புயல் விரைவில் வீசப்போகின்றது. அப்போது அந்த வீடுகள் அவர்களின் தலைமேல் வீழ்ந்து அவ்வீடுகளே அவர்களின் சமாதியாக மாறப்போகிறது. அவர்களின் எண்ணங்கள், பழமொழிகள், பிரசங்கங்கள், சொற்போர்கள், அவர்களின் கட்டுரைத் தொகுப்புகள், நூல்கள், அவர்களின் எல்லா ஏடுகளும் எல்லாம் வெறும் சங்கிலிகளே; அவர்களை இழுத்துச் செல்கின்றது; அவர்களுக்கு பலமே இல்லை; பெரும் கனப் பொருளை இழுக்கும் ஆற்றலும் சக்தியுமில்லை.

ஆனால் நாளைய குழந்தைகள், வருங்காலத்தின் குழந்தைகளை வாழ்க்கையே அழைக்கின்றது. அவர்கள் ஆணித்தரமாக அடிவைத்து பின் தொடர்கின்றனர்; தலை நிமிர்ந்து கம்பீரமாக நடக்கின்றனர்; அவர்களே புதிய எல்லைப் புறங்களின் உதயம்; அவர்களின் கண்களுக்கு

புகைப்படலம் திரையாகி மறைக்கவில்லை; அவர்களின் முழக்கத்தை, எந்தச் சங்கிலியின் கலகலச் சப்தமும் மூழ்கடிக்கவில்லை. அவர்கள் எண்ணிக்கையிலே குறைவானவரே! ஆனால் அவர்களின் வித்தியாசம் எப்படிப்பட்டது தெரியுமா? ஒரு கோதுமை மணிக்கும் வைக்கோல் போருக்கும் உள்ள வித்தியாசமே! ஒருவருக்கும் அவர்களைப் பற்றி தெரியாது; ஆனால் அவர்களுக்கு ஒருவரைப் பற்றி ஒருவருக்கு நன்றாகத் தெரியும். அவர்கள் மலைச் சிகரங்கள், அவர்களால் பார்க்கவும் பேசவும் முடியும்; அவர்கள் குகைகளல்ல; குகையிலே கேட்கவோ பார்க்கவோ முடியாது. அவர்கள் வயல் வெளியிலே கடவுளின் கைகளால் தெளிக்கப்பட்ட விதைகள்; அவை மண் கட்டிகளை உடைத்துக் கொண்டு முளைத்து வெளி வந்து தன் தளிர் இலைகளை சூரியனுக்குத் தலை தூக்கிக் காட்டுகிறது. அவை மிகப்பெரிய, கெட்டியான, படர்ந்த மரமாக வளரும்; அதன் வேர்கள் பூமியின் இதயத்திலே ஊன்றி வளரும்; அதன் கிளை ஆகாய வெளியெல்லாம் உயர்ந்து படரும்.

# 9

## தனிமையும் ஒதுக்கிடமும்

## Solitude and Seclusion

**வா**ழ்க்கை என்பது தனிமை, தனியிடம், ஒதுக்கிடம் எனும் பெருங்கடலிலே ஓர் தீவு.

வாழ்க்கை ஓர் தீவு, பாறைகளே அதன் ஆசைகள், மரங்களே அதன் கனவுகள், மலர்களே அதன் தனிமை; இந்தத் தீவு தனிமை, தனியிடம் எனும் கடலின் மத்தியிலே இருக்கின்றது.

ஓ என் நண்பனே! உன் வாழ்க்கை ஓர் தீவு; அது மற்ற தீவுகளிலிருந்தும், பெரு நிலப்பரப்புகளி (கண்டங்கள்) லிருந்தும் பிரிக்கப்பட்டு உள்ளது. உன் கடற்கரைகளுக்கு எத்தனை கப்பல்கள் வந்து சேருகின்றன; உன் கரைகளிலிருந்து எத்தனை படகுகள் மற்ற கடற்கரைகளுக்குப் பயணமாகின்றன என்பது பொருட்டல்ல. நீயே உன் தீவினிநின்று பிரிக்கப்பட்டு விட்டவன். உன் நோயிலிருந்தும் பிரிக்கப்பட்டாய்; இன்பத்தி லிருந்து ஒதுக்கப்பட்டாய்; தயை, இரக்கம், பரிதாபத்திலிருந்து வெகுதூரம் துரத்தப்பட்டாய்; அதன் இரகசியங்கள், மாயை, மர்மங்களிலிருந்து மறைக்கப்பட்டாய்.

ஓ நண்பனே! நான் உன்னை பொற்குவியலின் மேல் அமர்ந்திருக்கக் கண்டேன்; நீ பெற்ற செல்வத்திலே மகிழ்ந்தாய்; உன் பெரும் பயணத்திலே உயர்ந்தாய்; நீ கைப்பிடி பொன் தான்; உன் எண்ணங்களையும் மக்களின் சிந்தனைகளையும் இணைக்கும் இரகசியச் சங்கிலி என நினைத்தாய்; அவர்களின் உணர்ச்சிகள் உன்னுடன் இணைந்து விடும் என்று நம்பினாய்.

நான் உன்னை மிகப்பெரிய வெற்றி வீரனாய், நாடுகளை ஜெயிக்கும் மாமன்னனாய் கண்டேன்; நீ உன் பெரும் படையை நடத்திச் சென்று கோட்டைகளைக் கைப்பற்றி அவற்றை அழித்து வெற்றிவாகை சூடியதையும் கண்டேன். நான் இரண்டாம் முறையாக உன்னைக் கண்டபோது, உன் பொற்களஞ்சியங் களின் சுவர்களுக்கு அப்பால், தனிமையிலே, ஒதுக்கப்பட்டு நடுநடுங்கும் இதயத்தோடு நீ அமர்ந்திருப்பதைக் கண்டேன். பொன்னால் செய்த கூண்டிற்குள்ளே தாகத்தால் தவிக்கும் மனிதனாய், நவரத்தினக் கற்கள் பதித்தக் கூண்டிலே தண்ணீர் இன்றி நாவற்றி வரண்டு துடிப்பதைக் கண்டேன்.

ஓ என் நண்பனே! நான் உன்னைப் புகழ், கௌரவம், அந்தஸ்து, கீர்த்தி இவற்றால் ஆன பொன் சிம்மாசனத்தில் அமர்ந்திருக்கக்கண்டேன். உன் கொடை வள்ளல் தன்மையைப் புகழ்ந்து துதிபாடும் மக்கள் கூட்டம் உன்னைச் சூழ்ந்து கொண்டிருக்கக் கண்டேன்; உன் அன்பளிப்புகளை பட்டியல் போட்டு கூவிக்கொண் டிருந்தனர்; ஓர் தீர்க்கதரிசியை தரிசித்து அவர் பார்வைக்கு காத்திருப்பது போல் ஏக்கமுடன் உன்னை நோக்கிக் கொண்டிருந்தனர்; உன் ஆத்மாவை கிரகங்களுக்கும் நட்சத்திரங்களுக்கும் உயர்த்தி ஏந்திச் செல்லும் மகானாக உன்னைப் புகழ்ந்தார்கள். நீ அவர்களை எல்லாம் உன்

முகத்திலே திருப்தியும் பலமும் மிளிர நோக்கக் கண்டேன்; நீதான் அவர்களின் உடல்களிலே குடிகொண்ட ஆத்மா என்று எண்ணிக் கொண்டாய்!

நான் மறுபடியும் உன்னைப் பார்த்த போது நீ தன்னந்தனியனாய், ஒதுக்கப்பட்டவனாய் அந்த பெரிய சிங்காசனத்தின் அருகிலே நின்று கொண்டிருந்தாய்; உன் தனிமைக்கு வருத்தமடைந்து, துடிக்கக் கண்டேன். கண்ணுக்குத் தெரியாத பேய் பிசாசுகளிடம் பிச்சை கேட்க கையேந்தி நிற்கக் கண்டேன். ஒன்றுமே இல்லாமல் வெறுமையாய், தனிமையும் , ஒதுக்கப்படுவதுமே நிறைந்ததாய் மக்களின் தோள்களுக்கும் மேலே அடிவானத்தை உற்று நோக்குவது கண்டேன்.

ஓ என் நண்பனே! நீ காதல் வயப்பட்டு, கொள்ளை ஆசையுடன் அழகான பெண்ணுடன் அவள் கைகளிலே உன் முத்தக் குவியலை நிரப்பினாய். அவள் உன்னைக் கனிவுடன் கண்களிலே காதலின் இனிமையும், அன்பின் தேனும் பொங்க, அவள் உதடுகளிலே தாய்மை கொப்பளிக்க விழுங்கி விடுவது போல் நோக்கக் கண்டேன். நான் இரகசியமாக எனக்குள் சொல்லிக் கொண்டேன். ''காதல் அவன் தனிமையை துடைத்து விட்டது'' காதல் ஒதுக்கப்பட்டிருப்பதை விலக்கி விட்டது; இப்போது அவன் அழிவற்ற ஆத்மாவிலே கலந்து விட்டான்; அது அவனை தன்னிடம் கவர்ந்து இழுக்கின்றது. காதலே அவர்களை இணைக்கும் மகாசக்தி; தனிமையாலும் ஒதுக்கப்படுவதாலும் பிரிக்கப்பட்டவர்களை ஒன்றாக்கி உயிர்ப்பிக்கிறது.

நான் மறுபடியும் பார்த்தபோது உன் ஆத்மாவிற்குப் பின்புறத்திலே இன்னோர் ஆத்மா தனிமையிலே, பனி மூட்த்திலே அந்தப் பெண்ணின் கைகளிலே ஒரு கண்ணீர்

துளியாய் விழ் முயன்று தோல்வி அடைந்து கொண்டிருந்தது.

ஓ என் நண்பனே! உன் வாழ்க்கை ஏகாந்தமாய் அருகிலே வசிப்போர் அற்ற ஓர் உறைவிடமாய் வெகுதூரத்தில் இருக்கின்றது.

உன் பெயரிடப்பட்ட வீட்டிலிருந்து வெகு தூரத்திலே உன் உள் ஆத்மா (அந்தராத்மா)வே ஓர் வீடாய் இருக்கிறது. இந்த வீடு இருண்டிருந்தால், நீ அடுத்த வீட்டுக்காரனின் விளக்கை யெடுத்து உன் வீட்டை ஒளிமயமாக்க முடியாது. உன் வீடு காலியாக இருந்தால் அதை அடுத்த வீட்டுக்காரனின் செல்வங்களையெல்லாம் கொட்டி நிரப்பி விடமுடியாது. அந்த வீடு ஒரு பாலைவனத்தின் மத்தியிலே இருக்குமானால் அதை வேறொருவர் பண்படுத்திய நந்தவனத்திற்கு நகர்த்தி மாற்றிவிட முடியாது.

ஓ என் நண்பனே! உன் உள் மனம் (உன் ஆத்மா) தனிமையால் சூழப்பட்டு ஒதுக்கப்பட்டுள்ளது. இந்த தனிமையும் ஒதுக்கமும் இல்லையேல் நீ நீயாகவும் நான் நானாகவும் இருக்க முடியாது. நான் உன் குரலைக் கேட்டால் நான் பேசுவதாய் நினைப்பேன்; நான் உன் முகத்தைக்கண்டால், நான் கண்ணாடியிலே என்னையே பார்ப்பதாக நினைத்துக் கொள்வேன்.

◉

# 10

## கடல்

## The Sea

இரவின் நிசப்தத்திலே
மனிதன் மனக் களிப்பில் உறங்க
காலை கூவி அறிவித்தது.
''நானே சக்தி; என்னைச் சூரியன்
பூமியின் இதயத்திலிருந்து வெளிக் கொணர்ந்தான்''
கடல் மௌனமாய் தனக்குள்ளே கூறியது
''நான் தான் அந்த சக்தி''
பாறைகள் பகன்றன.
''காலம் எங்களை ஞாபகச் சின்னங்களாய்
நாட்டி வைத்தது, தீர்ப்புநாள் வரும் வரை''
கடல் வாய்மூடி அமைதியாய் சொல்லிற்று
''நானே ஞாபகச் சின்னம்''
காற்று ஊளையிட்டே கூவிற்று
''நானே வலிமை மிக்கவன்
சொர்க்கத்தையும் மண்ணுலகையும்
பிரிக்கும் வலிமையுள்ளேன்!''

கடல் அமைதியாய் முணகிற்று
''அக்காற்றே என்னுடையதுதானே!''

நதியும் ஆறுகளும் கூவின
''என் நீரே தூய்மை மிக்கது
மண்ணுலகின் தாகத்தைத் தணிக்கின்றேன்!''
கடல் வாய்மூடி மெல்ல கூறிற்று
''ஆறும் நதியும் என்னை அடைவதே!''
மலைச் சிகரம் கொக்கரித்தது
''நான் நட்சத்திரம் போல் உயர்ந்து நிற்கிறேன்;
ஆகாயத்தின் மையமே நான்தான்.
கடல் அமைதியுடன் அமர்ந்து கூறிற்று
மலைச்சிகரம் என்னுடையதே
மனிதனின் மூளை கொக்கரித்தது
''நானே ஆட்சி செய்பவன்
உலகமே அரசியல் வாதியின் கைகளிலே!''
கடல் தூங்கிக் கொண்டே தூக்கத்தில்
பிதற்றியது ''எல்லாம் என்னுடையதே!''

## கடற்கரையிலே கைப்பிடி மணல்
## Handful of Beach Sand

நீ உன் தொல்லைகளையும் துயரங்களையும் உன் நண்பனிடம், அடுத்த வீட்டுக்காரனிடம் சொல்லும் போது உன் இதயத்தின் ஒரு பகுதியை வெளிப் படுத்துகின்றாய்; அவனுக்கு பெரிய ஆத்மா இருக்கு மானால் உனக்கு நன்றி சொல்வான்; அவன் ஆத்மா குறுகியதானால் உன்னை எள்ளி நகைப்பான்.

முன்னேற்றம் என்பது பழைமையை வெறுமனே விருத்தி செய்வதல்ல; முன்னேற்றம் என்பது வருங்காலத்தை நோக்கி முனைந்து முன்னேறி உந்திச் செல்வது.

பசிமிக்க காட்டு மனிதன் மரத்திலிருந்து பழங்களைப் பறித்து உண்கின்றான்; பசித்த நாகரிக மனிதன் அந்தப் பழத்தை வேறொரு மனிதனிடமிருந்து வாங்கி உண்கிறான்; அந்த வியாபாரியோ அதைப் பறித்தவனிட மிருந்து வாங்குகின்றான்.

கலை என்பது தெரியாத ஒன்றை நோக்கி,
கண்களுக்குத் தெரிந்து அடியெடுத்து வைப்பது.

பூமி மூச்சு விடுகிறது! நாம் வாழ்கின்றோம்;
பூமி மூச்சு விடுவதை நிறுத்துகிறது,
நாம் இறக்கின்றோம்

மனிதனின் கண்கள் தொலைநோக்கி;
இந்த பூமியை அது மிகப் பெரியதாய் காட்டுகிறது.

எந்த மக்கள் வீரம், மென்மை, கர்வம் அனைத்தையும்
கோழைத்தனம் என்று கருதுகின்றாரோ அவர்களிட
மிருந்து நான் காணாமல் மறைந்து செல்கின்றேன்
யார் வாயாடித்தனத்தை ஞானம் என்றும், மௌனத்தை
அறியாமை என்றும் கருதுகின்றார்களோ அவர்களிட
மிருந்து விலகிச் செல்கின்றேன்.

அவர்கள் என்னிடம் கூறுகின்றார்கள்;
ஓர் அடிமை தூங்குவதைக் கண்டால், அவனை
எழுப்பி விடாதே; அவன் ஒருகால் சுதந்திரத்தைப்
பற்றி கனாக்கண்டு கொண்டிருப்பான்.

நான் அவர்களுக்குக் கூறுகின்றேன்;
நீ ஓர் அடிமை தூங்குவதைக் கண்டால், அவனை
எழுப்பி, சுதந்திரத்தின் மேன்மையைக் கூறுங்கள்

முரண்பாடு என்பது அறிவின் கீழ்மட்டநிலை.

வீரம் ஓர் எரிமலை; நிலைதடுமாற்றம் என்னும்
விதை அந்த எரிமலையின் விழிம்புகளில்
முளைத்து தழைப்பதில்லை

உன் இன்பம் பெருகும்போதும்,
துன்பம் அதிகரிக்கும் போதும்,
உன் கண்களுக்கு உலகம் சிறியதாய் விடுகிறது.

படிப்பறிவு, விதைகளை உயிர் ஊட்டச்சத்தளித்து
வளர்க்கிறது; ஆனால் அதுதானே விதையைக்
கொடுப்பதில்லை.

நான் வெறுப்பை என்னைப் பாதுகாத்துக் கொள்ள
ஓர் ஆயுதமாய் பயன்படுத்துகின்றேன்.
நான் பலசாலியாக இருந்தால்
அந்த ஆயுதம் தேவையிருக்காது.

மக்களிலே சிலர் கொலை செய்யாமலேயே
கொலைக்காரர்களாக இருக்கின்றார்கள்;
திருடாமலேயே கள்ளர்களாக உள்ளனர்!
உண்மையைத் தவிர பொய்யே பேசாதவர்கள்
பொய்யர்களாய் வாழ்கின்றனர்!

எந்த ஞானம் குரலெழுப்பி கூவவில்லையோ
அதனிடமிருந்து என்னை தூர விலக்கிவை;
எந்தத் தத்துவம் சிரிக்கவில்லையோ,
எந்த மேன்மை, கம்பீரம் குழந்தைகளுக்கு

*முன்னே தலை வணங்கவில்லையோ*
*அவற்றினின்று என்னை விலக்கிவை.*

*ஓ மிகப்பெரிய அறிவு நிறைந்த உயிரினமே!*
*இந்த அண்ட சராசரங்களுக்காக இருந்தும்*
*மறைந்தும், உள்ளும் வெளியும் வாழும், நீ*
*என் குரலை நன்றாகக் கேட்பாய்,*
*ஏன் எனில் நீ என்னுள் இருக்கின்றாய்;*
*நீ என்னைப் பார்க்கின்றாய்,*
*நீங்கள் எல்லாவற்றையும் பார்க்க முடியும்,*
*நீ என்னுள் உன் ஞானத்தின்*
*விதையை என் ஆத்மாவில் தூவிவிடு;*
*அது உன் கானகத்திலே ஒரு மரமாய் வளரட்டும்;*
*அது உன்னுடைய அறிவுக்கனிகளைக் கொடுக்கட்டும்*
*அப்படியே நடக்கட்டும் (ஆமென்)*

## அருவியின் மொழிகள்
## The Sayings of the Brook

*காலை மலர்ந்தது; முடிவின்மையின்*
*இரகசியங்களைப் பேசிற்று,*
*நான் பள்ளத்தாக்கிலே நடந்தேன்,*
*ஓடிக்கொண்டே இருந்தது நீரருவி*
*பாடிக் கொண்டே, ஓடிக் கொண்டே,*
*கூறிக்கொண்டே, ஆடிக் கொண்டே,*
*வாழ்க்கை ஓர் கேளிக்கை மட்டுமல்ல;*
*வாழ்க்கை என்பதே ஆசையும் தீர்மானமும்தான்;*
*ஞானம், வார்த்தைகளிலோ சொல்லிலோ இல்லை.*

*ஞானம், சொற்களிலே உள்ள அர்த்தம்தான்,*

உயர்வு, பெருமை எல்லாம் உயர்பதவியிலே இல்லை
மாண்பும் மகிமையும் பதவியை மறுப்பவர்க்கே!

மனிதன் பிறவியால் வழித்தோன்றலாய்
பெருமகன் ஆகான், எத்தனையோ பெருமக்கள்
கொலையாளியின் புதல்வர்கள்!

சங்கிலியாய் பிணைக்கப்பட்டோரெல்லாம்
அடங்கி விடுவதில்லை

சிலபோது, சங்கிலியே பொன்
அட்டிகையிலும் சிறந்தது

சொர்க்கம், செய்த குற்றத்திற்கு வருந்துவதில்லை,
சொர்க்கம் சுத்தமான இதயத்திலே வாழ்கிறது

நரகம், வதைசெய்து கொடுமைப்படுத்துவதில்லை
நரகம், ஒன்றுமற்ற வெறுமை இதயத்தில் உள்ளது.

செல்வம், காசுபணம் பொன்னில் மட்டுமில்லை,
எத்னையோ நாடோடிகள்
மக்களிலேயே செல்வந்தர்கள்!

எல்லா ஏழைகளும் இகழ்ந்து
வெறுக்கப் படுவதில்லை
உலகின் செல்வமே ஓர் ரொட்டியிலும்
சட்டையிலும் உள்ளதே!

வசீகரமும் அழகும் முகத்திலே இல்லை
அழகு என்பது இதயத்தில் உள்ள ஒளிவெள்ளமே!

பூர்ணத்துவம், முழுமை, தூய்மையான

*ஆத்மாவிற்கு இல்லை,*
*பாவங்களிலும் அறம், ஒழுக்கம், கற்பு இருக்கும்.*

*இவை நீரோடைக் கரையினிலே*
*நீண்டுயர்ந்த மரங்களுக்கு அருவிநீர் புகன்ற மொழி!*
*ஒருகால், நீரோடை பாடிய பாட்டெல்லாம்*
*சமுத்திரத்தின் இரகசியமோ? நானறியேன்?*

## என் இதயமே! சொர்க்கத்தின் பொருட்டே!
## For Heaven's Sake My Heart!

*சொர்க்கத்தின் பொருட்டே என் இனிய இதயமே!*
*உன் காதலை இரகசியமாய் தேக்கிவை!*
*மற்றவர் பார்வையிலிருந்து நீ மறைத்துவை!*
*உனக்கு நல்ல செல்வம் செழிக்கும்!*

*இரகசியத்தைக் கூறிவிடும் மனிதன் முட்டாள்!*
*மௌனமும் இரகசியமும் காதல்வயப்பட்ட*
*காதலர்கள் இருவருக்குமே நன்மை செய்யும்!*

*சொர்க்கத்தின் பொருட்டே, என் இதயமே!*
*'என்ன நிகழ்ந்தது' என்று யார் கேட்டாலும்*
*சொல்லாதே, பதிலே சொல்லாதே!*
*'அவள் யார்?' என்று உன்னைக் கேட்டால்*
*அவள் மற்றவரைக் காதலிக்கிறாள் என்று சொல்!*
*உனக்கு முக்கியத்துவம் இல்லை என பாவனை செய்.*

*சொர்க்கத்தின் பொருட்டே, என் காதலியே!*
*உன் ஆசை உணர்வுகளை மூடிமறைத்துவை!*
*உன் காதல் நோயே அதன் மாமருந்து;*
*ஆத்மாவிற்குக் காதல், ஓர் மதுக்கிண்ணம்;*

*நீ பார்ப்பதெல்லாம் அதில் திரவம்தான்!*
*அதில் மறைந்திருப்பதோ போதை, மயக்கம்!*

*சொர்க்கத்தின் பொருட்டே, என் காதலியே!*
*உன் துன்பங்களை துக்கங்களை மறைத்து வை!*
*கடல் கர்ஜிக்கட்டும், வானம் இடிந்துவிழட்டும்;*
*நீ கட்டாயம் பாதுகாப்பாய் இருப்பாய்!*

## ராபின்
## The Robin

*(ராபின் என்பது ஒரு வகை குருவி, சிவப்பு மார்புப் பறவை. இதை மொழிபெயர்ப்பில் ராபின் என்றே அழைப்போம்.)*

*ஓ ராபின், பாடு நீ நன்றாகப் பாடு!*
*முடிவின்மையின் இரகசியமே உன்பாட்டில் உள்ளதே!*

*நான், உன்னைப் போலிருக்கவே விரும்புகின்றேன்!*
*பள்ளத்தாக்கின் மேல் பறக்கும் ஆத்மா நீ!*

*வானவெளியின் மதுக் கிண்ணங்களிலே*
*நீ வெளிச்சத்தையே திராட்சை ரசமாய் குடிக்கின்றாய்!*

*நான், நீயாகவே இருக்க ஆசைப்படுகிறேன்!*
*இன்பமாய் திருப்தியாய்*
*கள்ளங் கபடமற்றிருக்கின்றாய்!*
*பழைமையை மறந்தாய்,*
*நாளையைப் பற்றி கவலையற்றாய்!*

*நான், உன்னைப்போல்*

*அழகாய் இருக்க ஆசையுற்றேன்;*
*உன் வசீகரம், நேர்த்தி, நளினம் எனக்கமையட்டும்!*
*காற்றிலே என் இறகுகள் விரிந்து பரக்க,*
*பனித்துளிகள் என் சிறகுகளை அலங்கரிக்கட்டும்!*

*நான், உன்னைப்போல் இருக்க விரும்புகின்றேன்*
*பூமிக்கு மேல் மிதந்து பறக்கும் எண்ணங்கள்;*
*என் பாக்களெல்லாம் ஆகாயத்திற்கும்*
*வனங்களுக்கும் இடையே பொழியட்டும்!*

*ஓ ராபின்! பாடு நீ! என் தவிப்பை விரட்டிவிடு!*
*நான் உன் குரலினுள் என் குரலைக் கேட்கின்றேன்!*
*பாடலெல்லாம் என் காதுகளில் இசைக்கின்றதே!*

# பெருங்கடல் (மகா சமுத்திரம்)

## The Great Sea

நேற்று, வெகு தூரத்திலும் அருகிலும் ஆன நேற்று, என் ஆத்மாவும் நானும் பெருங்கடல் நோக்கி நடந்தோம்; அதன் தண்ணீரிலே எங்களைக் கழுவிக் கொள்ள விழைந்தோம்; இந்த பூமியின் சகதியையும் அழுக்கையும் தூசியையும் கழுவிக் கரைக்க விரும்பினேன்! ஓர் தனியிடம் தேடி அலைந்தோம், யார் கண்ணிலும் தெரியாமல் கழுவிவிட முற்பட்டோம்.

நாங்கள் நடந்து கொண்டே இருந்தோம்; ஓர் சாம்பல் நிறப் பாறைமேல் ஓர் மனிதன் அமர்ந்திருந்தான்; அவன் கைகளிலே ஓர் உப்பு மூட்டை இருந்தது; அவன் ஒவ்வொரு முறையும் ஒரு பிடி உப்பை எடுத்து கடலில் வீசினான்.

என் ஆத்மா கூறிற்று ''இந்த மனிதன் கெட்ட சகுனங்களை நம்புகின்றான்; அவன் வாழ்க்கையின் நிழலைத்தான் காண்கின்றான்; உண்மை வாழ்க்கையைப் பார்ப்பதே இல்லை; கெட்ட சகுனத்திலே நம்பிக்கையுள்ளோர் எங்கள் நிர்வாணமான உடம்பைப் பார்க்கக் கூடாது; நாம் போய் விடுவோம்; இங்கே நாம் குளிக்கக் கூடாது.

நாங்கள் அவ்விடத்தை விட்டகன்று ஓர் வளைகுடாவைப் போய் சேர்ந்தோம்; அங்கே ஓர் மனிதன் ஒரு வெள்ளைப் பாறைமேல் நின்றிருந்தான்; அவன் கைகளிலே நவரத்தினங்கள் பதிக்கப்பட்ட அழகான பூச்செண்டு கிண்ணம் வைத்திருந்தான். அவன் அந்தக் கிண்ணத்திலிருந்து சர்க்கரைக் கட்டிகளை எடுத்து கடலிலே வீசிக் கொண்டிருந்தான். என் ஆத்மா கூறிற்று. ''இந்த மனிதன் நல்ல சகுனங்களை நம்புகின்றான்; இவன் நடக்க முடியாத செயல்கள் நடக்க வேண்டு மென்று எதிர்பார்க் கின்றான், ஜாக்கிரதை! இவன்கூட நம் நிர்வாண உடம்பைப் பார்த்துவிடக் கூடாது''

நாங்கள் மேலும் நடந்தோம்; கடற்கரை மேல் நின்று கொண்டிருந்த ஒரு மனிதனை நெருங்கினோம்; அவனோ செத்த மீன்களை எடுத்து கடலிலே மறுபடியும் வீசிக் கொண்டிருந்தான். என் ஆத்மா சொல்லிற்று. ''இந்த மனிதன் தயை, இரக்கம், பச்சாதாபம் உடையவன் போலும், ஏற்கெனவே இறந்த மீன்களை மறுபடியும் உயிர்ப்பிக்க முயற்சி செய் கின்றான்; நாம் அவனிடமிருந்து விலகிச் செல்வோம்''

நாங்கள் மேலும் தொடர்ந்து நடந்தோம்; மணலில் தன் நிழலின் மேலேயே நடந்து கொண்டிருக்கும் மனிதனை நெருங்கினோம்; உருண்டு திரண்ட அலைகள் அவன் வரைந்த படங்களை அழித்துத் திரும்பியது; ஆனால் அவன் தொடர்ந்து தன் ஓவியங்களை மேலும் மேலும் வரைந்தான். என் ஆத்மா சொல்லிற்று; ''இவன் ஓர் புரிந்து கொள் முடியாத மர்ம மனிதன்; தன் கற்பனையிலே தானே வணங்க கடவுளின் திரு உருவங்களை வரைகின்றான். நாம் இவனைத் தன் வேலையைத் தொடர்ந்து செய்ய விட்டு அகல்வோம்.''

நாங்கள் மறுபடியும் நடந்தோம்; ஓர் மனிதன்

அமைதியான வளைகுடாவிலே அலைகளிலிருந்து நுரையை எடுத்துக் கொண்டிருந்தான். நுரையை ஒரு மாணிக்க கூஜாவிலே நிரப்பிக் கொணண்டிருந்தான்; என் ஆத்மா கூறியது; ''இவன் ஓர் ஞான திருஷ்டி போலும்; சிலந்தியின் நூலிலே ஆடை பின்ன முயற்சி செய்கின்றான்; நம் நிர்வாண உடம்பைப் பார்க்கத் தகுதி அற்றவன்.''

நாங்கள் மேலும் நடந்தோம்; திடீரென்று கூவும் குரல் கேட்டோம், ''இது தான் கடல்! இதுவே பயமூட்டும் கடல்; இந்தக் குரலொலி எங்கிருந்து வருகின்றது என்று தேடினோம்; ஒரு மனிதன் கடலுக்கு தன் முதுகைக் காட்டிக் கொண்டு நின்றான். அவன் கைகளிலே கடல் கிளிஞ்சலை ஏந்தி, காதருகே வைத்திருந்தான்; அதன் முணுமுணுப்பைக் கேட்கலானான், என் ஆத்மா கூறிற்று; ''அவன் ஓர் உலகப் பொருளியல் வாதி. (லோகாயுதம்) அவனுக்குப் புரியாத தெரியாத இந்த உலகத்திலே உள்ள பொருள்களைப் பாராமல் கண்களை மூடிக் கொண்டு பார்க்க மறுத்து, தன் நேரத்தையெல்லாம் உதவாக்கரை சங்கதிகளில் கழிப்பவன்''

என் ஆத்மா, மிகவும் துயர் உற்றது; துக்கமடைந்தது; மிகவும் கசப்பான குரலில் கூறிற்று. ''நாம் இந்த கடற்கரையை விட்டகல்வோம்; நாம் குளிக்க இங்கு மறைவிடம் ஏதுமில்லை; நாம் இந்தக் காற்றிலே தலையை வாரி முடிக்க முடியாது; நாம் நம் வயிற்றையும் இந்த திறந்த வெளியிலே விரித்துக் காட்ட முடியாது; நாம் ஆடைகளைக் களைந்து, இந்த பெரு வெளிச்சத்தில் நிர்வாணமாய் நிற்கவும் முடியாது.''

என் ஆத்மாவும் நானும் இந்தக் கடலை விட்டு விட்டு, இதைவிட மிகப்பெரிய கடலை நோக்கி நடந்தோம்.

◉

12

# ஏழு நிந்தனைகள், ஏழு கண்டனங்கள்

Seven Reprimands

*நான் என் ஆத்மாவை ஏழு முறை கண்டித்தேன்!*

*முதல் முறை: நான் என்னையே உயர்த்திக் கொள்ள, வலிவற்றோரை சுரண்டி ஏமாற்றும்போது!*

*இரண்டாம் முறை: நான் நொண்டி போல் பாசாங்கு செய்து, முடமானவர் முன்னே நடித்தபோது!*

*மூன்றாம் முறை: எனக்கு வாய்ப்பளித்தபோது கடினமானதை ஏற்காமல் சுலபமானதைத் தேர்ந்தபோது!*

*நான்காம் முறை: நான் தவறு செய்து விட்டு மற்றவர் செய்த தவற்றைக் காட்டி ஆறுதல் பெற்றபோது!*

*ஐந்தாம் முறை: பயத்தால் நான் சாந்தமாய் இருந்து விட்டு பொறுமையிலே வலிமையுள்ளவன் என்று கோரியபோது!*

*ஆறாம் முறை: என் ஆடைகளை மேலே தூக்கி வாழ்க்கைச் சேறு மேலே படாமல் தவிர்த்தபோது!*

*ஏழாம் முறை: கடவுளைத் துதிபாடி நின்று கொண்டு பாடுவதையே நல்லொழுக்கம் என்று நினைத்தபோது!*

# சரித்திரத்தில் பதிவாகாத ஓர் ஆண்டு காலத்தில்...

## During a year not registered in History

*... அந்த கண நேரத்தில் புன்னை மரங்களுக்குப் பின்னாலிருந்து அழகான பெண் ஒருத்தி, கூந்தல் தரையைத் தொடத் தோன்றினாள். அவள் தூங்குகின்ற இளைஞனின் அருகில் நின்று அவனுடைய மென்மையான நெற்றியைத் தொட்டு, தன் மென்மையான கை விரல்களால் மெல்லத் தடவினாள்.*

*அவன் சூரியனின் ஒளிக்கதிர்கள் பட்டு விழித் தெழுந்தவன் போல் தன் தூக்கம் தோய்ந்த கண்களால் அவளைப் பார்த்தான்.*

*அவன், அரசனின் மகள் தன் பக்கத்திலே நிற்பதைக் கண்டு, உணர்ந்து, உடனே, மோசஸ், கொழுந்து விடடெறியும் புதரைக் கண்டவுடன் மண்டியிட்டதைப்போல், அவன் கால்களை மடித்து மண்டியிட்டு வீழ்ந்தான்.*

*அவன் பேச முயற்சி செய்தான். ஆனால் வார்த்தைகள்*

ஒன்றும் வெளிவரவில்லை; அவனின் நீர்வடிக்கும் கண்கள், அவன் நாவின் பேச்சுக்கு பதிலாக பேசிற்று.

அந்த இளம் பெண் அவனைக்கட்டி அணைத்து அவன் உதடுகளில் முத்தமிட்டாள்; பிறகு அவன் கண்களிலே முத்தமீந்தாள்; அவன் கண்ணீரையும் உதடுகளையும் முத்தங்களால் உலர வைத்தாள்.

அவள் குழலினும் மென்மையான குரலினால் சொன்னாள் "என் இனிய இதயமே! உன்னை என் கனவில் கண்டேன்; நான் என் தனிமையிலே உன் முகத்தைக் கண்டேன். நீயே என்னுடைய கடைசி/ஆறுதல்; நான் இந்த உலகத்தில் தோன்றவேண்டும் என்று பணிக்கப்பட்டபோது உன்னிலிருந்து பிரிக்கப்பட்ட மறுபாதி நான்."

"நான் இரகசியமாக உன்னுடன் இணைவதற்காகவே வந்திருக்கின்றேன். என் இனிய இதயமே! நீ பயப்படாதே; நீ என் கைகளிலே இருக்கின்றாய். நான் என் தகப்பனாரை சுற்றியிருக்கும் பெரும் புகழையும் பெருமையையும் துறந்து வந்திருக்கின்றேன். நான் உன்னைத் தொடர்ந்து உன் பின்னே உலகத்தின் முடிவு வரை தொடர்ந்து வரத் தயார். உன்னுடனே வாழ்க்கைக் கோப்பையிலே உண்டு, குடித்து செத்து மடியவும் தயாராக இருக்கின்றேன்."

"என் இனிமை இதயமே! வா நாம் இந்த நாகரிக உலகிலிருந்து விலகி, பாலைவனத்தின் சோலைக்கே போய்விடலாம்."

உடனே காதலர்கள் கைகோத்து நடந்து காட்டிற்குள், இரவின் இருட்டிலே மறைந்தனர். அவர்கள் அரசனைப் பற்றிய பயமோ, இருட்காட்டின் பேய் பூதம் பற்றிய பயமோ இல்லாமல் நடந்தனர்.

◉

# ஜிப்ரானின் வாழ்க்கையில் பெண்கள்:

Thw women in the life of Gibran

## கமீலா - ஜிப்ரானின் தாய்

ஜிப்ரான் தன் வாழ்க்கையிலே பெண்களின் செல்வாக்கு எவ்வளவு என ஆழமாக உணர்ந்தார். ''நான் குழந்தையாக இருந்த போதிலிருந்து பெண்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கின்றேன். இந்த 'நான்' என்பதே பெண்ணால் உருவானதே. பெண்கள் என் ஆத்மாவின் கதவைத் திறந்து பின் என் கண்களின் பலகணிகளையும் திறந்தார்கள். பெண் எனும் என் தாய் பெண் எனும் என் சகோதரி, பெண் எனும் என் தோழிகள் இல்லையென்றால் நான், உலகத்தின் நிசப்தத்தை, மௌனத்தைத் தன் குறட்டை ஒலிகளால் கலைத்துக் குலைக்கும் மக்கள் கூட்டத்திலே ஒருவனாக தூங்கிக் கொண்டிருப்பேன்.''

ஜிப்ரான் வாழ்க்கையிலே பல பெண்கள் பங்கு கொண்டனர்; இது அவரின் வாழ்க்கைக் குறிப்பு எழுதிய ஆசிரியர்கள் ஒப்புக்கொள்வது.

ஜிப்ரானின் தாய்தான் ஜிப்ரான் வாழ்க்கையிலேயே முக்கிய பங்கு வகிக்கின்றார்; ஏனெனில் சூழ்நிலையே அவள் வாழ்க்கையை வழி நடத்தியது. கமீல-ஜிப்ரானின்

தாய்க்கு முதலில் திருமணமானவுடன் கணவருடன் பிரேசில் நாட்டிற்குக் குடியேறினார். அங்கே அவரின் துணைவர் நோய்வாய்ப்பட்டு இறந்துவிட்டார். அவருக்குப் பீட்டர் என்ற சிறிய குழந்தை பிறந்திருந்தது; கணவன் மரணமடைந்தார். அனாதை ஆயினர். கமீலா, தன் மகன் பீட்டருடன் தாய்நாடு லெபனான் திரும்பினார்; அவள் தகப்பனார் பெயர் ஸ்டீபென் ராமி, ஒரு மரோனைட் பாதிரியார்.

ஒரு நாள் கமீலா, தன் தந்தை பாதிரியார் தோட்டத்தில் பாடிக் கொண்டிருந்தாள்; அவள் பாட்டைக் கேட்டு ஜிப்ரானின் தகப்பனார் ஈர்க்கப்பட்டு, காதலித்து, மணந்துகொண்டார். கலீல் ஜிப்ரான் 6.12.1883-ஆம் ஆண்டில் பிறந்தார். அவருக்குப் பின் இரு சகோதரிகள் மரியானா, சுல்தானா பிறந்தனர். கமீலா மூவருக்கும் இசைப்பயிற்சி அளித்தாள். பிரெஞ்சு, அரபிக் மொழிகளைக் கற்பித்தாள். குழந்தைகள் வளர வளர ஆங்கிலம் போதிக்க ஓர் ஆங்கில ஆசிரியரை வீட்டிற்கு வரவழைத்து கற்பித்தார்.

பிறகு நகரில் உள்ள பள்ளிக்கூடத்திற்கு அனுப்பப்பட்டனர். இவர்கள் அடிக்கடி மாதா கோயிலுக்கு அழைத்துச் செல்லப்பட்டனர்; அங்கு அவர்களின் தாத்தா, மிகத் திறமையான பாதிரியார், போதனைகள் செய்து தெய்வ வழிபாடு நடத்தினார்.

மரோனைட் மாதா கோயில்களில், சில சடங்குகளில் அங்கு கூடியுள்ள எல்லா மக்களும் ஒன்றாகச் சேர்ந்து சிரிய மொழியில் 'கோரஸ்' பாடுவார்கள். இந்த சிரிய மொழியில்தான் ஏசுகிறிஸ்து பேசினார். அவர் தாய் மொழி அதுவே. இந்தவிதமான மரோனைட் சடங்குகளும் சம்பிரதாயங்களும் ஜிப்ரானிடம் அவர் கடைசி மூச்சுவரை நிலைத்திருந்தது; பிற்காலத்தில் அவர் எழுதிய கடிதம்

ஒன்றில் இம்தாதா கோயில்களின் ஈர்ப்பும் ஆட்சியும் தன்மேல் எவ்வளவு ஆழ்ந்து படிந்தது என்று எழுதியுள்ளார்.

ஜிப்ரான் தாய் கமீலாவின் மரோனைட் மதப்பற்று அவரின் மிகமிக இனிமையான குரலில் மாதாகோயிலில் பாடும் பாடல்கள், அக்குடும்பத்தின் மதப்பற்று, சூழ்நிலை எல்லாம் ஜிப்ரானின் குணங்களையும், ஆத்மீக ஞானத்தையும், தெய்விகத் தன்மைகளையும் உருவாக்கின. இதன் தாக்கம் அவருடைய-ஜிப்ரான் எழுதிய-'ஏசுகிறிஸ்து - மக்களின் மகன்' என்ற நூலில் வெளிப்படுகின்றது.

ஜிப்ரானுக்கு 12 வயது ஆனபோது அவருடைய அண்ணன் பீட்டருக்கு 18 வயது ஆயிற்று.

பீட்டர் இப்போது வெளிநாடு சென்று பொருள் சம்பாதிக்க முற்பட்டார். லெபனான் நாட்டு மக்களில் பெரும்பாலோர் கடல் வழியாகப் பயணம் செய்து அமெரிக்கா போன்ற தூரதேசங் களுக்கு போய் பல ஆண்டுகளாக சம்பாதித்தனர். பீட்டருக்கு அமெரிக்கா போக ஆசை ஏற்பட்டது.ஜிப்ரானின் தாய் கமீலாவிற்கு தன் நான்கு குழந்தைகளையும் பிரிந்து வாழ மனமின்றி பீட்டர், ஜிப்ரான், மரியானா, சுல்தானாவுடன் பயணப்பட்டு பாஸ்டன் நகரை அடைந்தனர். கலீல் ஜிப்ரானின் தகப்பனார் இதை விரும்பவில்லை. அவர்களைத் தடுத்தார். அவருக்கு நிறைந்த செல்வம் இருந்தது; அவர் துருக்கி அரசாங்கத்தின் பிரிதிநிதியாக இருந்து வரிவசூல் செய்து வந்தார். சில பருவகாலங்களில் கால்நடைகளை வாங்கி விற்று வியாபாரம் செய்தார். இருந்தாலும் அப்போது அமெரிக்கா செல்வவளம் கொழிக்கும் நாடு என்றும் அதன் சாலை களெல்லாம் தங்கத்தால் வேயப்பட்டது என்றும், அங்கு மிகவும்

சீக்கிரமாக பெரும் பணக்காரர் ஆகிவிடலாம் என்றும் பலர் கூறக்கேட்ட பீட்டர் இந்த கவர்ச்சியில் வசீகரிக்கப்பட்டு, குடும்பத்துடன் அமெரிக்கா செல்வது என முடிவு செய்தார். கலீல் ஜிப்ரானின் தகப்பனார் லெபனானிலேயே தங்கி இருந்தார்.

ஜிப்ரானின் வாழ்க்கைச் சரித்திரத்தை எழுதிய சில ஆசிரியர்களுக்கு மத்திய கிழக்கு நாடுகளில் கால்நடை வியாபாரி என்பவர் உண்மையில் ஆடுகளை வியாபாரம் செய்வார் எனத் தெரியாது; ஏனெனில் லெபனான் நாட்டிற்கு ஆடுகள் சிரியா, ஈராக், சில சமயங்களில் துருக்கி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டன. உண்மை யிலேயே துருக்கி நாட்டிலிருந்து லெபனானுக்கு ஆடுகளை வண்டி, லாரி, ரயில் வசதி குறைந்துள்ள பகுதிகளிலிருந்து, தண்ணீரும் உணவும் அற்றப் பகுதிகள் வழியாக கால்நடை யாகக் கொண்டுவந்து வியாபாரம் செய்வது என்பது ஒரு பெரிய லாபமும் கொடுக்கும், பெரும் நஷ்டமும் அளிக்கும் துணிகரமான வியாபாரம் ஆகும்; ஐக்கிய அமெரிக்காவில் செய்யும் கால்நடை வியாபாரம் போன்றதல்ல. ஆனால், கலீல் ஜிப்ரானின் தகப்பனார் ஓர் கால்நடை வியாபாரி என்று எழுதுவதற்கு பதிலாக, குழப்பமடைந்து அவர் ஓர் ஆட்டு மந்தையை மேய்ப்போர் என்று தவறாக வர்ணிக்கின்றனர்.

பாஸ்டன் நகரில் பீட்டர் ஓர் பலசரக்குக் கடையைத் திறந்து வியாபாரம் செய்தார். மற்ற மூவரும் ஜிப்ரான், மரியானா, சுல்தானா ஆகியோர் பள்ளி சென்று படித்தனர். 14 வயது ஆனபோது கலீல் ஜிப்ரான் லெபனான் நாடு திரும்பவும், அங்கு கல்லூரியில் அரபிக் மொழி படிக்கவும் முடிவு செய்தார். தன் மகனுடைய திறமையைம், ஆசையையும் நன்றாக உணர்ந்த தாய் கமீலா ஜிப்ரான் லெபனானின் தலைநகரான 'பூயுரட்' போய்

'அல்கிக்மெட்' கல்லூரியில் சேர சம்மதித்தாள்.

ஜிப்ரான் அக்கல்லூரியில் 5 ஆண்டு படித்தார். கோடை விடுமுறைகளில் மத்திய கிழக்கு நாடுகள் அனைத்தையும் சுற்றிப் பார்த்தார்; அவர் தந்தையுடன் பலப்பல நாடுகளிலும் சுற்றினார்; உயர்ந்த தேவதாரு மரக்காடுகளில் திரிந்தார். 5 ஆண்டுகளுக்குப் பிறகு அவர் கிரீஸ், இத்தாலி, ஸ்பெயின் முதலிய நாடுகளைச் சுற்றிப் பார்த்துவிட்டு பாரீஸ் நகரம் அடைந்து உயர்கலைகளை சித்திரம், சிற்பம் முதலியவற்றை இரண்டு ஆண்டு (1901-1903) வரை கற்றார்.

இந்த நேரத்தில் ஐக்கிய அமெரிக்காவில் தங்கை சுல்தானா மரணமடைய, தாய் கமீலா உடல்நலம் குறைந்து படுத்த படுக்கையானதால் ஜிப்ரானை அமெரிக்கா வரும்படி அழைத்தார் கமீலா. கமீலா 15 மாதம் படுக்கையில் காச நோயால் அவதியுற்று, இறந்துபோனார். இந்த சமயத்தில் ஜிப்ரானின் அண்ணன் பீட்டரும் காச நோயால் இறந்துவிட்டார். இந்த மரணங்கள்- தாய், அண்ணன், தங்கை மூவரும் ஒருவர்பின் ஒருவராய் இறந்துபோனது பேரதிர்ச்சியைக் கொடுத்த- இந்த குடும்பத்தில் ஒவ்வொருவரும் அன்பும் பண்பும் பாசமும் பெற்று மிகவும் நெருக்கமாகப் பழகி, ஜிப்ரான் படிப்பதற்கும் பெரிய தியாகங்கள் செய்தனர். மரியானா மட்டும மிகவும் அதிசயிக்கத்க்க வகையில்' காச நோயினின்றும் தப்பிப் பிழைத்தாள்; கலீல் ஜிப்ரான் குடும்பமே அனைவரையும் இழந்து குன்றி குறைந்துவிட்டது. ஜிப்ரானின் உணர்ச்சிகள் எல்லாம் கொட்டப்பட்டு தன் தாய் கமீலாவைப் பற்றி மிகவும் சொல்வன்மையுடன் கூறியவை 'முறிந்த சிறகுகள்' என்ற நூலில் மிகவும் சிறப்பாக விளக்கப்பட்டுள்ளது.

''*தாய்தான் வாழ்க்கையில் எல்லாம்; துன்பம் துயரம் அடையும்போது தாய்தான் பெரிய ஆறுதல்; விசனப்பட்டு வாடி வருந்தும்போது தாய்தான் நம்பிக்கை; வலிமையற்று தளர்ந்தபோது தாய்தான் பெரும் சக்தி. தாய்தான் இரக்கம், பச்சாதாபம், தயை, பொறுமை, சகிப்புத்தன்மை, மன்னித்தல், பிழைபொறுத்தல் முதலிய எல்லா வற்றிற்கும் ஊற்று; வற்றாத நீர்த்தேக்கம். எவன் ஒருவன் தன் தாயை இழக்கினற்ானோ அவன் தன் தலை சாய்த்து ஓய்வெடுக்க ஓர் பெற்ற வயிற்றை இழந்துவிடுகின்றான்; அவனை ஆசீர்வதிக்கும் கைகளை இழக்கின்றான்; அவனையே கண்காணிக்கும் கருணை பொழியும் கண் களையும் இழந்துவிடுகின்றான்.*''

15

# மிக்சிலைன்

Micheline

ஜிப்ரானின் வாழ்க்கை வரலாற்று ஆசிரியர் ஒருவர் கூறுகின்றார், ''ஜிப்ரான், பாஸ்டன் நகரில் ஓர் அழகான சுறுசுறுப்புள்ள, உற்சாகமாக, உல்லாசமான எமிலி மிச்சல் என்றபெண்ணைச் சந்தித்தார். அவளையே 'மிச்சிலைன்' என்று பெயரிட்டார்.'' என்றும் அந்த மிச்சிலைன் ஜிப்ரானுடன் பாரீஸ் நகருக்கச் சென்று, தன்னைத் திருமணம் செய்துகொள்ளும்படி வேண்டினாள்; ஆனால் ஜிப்ரான் மணக்கமறுத்துவிட்டார். பிறகு எமிலி மிச்சல் ஜிப்ரானின் இருப்பிடத்தைவிட்டு சென்றவள் மறுபடியும் ஜிப்ரானைச் சந்திக்கவே இல்லை; நிரந்தரமாக மறைந்துவிட்டாள் என்று விவரிக்கின்றார்.

சில வாழ்க்கை வரலாற்று ஆசிரியர்கள் இந்த நிகழ்ச்சியை ஏற்றுக்கொள்கின்றனர்; மற்றவர்கள் இந்த பெண்ணின் பெயரைக் குறிப்பிடுவதே இல்லை. சிலர் இதற்கு சாட்சியாக இரு நிகழ்ச்சிகளை மேற்கோள்காட்டி இரு இடங்களில் மிச்சிலைனைக் குறிப்பிடுகின்றனர். ஜிப்ரான் பாரீஸ் நகர் செல்லுமுன் மிச்சலைன் என்பவளை ஓவியமாக வரைந்தார். இரண்டாவதாக தன்னுடைய ஒரு நூலை 'மிச்சிலைனு'க்குச் சமர்ப்பணம் செய்தார்.

நான் மிகுந்த சிரத்தையுடன் இந்த அழகான பெண்ணின் உயிர் வாழ்ந்திருத்தல் பற்றி ஆராய்ந்தேன். நான் ஜிப்ரானின் பொருட்காட்சி நிலையத்தில் லெபனான் நாட்டில் இந்த அழகான பெண் மிச்சிலைன் ஓவியம் இருக்கின்றதா என்று காட்சியகக் காப்பாளரைக் கேட்டேன். அவர் சுவரில் மாட்டப்பட்டிருந்த ஓவியம் ஒன்றைக் காட்டி ''இந்த ஓவியம்தான் மிச்சிலைன் என்று கருதப்படுகிறது'' என்றார்.

அந்த ஓவியத்திலே எந்தவிதமான அடையாளக் குறியும் காணப்படவில்லை. ஆனாலும் அவரின் சில ஓவியங்களில் மட்டிலும் ஜிப்ரானின் கையெழுத்து காணப்பட்டது. நான் பார்த்தமட்டில் எந்தவிதமான உண்மையும் அதுதான் மிச்சிலைன் ஓவியம் என்று நிரூபிக்க சான்றுகள் காணப்பட வில்லை. இதுவரை ஜிப்ரானுக்கும் மிச்சிலைனுக்கும் எந்தக் கடிதத் தொடர்பையும் நான் காணவில்லை.

ஜிப்ரானின் அரபிக் மொழி நூல்களில் மறுபதிப்பு செய்யப்பட்ட புத்தகங்களில், நான் முன்கூறியபடி, முதன்முதலில் அந்த நூல் வெளியிடப்பட்டதற்கான தேதியும், ஆண்டும் காணப்படவில்லை, இந்த செய்தி கிடைக்கவில்லை. சில புத்தகங்களில் அது யாருக்கு சமர்ப்பணம் செய்யப்பட்டது என்றும் தெரியவில்லை. பிறகு நீண்ட ஆழ்ந்த தேடுதலுக்குப் பிறகு நான் பழைய புத்தகப் பிரதிகளை கிடைக்கப்பெற்றேன்; அவற்றில் நூல் சமர்ப்பணம் பற்றிய விவரங்கள் இருந்தன. அவற்றிலும் கூட மிச்சிலைன் பெயர் எதிலும் குறிக்கப்பட வில்லை.

ஒரு பிரதியில் சமர்ப்பணம் இப்படி எழுதப் பட்டிருந்தது:

''எந்த ஆத்மா தன் ஆத்மாவை அணைத்துக்

கொண்டதோ, எந்த இதயம் தன் இரகசியங்களை யெல்லாம் என் இதயத்தில் பொழிந்ததோ, எந்தக்கைகள் என் உணர்ச்சித்தீயை தூண்டிவிட்டதோ, அதற்கு இந்நூலை நான் காணிக்கையாக்குகின்றேன்.''

பாரீஸ் நகரில் ஜிப்ரான் ஒரு நெருங்கிய நண்பருடன் சேர்ந்து உழைத்தார்; வாழ்ந்தார், 'ஜோசப் ஓயெக்' (Joseph Hoyek) என்னும் அவர் ஜிப்ரானுடன் வாழ்ந்த இரண்டு ஆண்டுகள் பற்றி நூல் எழுதியுள்ளார். ஜிப்ரானும், ஜோசப் ஓயெக் இருவரும் ஒரே அறையில் வாழவில்லை; ஆனால் இருவரும் தினம் சந்தித்துக்கொண்டனர்; அவர்கள் இருவரும் அடிக்கடி பணத்தை பாதுகாத்து செலவைக் குறைத்துக்கொள்ள ஒரே பெண்ணை தங்கள் ஓவிய காவிய, சிற்பப் பணிக்காக 'மாதிரிப் பெண்' (மாடல் கேர்ல்ஸ்) ஆக ஏற்றுக் கொண்டு வரைந்தனர். அதற்கான செலவைப் பங்கிட்டுக் கொண்டனர். ஜோசப் ஓயிக், அவர்களும் ஜிப்ரானும் எந்த எந்த பெண்களைச் சந்தித்தனர், எந்த உணவு விடுதிகளில் உண்டு மகிழ்ந்தனர் என்று விரிவாக எழுதியுள்ளார். அவர் ஓல்கா என்ற இரஷ்ய நாட்டுப் பெண், ரோசியானா, மிகவும் அழகான இத்தாலியப் பெண் முதலிய பெண்களை வாடகைக்கு வாங்கி உபயோகித்ததை எழுதி இருக்கின்றார். ஆனால் ஓயெக் கூட மிச்சிலைன் பற்றி குறிப்பிடவில்லை.

ஆகவே மேலும் உண்மையான விவரங்களும் சான்றுகளும் கிடைக்கும்வரை, மிச்சிலைன் இருந்தாரா இல்லையா என்ற என் முடிவை கூறாமல் விடுக்கிறேன்.

# 16

# மேரி ஹஸ்கல் அல்லது மேரி கொயூரி?

## Mary E.Haskell or Mary Khoury?

*1904*-ஆம் ஆண்டில் ஜிப்ரான் 20 டாலர் கடன் வாங்கி தன் ஓவியங்களை எல்லாம் சேர்த்து கண்காட்சி ஒன்று வைத்தார். அந்த ஓவியக் கண்காட்சியைப் பார்வையிட்டவர்களில் ஒருவர்தான் குமாரி மேரி E. ஹஸ்கல் என்பவர். அவர் ஜிப்ரானின் தோழியானார். பிறகு ஜிப்ரானுக்குப் பாரிஸ் நகர் சென்று மேலும் ஓவியக்கலையை அறிந்து தேர்ச்சி பெற பண உதவி செய்தார். சில வாழ்க்கை வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றார்கள் ''ஜிப்ரான் அதன் பிறகு தான் எழுதிய கையெழுத்து பிரதிகள் அனைத்தையும் ஹஸ்கலிடம் பார்க்கக் கொடுத்து அதன் பிறகே அவற்றை புத்தக வெளியீட்டாளரிடம் கொடுத்தார்.

ஜிப்ரானின் நாவல் 'முறிந்த சிறகுகள்' மேரி E. ஹஸ்கல் அவருக்கே காணிக்கையாக்கப்பட்டது. இருந்தாலும் ஜிப்ரானின் சொத்துக்களை நிர்வாகம் செய்யும் அதிகாரிகள் கூற்று என்னவென்றால், 'ஜிப்ரானுக்குப் பண உதவி செய்து ஆதரித்தவர் ஒரு பெரும் பணக்காரப் பெண்மணியான மேரிகொயூரி என்பவரே! ஜிப்ரானின் சொத்தைப் பராமரிக்கும் பொறுப்பாளர்தான் மேரி கொயூரியின் குடும்ப வைத்தியர், அவர் கூறுகின்றார்; தான் பலமுறை மேரி கொயூரியின் வீட்டில் ஜிப்ரானின் படங்கள், ஓவியங்கள், சிற்பச்சிலைகள் அனைத்தையும் பார்த்திருப்பதாயும்

அவற்றில் அரபிக் மொழியில் அவர் கையொப்பம் இடப்பட்டிருந்ததாயும் கூறுகின்றார்.

''ஒரு மனிதன் குடிப்பதற்காக நிந்திக்காதே; அவன் ஒருகால் குடியைவிட கடுமையான ஒரு தொல்லையை மறக்கக் குடிக்கலாம்.'' டாக்டர் மேலும் கூறுகின்றார் மேரி கொயூரி ஜிப்ரானின் கடிதங்களை வெளியிட ஒப்புக்கொண்டார். அந்த கடிதங்கள் எல்லாம் ஒரு நண்பரிடம் பதிப்பிப்பதற்காக ஒழுங்குபடுத்த கொடுக்கப்பட்டது, ஆனால் துரதிர்ஷ்டவசமாக அந்த டாக்டரும் மேரி கொயூரியும், இருவருமே இப்போது இறந்துவிட்டனர். இப்படியாக அந்த கடிதங்களும் அவருடைய ஓவியங்களும் யாருமே அறியாதவர்களின் கையில் அகப்பட்டுக் கொண்டன.

மேரி கொயூரியின் கூற்றின்படி ஜிப்ரான் தன் வாழ்நாளின் கடைசி காலத்தில் பல மாலை நேரங்களை அவரின் வீட்டில் கழித்திருக்கின்றார்.

அந்த கடிதங்களைப் பற்றி மேலும் ஆழ்ந்து துருவி ஆராய்ச்சி செய்வதில் மிகவும் நம்பிக்கைமிக்க லெபனான் நாட்டு பத்திரிகை நிருபர்கள் மூலம், அவர்கள் அந்தக் கடிதங்கள் பலவற்றைப் படித்ததாகவும் மேரி கொயூரி அந்தக் கடிதங்கள் முறையாக சரிசெய்யப்பட்டவுடன் வெளியிடக் கொடுப்பதாயும் வாக்குறுதி அளித்தார் என்று அறிகின்றோம். அந்த செய்தி யாளரை நான் அவையெல்லாம் வியாபார சம்பந்தமான கடிதங்களா அல்லது காதல் கடிதங்களா என்று வினவியபோது அவர் காதல் கடிதங்கள் என்று உறுதியுடன் கூறினார். என்ன இருந்தாலும் கலீல் ஜிப்ரானின் வாழ்க்கையிலே அவரை ஆதரித்து போற்றிய பரோபகாரியின் இரகசியங்கள் எல்லாம் புதிராகவே, மர்மமாகவே இருக்கின்றது. அவள் மேரி E. ஹஸ்கல்தானா அல்லது மேரி கொயூரியா? அல்லது இருவரும் வேறு வேறானவரா? புரியவில்லை; தெரியவில்லை.

17

## பார்பரா யங்

Barbara Young

*பார்பரா யங் ஜிப்ரானை அவரின் கடைசி ஏழு ஆண்டுகளில் நன்குஅறிந்தவர். இந்த ஏழு ஆண்டு காலத்திலே ஜிப்ரானின் பிரதம சிஷ்யையாய் இருந்து ஜிப்ரானின் புகழை உலகறிய எடுத்துக்கூறி, அவர் வாழ்க்கைச் சரித்திரத்தை 'ஜிப்ரான்-லெபனான் நாட்டு அந்த மனிதன்' என்று எழுதி வெளியிட்டார்.*

*பார்பரா யங் எழுதுகின்றார். ''இவர்தான் ஜிப்ரான். ஜிப்ரான் ஒரு கவிதையோ, ஓர் ஓவியமோ வரையாமலிருந்திருந்தால் அழிவற்ற காலப்பதிவேட்டின் மேல் அவருடைய கையெழுத்து இப்போது அழிக்க முடியாததாக இருக்கும்; அந்த தனி மனிதனுடைய தனித்தன்மை வாய்ந்த மனசாட்சி, காலத்தின் மனசாட்சியில் ஆழமாகவும், அழுத்தமாகவும் ஊடுருவிச் சென்று வாழ்கின்றது; அந்தச் சக்தி காலத்தைக்கடந்து மரணத்தைக்கடந்தது, என்றும் நிலைத்து வாழ்கின்றது. இதுதான் கலீல் ஜிப்ரான்.*

*1923-ஆம் ஆண்டு பார்பரா எங், ஜிப்ரானுடைய 'தீர்க்கதரிசி'யை படிக்கக் கேட்டார்,*

*உடனே ஜிப்ரானுக்கு அதைப் பற்றி புகழ்ந்து கடிதம்*

எழுதினாள். பெருவியப்பில் ஆழ்ந்தாள். உடனே ஜிப்ரானிடமிருந்து பதில் வந்தது, அதில் ''அவரை நேரில் வந்து சந்தித்து கவிதைகள் பற்றி உரையாடும்படியும், தன் ஓவியச்சாலையில் உள்ள ஓவியங்களைக் காணும்படியும் அழைத்தார்.'' ''ஆகவே நான் போனேன்.'' பார்பரா யங் எழுதுகின்றார். ''அந்த பழைய பத்தாவது மேற்கு தெருவில் உள்ள கட்டடத்தில் நான்கு மாடிகளில் படிகள் ஏறிச் சென்ற என்னை அங்கு அழகாக சிரித்துக் கொண்டு அன்புடன் வரவேற்று, ஏதோ நாங்கள் இருவரும் பல ஆண்டுகளாய் பழகிய நண்பரை பார்ப்பது போல் பார்த்தேன்!''

பார்பரா ஜிப்ரானைவிட உயரமானவர். அழகான நிறம், நேர்த்தியாக அமைந்த உடற்கட்டு. அவளின் குடும்பம் டிவேனில் உள்ள பிட்போர்ட் நகரிலிருந்து வந்தது, இங்கிலாந்து நாட்டினர். பார்பரா யங் ஓர் ஆங்கில ஆசிரியை தொழிலில் இருந்தார்; ஒரு புத்தகக் கடையையும் நடத்தி வந்தார். பார்பா யங் அதன் பிறகு ஜிப்ரானின் நூல்களைப் பற்றி விரிவாக சொற்பொழிவுகள் நிகழ்த்தி, தன் வாழ்வின் முடிவுரை பிரசாரம் செய்தார்.

ஜிப்ரான் 1931-ஆம் ஆண்டில் இறந்த பிறகு அவருடைய கதை,கவிதை, கட்டுரைகள் அனைத்தும் சேகரித்து முறைப்படுத்தி, முடிவு பெறாத நூல்கள் அனைத்தையும் வெளியிட்டார். 'தீர்க்கதரிசியின் பூந்தோட்டம்' என்ற கடைசி நூலையும் முறையாகத் தொகுத்து வெளியிட்டார்.

பார்பரா யங் மற்றும் ஜிப்ரானின் வாழ்க்கையை எழுதிய வரலாற்று ஆசிரியர்கள் அனைவரும் ஜிப்ரான் மெலிந்து, நடுத்தர உயரத்துடன் ஐந்து அடி நான்கு அங்குல உயரமாய் பெரிய, தூக்க மயக்கமுற்ற, கரிய கண்களுடன் பெரிய புருவங்களுடன், பழுப்பு

நிறத்தலைமுடியும், உதடுகளையெல்லாம் மறைத் திருக்கும் படியாக வளர்ந்து அடர்ந்த மீசையும் கொண்டிருந்ததாய் ஓவியம் தீட்டுகின்றனர். அவர் உடம்பு வலிமையுடனும், அவர் அணைப்பு சக்திமிக்கதாயும் இருந்தது. அவர் எழுதிய கடிதத்தில் தன் இதயத் துடிப்பு அசாதாரணமாக இருப்பதாய் எழுதியுள்ளார்.

பார்பரா யங் அவருடனே வைத்தியசாலையில் உயிர்விடும் தருவாயில் உடன் இருந்தார். ஜிப்ரான் இறந்தவுடனே அவருடைய எல்லா ஓவியங்களையும் அவர் கலைக்கூடத்தில் இருந்த எல்லா பொருள்களையும் அவர் 18 ஆண்டு வாழ்ந்த அந்தக் கலைக்கூடத்தின் எல்லா பொருள்களையும் நன்றாக பாதுகாப்பாக ஜிப்ரான் பிறந்த ஊரான லெபனான் நாட்டில் உள்ள பெச்சிரிக்கு அனுப்பிவைத்தார்.

பார்பரா யங் தன் பிரசாரங்களின்போது ஜிப்ரானுடைய 60 ஓவியங்களை எல்லோருக்கும் கண்காட்சியாக வைத்து காண்பித்தார். இந்த ஓவியங்கள் என்னவாயின? அவருடைய பூர்த்தியாகாத ஓவியங்கள், காவியங்கள், கடிதங்கள், கையெழுத்துப் பிரதிகள் எல்லாம் அவற்றை வாங்கிக்கொண்டவர்கள், அன்பளிப்பாக பெற்றவர்கள், சொத்தாக அடைந்தவர்களிடமே நின்று விட்டன. அவர்களுடைய பெருந்தன்மையில் இன்னும் உள்ளது அவையெல்லாம் பொதுமக்களின் பார்வைக்கும் அறிவிற்கும் எட்டும்வரை ஜிப்ரானின் படைப்புகள் பூர்த்தியடையாத ஒரு சரித்திரமாகவே இருக்கும். இவற்றை பார்பரா யங் பெற்று பூர்த்தி செய்யவும் இயலவில்லை.

ஜிப்ரான், பார்பரா யங் இருவருக்கும் இடையே எப்படிப்பட்ட நெருக்கமான உறவு கடைசி 7 ஆண்டுகளில் நிலவிற்று என்பதை, பார்பரா யங் எழுதியுள்ள நூல்களிலிருந்தே மேற்கோள் காடடலாம்.

பார்பரா யங், ஜிப்ரானுடன் ஒன்றாக வாழவில்லை. நியூயார்க் நகரில் பார்பரா தனி வீட்டில் வாழ்ந்தார்.

ஓர் ஞாயிற்றுக்கிழமை ஜிப்ரானிடமிருந்து வந்த அழைப்பை ஏற்று ஜிப்ரானின் கலைக்கூடத்திற்கு சென்றார். ஜிப்ரான் ஓர் கவிதையை எழுதிக் கொண்டிருந்தார்; அவர் தன் நாற்காலியல் அமர்ந்து மேஜை மேல் எழுதினார்; எழுதும்போது ஜிப்ரான் தன் வீட்டில் ஓரிருமுறை நடந்தபின் உட்கார்ந்து ஓரிரு வரிகள் எழுதுவார்.

''அவர் தான் எழுதியதை எனக்குப் படித்துக் காட்டினார்; நான் காத்துக்கொண்டிருந்தேன்; மறுபடியும் மேலும் கீழும் நடந்தார். அப்போது எனக்கு ஓர் எண்ணம் தோன்றியது. அடுத்து அவர் நடக்க ஆரம்பித்தபோது நான் எழுந்துபோய் அவர் உட்கார்ந்த இடத்திலே அமர்ந்து பென்சிலை எடுத்து வைத்துக்கொண்டேன். அவர் திரும்பிப் பார்த்தபோது நான் கூறினேன் ''நீங்கள் கவிதையை சொல்லுங்கள் நான் எழுதுகின்றேன்.''

ஜிப்ரான் அதற்கு ஒத்துக்கொள்ளவில்லை. எதிர்த்தார், பிறகு சரி என்று ஒத்துக்கொண்டு முயற்சி செய்கிறேன் என்றார். பிறகு அவர் கவிதைகளைச் சொல்ல, நான் எழுதினேன். அந்த சோதனை திருப்தியாக அமைந்தது.

''நல்லது, நீயும் நானும் இரு கவிஞர்கள். நாம் ஒன்றாய் உழைக்கின்றோம்;'' சிறிது நேரம் அமைதி. மௌனத்திற்குப் பிறகு ''நாம் நண்பர்கள்நான் உன்னிடமிருந்து எதையும் வேண்டவில்லை. நீயும் என்னிடமிருந்து எதையும் எதிர்பார்க்க வில்லை; நாம் வாழ்க்கையைப் பங்கிட்டுக் கொள்வோம்'' என்று சொன்னார்.

இருவரும் இணைந்து வேலை செய்தனர். பார்பரா யங், அவருடைய எண்ணங்களின் ஓட்டம், வேலை செய்யும் பாணி அனைத்தையும் நன்கு புரிந்து பழகிக்கொண்டார். பிறகு அவரைப் பற்றி தான் ஒரு புத்தகம் எழுதப் போவதாய் இருக்கும் திடமான எண்ணத்தைக் கூறினார். ஜிப்ரான் மகிழ்ச்சியடைந்தார். ''அந்த நேரத்திலிருந்து பிறகு தன் இளமைக்கால வாழ்க்கையைப் பற்றி அதிகம், அடிக்கடி பேசினார்; தன் தாயார், குடும்பம், வாழ்க்கையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் பற்றி எல்லாம் கூறினார்.''

ஒரு நாள் ஜிப்ரான், பார்பராவிடம் கேட்டார். ''உனக்கு, நீ கற்ற எல்லா வார்த்தைகளையும் மறந்துவிட வேண்டும் என்ற ஒரு நிர்ப்பந்தம் ஏற்பட்டால்-ஏழு வார்த்தைகள் மட்டுமே உன் நினைவில் இருக்க வேண்டும்-நீ எந்த ஏழு சொற்களை நீங்காத நினைவில் கொள்வாய்?''

பார்பரா எழுதுகின்றார் ''நான் ஐந்து வார்த்தைகளைக் கூறினேன்; கடவுள், வாழ்க்கை, காதல், அழகு, உலகம்... ஜிப்ரானைக் கேட்டேன், வேறு என்ன சொற்களைத் தேர்ந்தெடுப்பீர்கள்; அதற்கு அவர் பதில் சொன்னார். ''மிக முக்கியமாக சேர்த்து வைக்க வேண்டிய இரு சொற்கள் உள்ளன-அவை நீயும் நானும். இந்த இரண்டு வார்த்தைகளின்றி மற்ற வார்த்தைகளுக்கு அவசியமும் தேவையும் இல்லை'' பிறகு ஜிப்ரான் ஏழு வார்த்தைகளை தேர்ந்தெடுத்து சொன்னார்; நீ, நான், கொடு, கடவுள், காதல், அழகு, உலகம்.''

ஜிப்ரான் தன் கலைக்கூடத்திலேயே மிக எளிய உணவை உண்பார். அவரை விருந்தோம்பி மகிழ்விக்கும் போதும், விழா நாட்களிலும்கூட அவர் எளிய உணவையே கொஞ்சம் உண்பார்.

ஒரு நாள் மாலை ஜிப்ரான் சொன்னார்: ''கிழக்கு நாடுகளில் ஒரு பழக்கம் என்னவென்றால் ஒரே பாத்திரத்தில் இருந்து உணவை எடுத்து அனைவரும் உண்பர். இன்று நாம் இருவரும் ஒரே தட்டிலிருந்து உணவை உண்போம்'' அன்று அப்படியே உண்ணத் தலைப்பட்டோம். தட்டில் ஒரு கற்பனைக் கோடு வரைந்து விளையாட்டாக நகைச்சுவையுடன் சொன்னார் 'இந்த பாதி உணவு உன்னுடையது; மறுபாதி உணவு என்னுடையது' என்றார். பிறகு நாம் இருவரும் ஒருவரின் பங்கு மேல் வேறொருவர் ஆக்கிரமிக்கக் கூடாது என்றார். பிறகு நாங்கள் உண்டோம், சிரித்தோம், மகிழ்ந்தோம்.

வேறோர் அத்தியாயத்தில் பார்பரா யங் எழுதுகின்றார். ''ஓர் நாள் நானும் அவரும் மாலை நேரத்தில் 'மணலும் நுரையும்' என்று நூலை எழுதிக் கொண்டிருந்தோம்; நான் சாதாரணமாக உட்காரும் நாற்காலியில் அமராமல் தலையணைகளை ஒன்றன் மேல் ஒன்றாக அடுக்கி அதன் மேல் உட்கார்ந்தேன். என்னில் ஒருவிதமான விசித்திர உணர்ச்சியும் அந்நியோன்யமும் கொண்டு, நான் சொன்னேன், 'நான் இப்படி பலமுறை உங்களுடன் அமர்ந்திருந்ததைப்போல உணர்கின்றேன்; ஆனால் உண்மையில் அப்படி இருந்ததில்லை' என்றேன். அதற்கு ஜிப்ரான் பதில் சொன்னார். 'நாம் இருவரும் இப்படி ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு செய்தோம்; இனி ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகும் இப்படியே செய்வோம்' என்றார்.

'ஏசு கிறிஸ்து - மனிதனின் மகன்' என்ற நூலை எழுதும்போது அடிக்கடி, அந்த நாடக நிகழ்ச்சி மகிழ்ச்சி அளிப்பதாய் அமைவதாய் நான் உணர்ந்தேன். 'இது மிகவும் உண்மையாய் நிகழ்வதுபோல் உள்ளது; நான் அங்கேயே இருந்து பார்த்தது போல் உள்ளது!' என்றேன். அதற்கு ஜிப்ரான் உடனே பதில் சொன்னார். 'ஆம் நீ

அங்குதான் இருந்தாய்! நானும் அங்குதான் இருந்தேன்!'

இந்த இடத்தில் இதை நான் சொல்வது பொருத்தமாய் இருக்கும்: ஜிப்ரான் இறந்து இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு பார்பரா யங்கும் ஆசிரியர் (ஜோசப் ஷீபென்) இருவரும் கிளீவ்லேண்ட என்ற நகரில் சந்தித்தனர். பார்பரா கேட்டார் 'அரபிக் மொழியை நன்கு கற்று தேற எத்தனை ஆண்டுகள் ஆகும்?' நான் விளக்கினேன், ஜிப்ரானின் நூல்களை அரபிக் மொழியிலிருந்து ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க, அந்த மொழியின் இலக்கிய நுணுக்கங்களைத் தெரிந்து கலையில் தேர்ச்சி பெற பல ஆண்டுகள் தேவைப்படும். ஆனால் வெறுமனே அரபிக் மொழியில் பேசப் பழகுவது வேறு சங்கதி, எப்படி இருந்தாலும் அரபிக் மொழி மிகவும் கடினமான மொழிகளில் ஒன்று என்றேன்.

அப்போது நான் சட்டப்படிப்பு படித்துக்கொண் டிருந்தேன்; அந்த நேரத்தில் நான் அரபிக்மொழியைக் கற்றுக்கொடுக்கவும் ஆர்வம் காட்டவில்லை; ஜிப்ரானைப் பற்றி இந்த நூலை எழுத வேண்டும் என்று எண்ணவும் இல்லை. பார்பரா யங் கூறினார். ஜிப்ரான் ஓவியம் வரைந்தபோதெல்லாம் அவருடைய கையின் வனப்பையும் அழகையுமே ஓவியங்களில் வரைந்து பிரதிபலித்தார்.

ஜிப்ரான் வரைந்த ஓவியங்களில் மிகவும் புகழ்பெற்றது ஒரு கையின் மத்தியில் ஒரு கண்ணுடன் இருக்கும் ஓவியமே. இது பெனீஷியன் தேவதையான 'டானிட்' என்பதைப் பிரதிபலிப்பதாகவும், பிரதிநிதித்தன்மை அளிப்பதாயும் இருந்தது. இந்த தேவதையின் பெருமையை நிலைநாட்ட லெபனான் நாட்டில் இரு கரங்கள் உள்ளன; அதன் பெயர் ஐடானிக் (Eyetanit) அதன் அர்த்தம் 'டானிட்டின் கண்' என்பது.

இந்த கம்பீரமான மாதிரி, கையின் மத்தியில் உள்ளங்கையில் கை கூடு கட்டியதுபோல் இருப்பது கார்த்தேஜ் நகரில் வட ஆப்பிரிக்காவில் தோன்றியுள்ளது. இது ஜிப்ரானின் முன்னோர்களால் அங்கு கொண்டு போகப்பட்டது. பினோஷியன்ஸ், அல்பாமாவில் டானிட்கையின், மரத்தில் ஆன செதுக்கலை கொலம்பஸ் அங்கு வருவதற்கு முன்னமே கொண்டு சென்று விட்டுவந்தனர்.

ஜிப்ரான் லெபனான் நாட்டில் அப்படி ஒரு கையைப் பார்த்தாரா? இந்த ஆண்டிற்கும் ஆன ஒப்புமை ஓர் எதிர்பாராதவிதமாய் அமைந்த ஒற்றுமையாய் ஒத்திருக்கிறதா அல்லது ஜிப்ரானும் பாரபரா யங் இருவரும் டானிட்டின் கோயிலைக் கட்டும்போது லெபனான் நாட்டிலும் கார்த்தேஜ் நகரிலும் கிறிஸ்து பிறப்பதற்கு முன்னமேயே இருந்தார்களா?

பார்பரா யங் எழுதியுள்ளார்; ஒரு சமயம் சில பெண்மணிகள் ஜிப்ரானைப் பார்த்து பேச வந்தபோது, ஏன் ஜிப்ரான் திருமணம் செய்துகொள்ளவில்லை என்று கேட்டனர். அதற்கு ஜிப்ரான் பதில் சொன்னார் ''நல்லது... இது இவ்வாறு இருப்பதைப் பார். எனக்கு ஒரு மனைவி இருந்தால், நான் ஓவியம் தீட்டிக்கொண்டும் கவிதைகள் எழுதிக் கொண்டு இருப்பின் நான் என் மனைவி இருப்பதையே மறந்து மணிக்கணக்கில் நாட்கணக்கில் என்னையே மறந்திருப்பேன். இப்படி இருக்கம்போது, எந்த ஒரு காதல் கொண்ட மனைவியாவது இப்படிப்பட்ட கணவனுடன் நீண்ட நாட்கள் சகித்துக் கொண்டு வாழ்க்கை நடத்த முடியுமா?'' என்றார் .

அதில் ஒரு பெண்மணி அவருடைய பதிலில் திருப்தி அடையாமல் சிரித்துக்கொண்டே, மேலும் தோண்டும் தோரணையில் கிண்டிவிட்டாள், ''ஆனாலும், நீங்கள்

யாரையும் உளமார காதலிக்கவில்லையா?'' ஜிப்ரான் தன்னையும் மிகவும் கட்டுப்பாடாக அடக்கிக் கொண்டு மிகவும் சிரமப்பட்டுச் சொன்னார் ''நான் ஒரு சங்கதியைச் சொல்கின்றேன்; உனக்குத் தெரியாமல் இருக்கலாம்; இந்த உலகத்திலேயே மிகவும் காதல்வயப்பட்டவர்கள், பால் உணர்ச்சி மிக்கவர்கள் கவிஞர்கள், ஓவியர்கள், சிற்பிகள், இசை வல்லுநர்கள்... இப்படியாக உலகம் தோன்றியது முதல் உள்ளது. அவர்களுக்கு காதல் மிகவும் உயர்ந்த மிக அழகான நன்கொடையாகும்; பாலுணர்ச்சி எப்போதும் மிகவும் அழகானது; அதே சமயம் அது மிகவும் நாணம், கூச்சம், வெட்கம் கொண்டது''

பாரப்ரா யங் அவர்கள் எழுதியுள்ள கீழ்க்கண்ட பகுதியை, பத்தியை அப்படியே வெளியிடுகின்றேன். இதற்கு எந்தவிதமான விளக்கமும், கருத்தும் நான் தரப்போவதில்லை. இதை வாசகர்களே புரிந்து கொள்ளட்டும்; ஜிப்ரானின் வாழ்க்கையிலே பார்பரா யங் பெற்றிருந்த முக்கிய இடத்தையும் அறிவீர்களாக.

''எப்போதும் புத்தியுள்ள பெண்கள் எச்சரிக்கையுடன் இருப்பார்கள்; ஒன்றிலும் இல்லாமல் தோன்றி, மிகப்பெரிய புகழ்பெற்ற மனிதனை அந்த மனிதர் இறந்தவுடன், அவர் தனக்கே சொந்தம் என்று உரிமை கொண்டாடுவார்கள். ஆனால் யார்தான் 'கடவுளே, கடவுளே' என்று கூறாமல் இருக்கின்றார்களோ, அவர் அப்போதும் மௌனத்தை ஏற்று, தங்கள்பணியைச் செய்கின்றார்களோ, அவர்களுடைய கைகளே அவருக்குப் பணிவிடை செய்து பராமரித்து வந்தது எனலாம்.

இந்த இதயமே அவரின் நுணுக்கமான பல கோடி உயிர்களை ஊன்றி ஆழ்ந்து பார்த்தது எனலாம். ஆனால் என்னைப் பொறுத்தவரையில் எனக்கு எந்தவிதமான

சந்தேகமும் இல்லை; இந்த மாமனிதரின் கொந்தளிப்பான, காலவரையறை அற்ற வாழ்க்கையிலே, உலகமெங்கும் ஏகோபித்துக்குரல் எழுப்பும் பெண்ணின் சுகம், இன்பம், அன்பு, பராமரிப்பு, அணைப்பு, ஆறுதல் எல்லாம் இணைந்து அவருடைய தனிமையை விரட்டி ஓட்டிவிட்டது. கடவுளின் பேரருளால் அவரின் கூக்குரலுக்கு பதில் கிடைத்துவிட்டது. இதை நான் வேறு விதமாகவே முடிக்க நினைத்தால் அது ஓர் வடிகட்டின அறிவீனம், முட்டாள்தனமென்றுதான் கருதப் படும்.''

(*மேலும் அறியவேண்டின்* This Man From Lebanon By Barbara Young *என்ற நூலைப் படிக்கவும். ஆ.மா.ச.*)

வேமன் பதிப்பகம் நான் மொழிபெயர்த்த இந்த நூலை முழுமையாக ''கலீல் ஜிப்ரான்-லெபனானின் மனிதன்'' *தமிழில் ஆ.மா. சகதீசன்*

18

# மரியானா

## Mariana

ஜிப்ரானின் தங்கைதான் மரியானா. அவர் சிறியவள் ஆனதால் அவர்களின் குடும்பம் அமெரிக்காவிற்கு குடிபெயர்ந்ததற்குக் கலந்து ஆலோசிக்கப்படவில்லை. அவளை யாரும் ஜிப்ரானை அமெரிக்கா, ஐரோப்பா, லெபனான் அனுப்பலாமா என்று கேட்கவும் இல்லை. ஆனாலும் அவர்களுடைய தாய் கமீலா, சகோதரி சுல்தானா, அண்ணன் பீட்டர் மூவரும் காசநோயால் அடுத்தடுத்து இறந்து மிகப்பெரிய சோகமே உருவான சம்பவம் இரண்டு ஆண்டுகளுக்குள் நடந்தவுடன் மரியானா தன் அண்ணன் ஜிப்ரானுடன் யாரும் அற்ற அனாதை ஆயினர்.

சம்பாதித்து குடும்பம் நடத்திய பீட்டர் இறந்ததால் வாழத் தவித்தனர். கலீல் ஜிப்ரானின் அரபிக் மொழி நூல்கள், கவிதைகள், கட்டுரைகள், கவிதைகள் எல்லாம் அரபு மக்களிடையே பெரிய விழிப்புணர்ச்சியை உண்டாக்கி ஓட்டாமன் சாம்ராஜ்யத்தின் அடித்தளத்தையே அதிர வைத்திருந்தது.

மரியானா, உலகில் இலக்கிய உயர்வும் பணமும் ஒன்றாக இணையாது; ஒருகால், காலம் கடந்து வாழ்க்கையின் கடைசி காலத்தில் ஒன்றுசேரும் என்று உணர்ந்தார். ஜிப்ரானின் படிப்பு அரபிக் மொழியில் நன்கு அமைந்தது. ஆனால் அவருடைய நூல்களும்,

கட்டுரைகளும் வாழத் தேவையான பணத்தைப் பெறவும், அன்றாட வாழ்க்கையை நடத்தப் போதுமானதாகவும் இல்லை.

மரியானா தன் அண்ணன் ஜிப்ரான் தன் திட்டங்களை மாற்றிக்கொள்ளவோ, ஏதாவது வேலையில் சேர்ந்து இலக்கிய கலை உலக வாழ்க்கையை விட்டுவிலகவோ விரும்பவில்லை. ஆகவே மரியானா துணி தைத்து, பின்னல் வேலை செய்து பணம் சம்பாதித்து குடும்பத்தை நடத்தினார். அவள் ஜிப்ரானை ஓவியம் தீட்ட ஊக்கமளித்தாள்; ஜிப்ரான் நிறைய ஓவியங்கள் வரைந்து ஒரு தனி மனித கண்காட்சி நடத்தும் அளவிற்குத் தயார் செய்தாள். ஆனாலும் அவற்றைக் கொண்டு கண்காட்சி நடத்தத் தேவையான பணம் சேர்க்க முடியவில்லை; ஆகவே ஜிப்ரான் லெபனான் நாட்டு பெண்மணி ஒருவரிடம் 20 டாலர் கடன் வாங்கி அந்த கண்காட்சியை நடத்தினார். அந்தப் பெண்மணி பாஸ்டன் நகரில் அப்போது இருந்தார். அவர் இப்போதும் லெபனானில் வாழ்கின்றார். அவர் ஜிப்ரான் கடனிற்கு எழுதித் தந்த பத்திரத்தை மிகவும் விலைமதிக்க முடியாத பொக்கிஷமாக பாதுகாத்து வருகின்றார்.

ஜிப்ரான் படிப்பிற்காக செலவு செய்த பொருளீடு நல்ல பலனைத் தர ஆரம்பித்தது. இலக்கிய உலகில் மட்டுமன்றி பணத்தினாலும் பெரும் லாபம் கொடுத்தது. ஜிப்ரானுக்கு புத்தகம் எழுதியதில் வந்த புத்தகப் பங்குத் தொகை மட்டும் ஒன்றரை மில்லியன் டாலர் ஆகும். இப்பணமெல்லாம் அவருடைய பிறந்த ஊரான பெச்சிரிக்கு அனுப்பப்பட்டது.

அவர் தங்கை மரியானா பாஸ்டனிலேயே ஓய்வுடன் வாழ போதுமான பணம் ஒதுக்கி பாதுகாக்கப்பட்டது. மரியானா பார்பரா யங்கின் மிக நெருங்கிய உறவுடன் வாழ்கின்றார். 'லெபனானின் மனிதன்' புத்தகத்தை மரியானாவிற்கு காணிக்கை செய்தார்.

◉

19

## மே செய்டா

May Ziadeh

மே செய்டா கடிதங்களிலேயே காதலிக்கப் பட்டவர். ஜிப்ரான், மே செய்டாவைப் பார்க்கவே இல்லை. மே செய்டா ஓர் லெபனான் நாட்டுப் பெண்மணி, அவர் எகிப்து நாட்டில் குடியேறினார். அவள் தன் பெற்றோருக்கு ஒரே குழந்தையானதால் முதலில் மத்திய கிழக்க நாடுகளிலும் பிறகு ஐரோப்பா சென்றும் படித்தார்; பிறகு தன் தகப்பனாரின் மாத, வார வெளியீடுகளில் கட்டுரைகள் எழுதி வந்தார். அவர் ஃபிரெஞ்சு மொழி, அரபிக் மொழி வெளியீடுகளிலும் எழுதினார். எகிப்து நாட்டில் மே செய்டாவின் தகப்பனார் வீட்டிலே பல பெரிய இலக்கிய அறிஞர்கள் கூடிப்பேசி வந்தார்கள். ஜிப்ரானின் கதை, கவிதை, கட்டுரைகள் அந்த காலகட்டத்தில் எல்லா நாளேட்டிலும், வார மாத வெளியீடுகளிலும் வெளிவந்து கொண்டிருந்ததால் அதுவே பல போது அனைவரும் விவாதிக்கும் முக்கிய சங்கதியாக இருந்தது.

மே செய்டா, ஜிப்ரானின் இலக்கியத்தை மிகவும் போற்றி, வியந்து, அதிசயித்தார்; பிறகு ஜிப்ரானுக்குக் கடிதம் எழுத முடிவு செய்தார் ஜிப்ரான் தன் கடிதங்களை ரசிகர் எழுதுவதுபோல் நினைத்து ஒதுக்கிவிடுவாரோ

என்று பயந்து, முதலில் தன்னைப் பற்றி ஒரு முகவுரை எழுதினாள். தான் கட்டுரைகளும் புத்தகங்களும் எழுதி வெளியிடுவதாயும், அவற்றில் பலவும் 'ஐ ஸிஸ் குபியா' (Isis Cubia) என்று புனைப் பெயரில் வெளிவந்ததாகவும் விவரித்து எழுதினார். அதன் பிறகு எகிப்து நாட்டு மக்கள் சமுதாயத்தில் ஜிப்ரானின் இலக்கிய ஆதிக்கம் எவ்வளவு பெரிய பாதிப்பையும், தாக்கத்தையும் உண்டாக்கி யுள்ளது என்று விளக்கமாக போற்றிப் புகழ்ந்தார்.

ஜிப்ரான் உடனே பதில் கடிதம் எழுதினார். அவளுடைய தைரியத்தை மிகவும் பாராட்டினார். மற்றும் மத்தியக் கிழக்கு நாடுகளில் பெண்களின் முன்னேற்றத் திற்கு, பெண் விடுதலைக்குப் பணியாற்றும் பெரும் தொண்டினைப் பாராட்டி நன்றி தெரிவித்தார். மேலும் அவளுக்கு தான் எழுதிய 'முறிந்த சிறகுகள்' என்ற நூலை தனி பார்சலாக தபாலில் அனுப்பியுள்ளதாயும் தெரிவித்தார். அதற்கு 'முறிந்த சிறகுகள்' என்று தலைப்பை எப்படி தந்தார் என்பதையும் விளக்கி எழுதினார்.

''நான் என் தாய் கமீலாவிடமிருந்தே என் குணங்கள் தொண்ணூறு சதவிகிதம் பெற்று இருக்கின்றேன்; இதனால் நான் அவளுடைய அழகையும் எளிமையையும், பெரிய இதயத்தையும் பெற்றுவிட்டேன் என்று பொருள்படாது. நான் இருபது ஆண்டு இளைஞனாக இருந்தபோது என் தாய் கூறிய வார்த்தைகளை நினைவுகூர்கின்றேன். எனக்கும் என் நாட்டு மக்களுக்கும் நான் ஓர் துறவியாக மாறி மடாலயத்தில் சேர்ந்து பணியாற்றினால் பெரும் நலன் பயப்பதாய் இருக்கும் என்றார்.

நான் பதில் சொன்னேன். 'உங்களை நான் என் தாயாக இந்த உலகில் தோன்றுமுன் ஏற்றேன், என்பது தவிர மற்றவை உண்மை.'

அவர் - என் தாய் கமீலா சொன்னார்கள்: 'நீ என் மகனாகப் பிறக்காதிருந்தால், நீ ஓர் தேவதூதனாக இருந்திருப்பாய்.'

நான் பதில் சொன்னேன், ''நான் இப்போதும் தேவதூதனாகவே இருக்கின்றேன்.''

என் தாய் சிரித்துவிட்டு கேட்டார், ''ஆனால் உன்னுடைய சிறகுகள் எங்கே?''

நான் என் தாயின் கைகளை என் தோள்களின் மேல் வைத்துக்கொண்டு சொன்னேன், ''இவையே என் சிறகுகள்'' என்று.

என் தாய் அதற்கு பதில் சொன்னார்கள்.
''ஆனால் அவை முறிந்து போனவை''

ஜிப்ரான் மேலும் அக்கடிதத்தில் எழுதி இருந்தார். ''என் தாய், இப்போது இறந்துவிட்டார்; நீலநிற ஆகாய வெளியிலே மறைந்துவிட்டார். ஆனால் அவர் கூறிய அச்சொற்கள் 'முறிந்த சிறகுகள்' என் இதயத்தில் நிலைத்து நீங்கா இடம் பெற்றது; அதையே என்னுடைய இந்த நவீனத்திற்குக் தலைப்பிட்டேன்; உனக்கு அனுப்பி வைக்கின்றேன்; உன்னுடைய சொந்த விருப்பு வெறுப்புகளை, விமர்சனத்தை வேண்டுகிறேன்.''

'மே செய்டா' அவருடைய விமர்சனத்தை எழுதி அனுப்பினார்; அதை மிகவும் போற்றிப் புகழ்ந்தார்; ஆயினும் ஜிப்ரானின் எண்ணத்திற்கு மாறுபட்டு ஒத்துவராததையும் எழுதினார். அதில் திருமணமான பெண், தன் பழைய காதலனைச் சந்திப்பதைக் கண்டித்திருந்தார்.

மே செய்டா மேலும் எழுதினார் ''எவ்வளவு அப்பாவித்தனமாக இருந்தாலும் அவள் தன்னுடைய பழைய காதலனைச் சந்தித்தது கணவனுக்குச் செய்த துரோகம்; அவளுக்கு உள்ள நல்ல பெயருக்குக் களங்கம்; சமூகத்திற்கும் அது ஒரு துரோகம்.''

இதற்கிடையில் எகிப்து நாட்டின் பேரறிவாளிகள் எல்லோரும் சேர்ந்து ஒரு லெபனான் நாட்டுக்கவிஞருக்கு மரியாதை செய்து கௌரவிக்க திட்டமிட்டிருந்தனர்; அதில் கலந்துகொண்டு புகழாரம் சூட்ட கலீல் ஜிப்ரானையும் அழைத்தனர். அந்த விழாவிலே பணக்கஷ்டம் காரணமாக கலந்துகொள்ள முடியாததால் ஜிப்ரான் ஒரு கவிதையை அதில் படிக்க அனுப்பி வைத்தார். ''பால்பெக்கின் கவிஞர்'' என்பதே தலைப்பு. (இக்கவிஞர் பால்பெக்கில் பிறந்தவர்; அவருக்கே இந்த கௌரவம்) அந்த விழாவிலே அக்கவிதையை மே செய்டாவையே படிக்கும்படி பணித்தனர்.

மே செய்டாவிற்கு பொதுக்கூட்டத்திலே பேசுவது இதுவே முதல் தடவை, இருந்தாலும் மக்கள் இவரின் கவிதைப் பாடலைக் கேட்டு பெரிதும் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர். இப்படியாக அவர் தன் இதயத்தையே ஜிப்ரானுக்கு ஏலம்விட்டு ஒன்றிவிட்டாள். அவர்கள் இருவரும் கடிதத் தொடர்பு கொண்டிருந்தனர்.

இக்கவிதை 'எண்ணங்களும் தியானமும்' நூலில் இடம் பெற்றுள்ளது. மே செய்டாவின் கடிதங்கள் எல்லாம் காதல் கடிதங்கள் அல்ல. ஜிப்ரானின் எழுத்துக்கைளயும் புத்தகங்களையும் மதிப்பீடு செய்து பலமுறை பிழைகளை எடுத்துக்காட்டி விமர்சனம் செய்துள்ளார்; பலவிதமான பொருள் பற்றி எழுதவும் தூண்டுகோலாய் இருந்தார்.

ஒரு சமயம் மே செய்டா எழுதினார்:

''புதிய துருக்கி நாட்டு கவர்னர் லெபனானுக்கு வந்தார். வந்தவுடன் எப்போதும் போல பல அதிகாரிகளை வேலை நீக்கம் செய்தார். அவர் இதற்கு முன் ஆண்ட ஆளுநர்களின் அடிச்சுவட்டையே பின்பற்றியுள்ளார். லெபனான் நாட்டு மக்கள் எல்லோரும் அவர் முன்

மண்டியிட்டு தரையோடு தரையாய் தண்டனிட்டு வணங்கி அடிபணிகின்றார்கள். நாம் எப்போது நம்மிடையே தைரியம் கொண்ட மக்களை உருவாக்கப் போகின்றோம்? லெபனான் நாட்டு மக்கள் என்றுதான் இந்த அவமரியாதையை விலக்கி எறியப் போகின்றார்கள்? நீங்கள் ஏன் இதுபற்றி எல்லாம் தீவிரமாக எழுதக்கூடாது? ஜிப்ரான், மக்கள் உங்கள் எண்ணங்களுக்கு மிகுந்த மரியாதை அளிக்கின்றனர். நம் லெபனான் நாட்டு மக்களுக்கு அவர்களும் மனிதர்கள் என்று உணர்த்துங்கள். நம் நாட்டு மக்களை தங்களைத் தாங்களே இப்படி தாழ்வடையச் செய்யக் கூடாது என்று அறிவுரை நல்குங்கள்.''

இந்த பொருள் பற்றி ஜிப்ரான் கூறுகின்றார்: ''இந்த நாட்டின் மேல் படையெடுத்து வெற்றி கொண்டு ஆக்கிரமித்தவனை மேளதாளத்துடன் வரவேற்கும் இந்த நாட்டு மக்களே! இதுவே சோகம், துக்கம், அவமானம், கேவலம், பெரிய ஆபத்து. எந்த நாடு சவப்பெட்டிக்குப் பின்னால் இருந்து குரலெழுப்பி உரிமை கொண்டாடுகின்றார்களோ, சுடுகாட்டிலே, புதைக்காட்டிலே இருந்துகொண்டு யார் கர்வமும், பெருமையும் பேசுகின்றார் களோ அவர்களை எண்ணி துக்கமும், அவமானமும், கேவலமும் அடைகின்றோம். எந்த நாட்டு மக்கள் தங்கள் தலை தூக்கு கயிற்றிலே மாட்டப்படும்வரை புரட்சி செய்யாமல் தூங்கிக் கொண்டிருக்கின்றார்களோ அவர்களை அவமானமும், சோகமும், துக்கமும் ஆட்கொள்ளும்.

ஜிப்ரான், மே செய்டாவை அமெரிக்கா வரும்படி அழைப்பு விடுத்தார். ஆனால் செய்டா அமெரிக்கா செல்ல மறுத்துவிட்டார்; அவள் பெண் ஆனதால் நாட்டின் பழக்க வழக்கங்கள் இடமளிக்கவில்லை என்று. மே செய்டா,

ஜிப்ரானை எகிப்து நாட்டிற்கு வரும்படி கேட்டுக்கொண்டாள். அதற்கு ஜிப்ரானின் கடிதத்தில் ''என் பொருளாதார நிலைபற்றி நான் என்ன சொல்ல முடியும்?'' என்று எழுதினார்.

''ஓரிரு ஆண்டுகளுக்கு முன்பு எனக்கு அமைதியும் திருப்தியும் இருந்தது. ஆனால் இப்போது என் அமைதியான வாழ்க்கை குழப்பமும், கலக்கமும் ஏற்பட, என் சமாதான வாழ்க்கை, போராட்டமாக மாறிவிட்டது. இரவும் பகலும் மக்கள் என்னையும் என் நேரத்தையும் உரிமையுடன் வேண்டுகின்றனர். அவர்களின் கோரிக்கைகளைக் கேட்க நான் நசுக்கப்படுகின்றேன். எப்போதாவது ஒருமுறை நான் இந்த நகரத்தின் பெரும் இரைச்சலும், சந்தடியும் வாட்டாமல் இருக்க, மக்கள் என்னை நச்சரிக்காமல் இருக்க எங்காவது நகரினின்று தூரத்தே ஒதுங்கிச் செல்கின்றேன். அமெரிக்கப் பொதுமக்கள் பலமிக்கவர்கள். இவர்கள் தளர்ச்சி அடைவதுமில்லை; ஓய்ந்து விடுவதுமில்லை; துங்குவதுமில்லை; கனாக் காண்பதுமில்லை. அவர்கள் உன்னை விரும்பவில்லை என்றால் உன்னை உதாசீனம் செய்தே அழித்துவிடுகின்றார்கள்; அவர்கள் விரும்பினாலும் அவர்களுடைய அன்பும் பிரியமும், கோரிக்கைகளும், வேண்டுதலும் உன்னை அழித்து விடுகின்றது.

''நான் இங்கிருந்து தப்பித்துக்கொண்டு மத்திய கிழக்கு நாடுகளுக்கு வரும் நாளை ஆவலுடன் எதிர்பார்க்கின்றேன். இந்த ஒரு சிறைக்கூண்டை நான் என் கைகளாலேயே செய்து, என்னை அடைத்துக்கொள்ள வில்லை யென்றால், நான் முதலில் பயணமாகத் தயாராக இருக்கும் கிழக்கு நாட்டுக் கப்பலில் பயணப்படுவேன். ஒரு மனிதன் தன் வாழ்நாள் எல்லாம் கற்பனை கொண்டு

கட்டிய கட்டடத்தை, அவனே மெருகிட்டு வேய்ந்த பளிக்குக்கல் தரையை விட்டு தப்பித்துக்கொண்டு வருவானா? அதுவே அவனுக்குச் சிறைக்கூடமாகி விட்டதே!

மே செய்டா தன்னுடைய ஒரு கடிதத்தில் எழுதுகின்றார்: ''நான் என்ன செய்கின்றேன் என்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் நான் உன்னைக் காதலிக்கின்றேன் என்பது மட்டும் தெரிகிறது. நான் காதலிடமிருந்து மிகவும் அதிகமாக எதிர்பார்க்கின்றேன்; நான் எதிர்பார்க்கும் எல்லாம் கிடைத்து விடும் என்று நான் நினைக்கவில்லை; மிகவும் பயப்படு கின்றேன்... நான் உங்களுக்கு இப்படி எழுதுவதற்கு தைரியம் எங்கிருந்து வந்தது...? எப்படி இருந்தாலும் நான் கடவுளுக்கு நன்றி சொல்கின்றேன். ஏனெனில் இதை நான் எழுதுகின்றேன்; சொல்லவில்லை. நீங்கள் இங்கு என்னுடன் இருந்திருந்தால் நான் இப்படிப்பட்ட ஒரு வாக்குமூலத்தைச் சொன்ன உடனே ஓடி ஒளிந்து கொண்டிருப்பேன்; எங்காவது மறைந்து விட்டிருப்பேன். நீங்கள் நான் கூறியதை மறந்துவிடும்வரை, தங்கள் முன் வந்திருக்கமாட்டேன்.

''நான் இவ்வளவு சுதந்திரம் உங்களிடம் கொண்டாடிய தற்காக என்னையே கடிந்துகொள் கின்றேன். என்ன இருந்தாலும் சரியோ தவறோ என் இதயம் உங்களிடமே வாழ்கின்றது; அது செய்ய வேண்டிய மிகவும் நல்ல காரியம் என்னவெனில் அது உங்களையே வட்டமிட்டுக் கொண்டு, உங்களை இரக்கம், தயை, பச்சாதாபம் பொங்க பாதுகாக்கட்டும்.''

மே செய்டாவின் இதயம் நீண்டகாலம் ஜிப்ரானைச் சுற்றி வட்டமிடத் தேவையற்றதாய்விட்டது; ஜிப்ரான்

*உடல்நிலை மிகவும் மோசமாகிக் கொண்டிருந்தது; அதற்கு ஜிப்ரான் பதிலளித்தார். ''மே செய்டா! நான் பிரிந்துசெல்ல நினைக்கும் போதெல்லாம்-அதாவது உன்னை நினைக்கும்போது நான் என் எண்ணங்களிலே மகிழ்ச்சி கொள்கின்றேன்; நான் உலகைவிட்டு மறைவதிலே மிகவும் திருப்தி அடைகின்றேன்.''*

*ஜிப்ரான் 1931-ஆம் ஆண்டில் தன் நாற்பத்து எட்டாம் வயதில் மறைந்துவிட்டார். ஜிப்ரானும், மே செய்டாவும் பத்தொன்பது ஆண்டுகள் ஒருவரையொருவர் சந்திக்காமலே, காதல்வயப்பட்டு, கண்டு பேசி இணையாமல், கடிதம் மூலமே காதலர்களாய் வாழ்ந்தார்கள்.*

# ஸல்மா கராமி

## Salma Karamy

ஜிப்ரானுக்கு வயது பதினெட்டு. ''காதல் என் கண்களைத் திறந்தது; ஸல்மாவின் மயக்கும் ஒளிக்கதிர்கள் கண்களில் ஒளிவிட என் முதற்காதல் உருவாயிற்று. ஸல்மா கராமியே அந்த மாதரசி.''

ஜிப்ரான் தன் முதற் காதலைக் கதையாக அரபிக் மொழியில் எழுதினார். உலகில் வேறெந்த ஆசிரியரும் இவ்வளவு அழகாக, நயமாக தங்கள் முதற்காதலை ஜிப்ரானைப் போல் எழுதவே இல்லை. வர்ணிக்கவே இல்லை. இருந்தாலும் ஜிப்ரானின் அண்டை வீட்டுக்காரர்களும், சில வாழ்க்கை வரலாற்று ஆசிரியர்களும் ஜிப்ரான் காதலித்த முதல் பெண்மணியின் பெயர் அல்-எல்-டஹார், அந்த காதல் கதை நிகழ்ச்சிகள் பெச்சிரியில் நிகழ்ந்ததே அன்றி பெய்ரூட்டில் இல்லை என்று உறுதியுடன் கூறுகின்றனர்.

ஜிப்ரான், மார்சர்சீஸ் என்ற மடாலயத்தில் முதன்முதலில் ஸல்மா கராமியைச் சந்தித்த அந்த இடத்தை வாங்க வேண்டுமென்று விரும்பினார். அந்த

மடாலயம் ஒரு பெரிய மலைச் சிகரத்தில் பாதுகாப்பிற்கும் அடைக்கலம் அடை வதற்கும் ஏற்றதாக நிர்மாணிக்கப் பட்டிருந்தது. பழங் காலத்தில் அதை அடைய கயிற்றின் உதவியோ ஏணியின் உதவியோ தேவைப்பட்டது. ஆனால் மரியானா, ஜிப்ரானின் தங்கை இந்த மார்சர்சீஸ் மடாலயத்தை வாங்கிவிட்டார். இதை வந்து காண விரும்பும் பயணிகளுக்கு உதவியாக இருப்பதற்காக ஒரு நடைப்பாதை அமைக்கப்பட்டது; இந்த இடத்திலேதான் எல்லா அன்பர்களும் ஜிப்ரானுக்கு தலைவணங்கி அஞ்சலி செய்கின்றனர். ஜிப்ரான் தன் கடைசி நாட்களை மார்சர்சீஸ் மடாலயத்தில் அமைதியாகக் கழிக்க ஆசைப்பட்டார். ஆனால் அவர் இறந்த பிறகே மார்சர்சீஸில் அடைக்கலம் புக நேர்ந்தது.

ஜிப்ரான் எழுதிய கடைசி கால கடிதங்களில் அவர் மத்திய கிழக்கு நாடுகளுக்கு வந்து, லெபனான் நாட்டில் உள்ள பெச்சிரி என்ற ஊரில் மார்சர்சீஸ் என்ற மடாலயத்தில் தங்கி இருக்க விரும்பினார். அந்த ஆசிரமம் கற்பாறைகளினிடையே அமைந்தது; அது பெரும் அழகிய பள்ளத்தாக்கைப் பார்த்தபடி மிகவும் ஆச்சரியப்படத்தக்க வகையிலே கண்களுக்கு விருந்தளித்தது. எழில் கொஞ்சும் பள்ளத்தாக்கிலே மெய்ம் மறந்து வாழவே விரும்பினார்.''

ஜிப்ரான் இந்தவித வாழ்க்கைக்கு ஏங்கினார். ''இயற்கையின் இதயத்திலே புதிய வாழ்க்கை, பொன்நிற கோதுமை வயல்களுக்கு இடையே பசுமையான புல்வெளிகளிலே மந்தை மந்தையாய் ஆடுகள் புல்வெளியில் மேய, நீர்வீழ்ச்சிகள் கர்ஜனை செய்ய, சூரியனின் ஒளியை பனிப்படலம் பிரதிபலிக்க, எப்படிப்பட்ட காட்சி.''

ஸல்மாவை, 'முறிந்த சிறகுகள்' என்ற தன் நூலிலே

*வாசகர்களுக்கு மிக அழகாக படம்பிடித்துக் காட்டுகின்றார்.*

*கடந்த 50 ஆண்டுகளாக அராபிக் மொழியில் மிக அதிகமாக விற்பனையாகும் நூலாக, ஜிப்ரானின் காதல் கதை மிளிர்கின்றது.*

*(குறிப்பு : முறிந்த சிறகுகள், ஒடிந்த சிறகுகள், சிதைந்த சிறகுகள் என்று தலப்பிட்டு பேராசிரியர் பெருமாள், கவிரத்ன நலங்கிள்ளி, திகசியின் பேரன் முழுமுதல்வன் (கணபதி) நர்மதா பதிப்பகம் என்று பலரும் தமிழில் மொழிபெயர்த்துள்ளனர். 1999-ஆம் ஆண்டில் சூரியன் பதிப்பகம் மூலமாக கவிஞர் அனிதா அவர்கள் வெளியீடாக ஆ.மா. சகதீசன் மொழி பெயர்ப்பும் வெளியிடப்பட்டுள்ளது. மிகவும் தெளிவாகவும் சுருக்கமாகவும் உள்ளத்தைத் தைக்கும்படி, உயிர் இருக்கும் சொல்லோவியம்தான் முறிந்த சிறகுகள் ஆ.மா. சகதீசன்.)*

*கவிஞர் 'துறவி' அவர்கள் வசன கவிதை வடிவில் நர்மதா பதிப்பகம் மூலமாக எழுதியுள்ளார்.*

*(திரு. கிருஷ்ணபிரசாத் சென்னையில் பொறியாளர் அவர் 'காவியா' பதிப்பகம் சண்முகசுந்தரம் அவர்களின் சலியாத முயற்சியால் கலீல் ஜிப்ரானின் 17 நூல்களை 2 தொகுதிகளாக வெளியிட்டுள்ளார். அதில் 'முறிந்த சிறகுகள்' இடம் பெற்றுள்ளது. அ.மா.சகதீசன்)*

# கலீல் ஜிப்ரான்

(வாழ்க்கை வரலாறு)

ஆ.மா.சகதீசன்

கலீல் ஜிப்ரான் ஆம் அவர் தத்துவஞானி அறிவியல் மேதை; மிகப் பெரிய கவிஞர்; ஒப்புயர்வற்ற ஓவியர்; மதக் கோட்பாடுகளை எதிர்த்து பேனாவை வாளாக்கிப் பெரும் போர் புரிந்த புரட்சிக்காரர், லெபனான் நாட்டிலே பிறந்து அமெரிக்காவிலே வளர்ந்து, வாழ்ந்து, உயிர்நீத்த உலக மகாச் சிந்தனையாளர்.

உருவகக் கதைகளின் வளர்ச்சிக்கு உயிர்கொடுத்த ஞான ஆசிரியன். 'தீர்க்க தரிசி' என்ற உலகம் போற்றும் நூலை உருவாக்கிய இவரே ஓர் தீர்க்கதரிசிதான். மகாகவி தாந்தேயையும் மிஞ்சும் அளவிற்கு புகழ்பெற்ற மகாகவி; இரவீந்திரநாத் தாகூரின் 'கீதாஞ்சலி'யைப் போல் கிழக்கு நாடுகளின் தெய்விகத்தை, ஞானத்தைப் பாருள்ளளவும் போற்றிப் புகழவல்ல 'தீர்க்கதரிசியை' எழுதிய ஞானஊற்று.

ஓவியக்கலையில் ஒரு புது பாணியைத் தனதாக்கிக் கொண்டு தன் தத்துவங்களுக்கு, சிந்தனைகளுக்கு, ஞான மொழிகளுக்கு உருவமும், வடிவமும் கொடுத்து உயிரோவியங்கள் பல நூறு வரைந்த உலக மகா ஓவியர். அவர் ஓவியங்களில் ஆண் பெண் உருவங்களை

அப்படியே ஆடையின்றி, தன் தத்தவத்தையே ஆடையாக்கி தன் சிந்தனைகளை தெள்ளத் தெளிய அறிவிக்கும் கருவியாய் அவற்றை நடமாட விட்டு நடை ஓவியமாக்கியவர்.

கலீல் ஜிப்ரான் புத்தகங்களை துருக்கி, சிரியா, லெபனான் நாடுகளிலே அரசியல்வாதிகளும், மதவாதிகளும், கடைவீதி களிலே, பொது சதுக்கங்களிலே தீக்கிரையாக்கி, கொளுத்தி தங்கள் அதிகார ஆவேசத்தை உலகுக்கு அறிவித்தனர். அத்தகைய புரட்சிக் கருத்துகளை மதத்தின் கண்மூடி பழக்க வழக்கங்களைச் சாடி, தைரியமாக எழுதிய புரட்சி எழுத்தாளர் கலீல் ஜிப்ரான். அவருடைய ஓவியக்கண்காட்சி உலகின் மிகப் பெரிய நகரங்களிலெல்லாம், லண்டன், பாரீஸ், ரோம், நியூயார்க், பாஸ்டன் முதலிய பெருநகரங்களில் நடந்தது. இதனை மக்கள் கண்டு வியந்து பாராட்டினர்.

அவருடைய தீர்க்கதரிசி **(The Prophet)** என்ற நூல், உலக மொழிகள் 25க்கும் மேற்பட்ட மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு பல லட்சம் பிரதிகள் விற்பனை ஆகியுள்ளன.

ஜிப்ரான் 6-12-1883-ஆம் தேதியன்று லெபனான் நாட்டின் மலைச் சிகரங்களில் தேவதாரு மரங்கள் அடர்ந்து வளர்ந்த 'பெயிரி' என்ற சிறு ஊரில்தான் பிறந்தார். சிடார் மரங்கள் வானளாவி உயர்ந்து ஆகாயத்தையே தொட்டுவிடும். அங்கே பிறந்த ஜிப்ரானும் வான் முட்டும் புகழ்பெற்ற மகாகவிஞர் எனப் பெயர் பெற்றார்.

கலீல் ஜிப்ரானின் தாயார் கத்தோலிக்க மத போப்பாண்டவரால் தனிச் சலுகை பெற்ற, சிரிய மொழியிலும் அரபிக் மொழியிலும் மாதா கோயில்களில் ஏசுநாதர் பற்றியும், பைபிள் பற்றியும் பிரசங்கம் செய்ய

அனுமதிக்கப்பட்டவர். திருமணம் செய்துகொண்டு குடும்ப வாழ்க்கை நடத்த அனுமதி பெற்ற 'மரோனைட்' பாதிரியாரின் மகள். இந்தச் சலுகைகள் ரோம் நகர வாடிகன் சிடி 'கார்டினல்'களுக்குக்கூட கிடையாது.

ஜிப்ரானின் தாயாருக்கு அரபிக் மொழி, பிரெஞ்சு மொழி இரண்டும் நன்றாகத் தெரியும். அவர் பெயர் கமீலா. இவருக்குத் திருமணமான பிறகு கணவருடன் பிரேசில் நாட்டுக்குச் சென்றார். அங்கே அவர் கணவர் நோய்வாய்ப்பட்டு இறந்துவிட்டார். அவர்களுக்குப் பீட்டர் என்று ஒரு மகன் பிறந்தான். பிறகு கமீலா தன் மகனுடன் தாய்நாட்டிற்குத் திரும்பிவிட்டார். அவர் தகப்பன்தான் மரோனைட் பாதிரியார் ஸ்டீபன் ராமி.

பிறகு ஒருநாள் கமீலா தன் தோட்டத்தில் பாடிக்கொண்டிருந்தபோது கால்நடைகள் வியாபாரம் செய்து அரசாங்கத்திற்கு வரிவசூல் செய்துகொண்டிருந்த ஜிப்ரானின் தகப்பனார் கமீலாவின் இசையில் மயங்கி அவரைத் திருமணம் செய்து கொண்டார். பிறகு இவர்கள் இருவருக்கும் ஜிப்ரான், மரியானா, சுல்தானா என்று மூன்று குழந்தைகள் பிறந்தனர். கமீலா இவர்கள் அனைவருக்கும், இசை, அரபிக், பிரெஞ்சு மொழிகளைக் கற்பித்தார். பீட்டர் புல்லாங்குழல் வாசிப்பதிலும் பாட்டுகள் பாடுவதிலும் வல்லவனானான்.

இவர்களுக்கு ஆங்கிலம் சொல்லித்தர ஓர் ஆசிரியர் அமர்த்தப்பட்டு வீட்டிலேயே ஆங்கிலம் கற்பிக்கப்பட்டது.

கமீலாவிற்கு மிகவும் இனிமையான குரலும், உள்ளம் உருகும்படி பாடும் பேராற்றலும் இருந்தது. இந்த ஞானம் ஜிப்ரானை மிகவும் கவர்ந்து ஆட்கொண்டது.

பீட்டர் அமெரிக்கா சென்று பொருள் தேட விரும்பினார். ஜிப்ரானின் தகப்பனாருக்கு பஸ்ஸிரியில் இருக்கும் நிலபுலன்களையும், வரிவசூலிக்கும் தொழிலையும், கால்நடை வியாபாரத்தையும் விட்டுச் செல்ல இயலவில்லை. ஆகவே கமீலா, பீட்டர், ஜிப்ரான், மரியானா, சுல்தானா ஆக ஐவரும் பாஸ்டன் சென்றனர். பீட்டர் பாஸ்டனில் ஒரு பலசரக்குக் கடைவைத்தார். மற்ற மூவரும் பள்ளிக்குச் சென்று படித்தனர். ஜிப்ரான் தன் 14-ஆம் வயதில் புயூரட் திரும்பிச் சென்று அல்கிக்மெட் என்ற கல்லூரியில் படித்துத் தேர்ந்தார். இந்தக் காலத்திலே தன் தகப்பனாருடன் கிரீஸ், ரோம், எகிப்து, இத்தாலி, ஸ்பெயின் முதலிய எல்லா மத்திய தரைக்கடல் நாடுகளையும், ஜெருசலேம், பால்பெக், பாலஸ்தீனம் முதலிய மத, சரித்திர புகழ்பெற்ற சிதைந்த சாம்ராஜ்யங்களையும் சுற்றிப் பார்த்தார்.

பிறகு (1901-1903) வரை பாரீஸ் நகரில் ஓவியம், சிற்பம் முதலிய நுண்கலைகளைப் பயின்றார்.

இந்தச் சமயத்தில் ஜிப்ரானின் தங்கை சுல்தானா பாஸ்டன் நகரில் நோய்வாய்பட்டு இறந்துபோனாள். தாயார் கமீலாவும் உடல்நலம் குன்றி படுத்த படுக்கையானார். ஆகவே ஜிப்ரான் மறுபடியும் பாஸ்டன் நகருக்குத் திரும்பினார். இரண்டு ஆண்டுகளுக்குள் பீட்டர், சுல்தானா, கமீலா ஆக மூவரும் காசநோயால் இறந்துவிட்டனர். மரியானா மட்டும் தப்பினார்.

பிறகு ஜிப்ரானின் படிப்பு, கலை வாழ்க்கை, ஓவியம் எல்லாம் தடைப்படாமல் இருக்க மரியானா துணி தைத்து, துணியில் கைவேலை செய்து பணம் சம்பாதித்து ஜிப்ரானுக்கு குடும்ப கஷ்ட நஷ்டம் தெரியமல் பார்த்துக் கொண்டார்.

*இந்தக் காலகட்டத்தில் ஜிப்ரான் அரபிக் மொழியில் நிறைய கவிதை, கட்டுரை, கதைகள் எழுதினார். எகிப்து, சிரியா, லெபனான் முதலிய நாட்டு பத்திரிகைகளிலும் மாத வார இதழ்களிலும் அவை வெளிவந்தன. அவர் எழுத்தின் வேகம் ஓட்டாமன் சாம்ராஜ்யத்தையே அசைத்துவிட்டது. அரபிக் நாடுகளில் ஒரு பெரிய விழிப்புணர்வை உண்டாக்கிற்று.*

*1904-ஆம் ஆண்டில் ஜிப்ரான் லெபனான் நாட்டுப் பெண்மணி ஒருவரிடம் 20 டாலர் கடன் வாங்கி ஓர் அரங்கத்தை வாடகைக்கு எடுத்து தன்னுடைய ஓவியங்களை கண்காட்சியாக வைத்தார். இதைக் கண்ட மக்கள் பிரமிப்பு அடைந்து அவர் திறமையை வியந்தனர். ஓவியக் கலையில் அவர் புகழ் பரவ ஆரம்பித்தது.*

*மரியானா இன்றும் பாஸ்டனில் வாழ்ந்து கொண்டிருக் கிறார். 'பார்பரா யெங்' என்ற ஜிப்ரானின் நெருங்கிய தோழியார் தன்னுடைய* 'This Man From Lebanon' *லெபனானில் தோன்றிய மனிதன் நூலை மரியானாவிற்கு காணிக்கையாக்கினார். (1944)*

*ஜிப்ரான் தன் தாயின் குணங்கள், பழக்க வழக்கம், அறிவு, அனுபவம் அனைத்தையும் பெற்றார். ஆனால் ஜிப்ரான் சொல்கின்றார். ''நான் என் தாயின் அழகையும், பெரிய இதயத்தையும், அடக்கம், பணிவு இவற்றை மட்டும் பெறவில்லை என்று. 'முறிந்த சிறகுகள்' என்ற நூலின் தலைப்பையே தன் தாயின் சொற்களிலிருந்தே பெற்றார். ஜிப்ரானின் வாழ்க்கையைப் பற்றி அறிய வேண்டுமானால்* A Self Portrait, *'ஜிப்ரானின் கடிதங்கள்'* 'Mirrors of the Soul' *'ஆத்மாவின் கண்ணாடி'* This Man From Lebanon by Barbara Young *பார்பரா எங் எழுதிய லெபனானில் தோன்றிய மனிதன் என்ற நூல்கள் விரிவாக விளக்குகின்றன.*

ஜிப்ரான் 1883-ஆம் ஆண்டில் பிறந்து 1931-ஆம் ஆண்டில் இறந்தார். 48 ஆண்டு வாழ்ந்த ஜிப்ரான் திருமணமே செய்து கொள்ளவில்லை. தன் கலையுலகப் படைப்பிற்கு, தன் காவியப் படைப்புகளுக்குத் திருமணம் ஒத்துவராது என்று கூறித் திருமணத்தைத் தவிர்த்தார்.

ஜிப்ரானை உருவாக்கி, அவர் வாழ்க்கையிலே பெரும் பகுதியைக் கவர்ந்து, அவருடன் வாழ்ந்து, இன்ப துன்பங்களிலே பங்குகொண்ட பெண்மணிகள் பலர். அவர்களிலே சிலரை இங்கு குறிப்பிட சுவையூட்டும்.

ஜிப்ரானின் தாய் கமீலா, அழகு, அறிவு, ஆற்றல், அடக்கம், பணிவு, தாய்மை, தெய்விகத் தன்மை, ஒழுக்கம், தியாகம் முதலிய எல்லாவற்றிற்கும் அவள் ஓர் இலக்கணம். கலையில் ஈடுபாட்டையும், காவியப் படைப்பின் பேராற்றலையும் அவளிடமிருந்துதான் பெற்றார் ஜிப்ரான்.

எமிலி மிச்சல் (மிச்சலைன்) என்ற அழகி ஜிப்ரானால் கவரப்பட்டு திருமணம் செய்துகொள்ள வேண்டினாள். ஜிப்ரான் மறுத்துவிட்டார். இவளைப் படம் வரைந்ததாகக் கூறுவர். நிரூபணமாகவில்லை. ஓல்கா என்ற ரஷ்ய அழகியும், ரோசினா என்ற இத்தாலிய பெண்மணியும் ஜிப்ரானுக்கும் ஜோசப் ஒய்க் என்பவருக்கும் பாரிஸ் நகரில் இரண்டு ஆண்டு மாதிரிப் பெண்களாக (Model Girls) சிற்பம், ஓவியம் இவற்றிற்கு உதவினர்.

'மேரி E. ஹஸ்கல்' என்பவர் 1904-ஆம் ஆண்டு ஜிப்ரானுக்கு பொருளுதவி செய்து கண்காட்சிக்கு உதவினாள். பிறகு ஜிப்ரான் பாரீஸ் நகருக்குப் போய் ஓவியத்தைக் கற்க பொருளுதவி செய்தார்.

ஜிப்ரான் தன்னுடைய முறிந்த சிறகுகள் (The Broken Wings) புத்தகத்தை 'மேரி E. ஹஸ்கலு'க்கு காணிக்கை யாக்கினார்.

மேரி கோயூரி என்பவருடன் ஜிப்ரான் நெருங்கிப் பழகினார். இருவருக்கும் இடையில் நடந்த கடிதங்கள் பலவும், ஜிப்ரானின் ஓவியங்களும் ஒரு நண்பர் வசம் வெளியிட கொடுக்கப்பட்டு இருவரும் இறந்துவிட்டதால் என்னவாயினவோ தெரியவில்லை. அவை எல்லாம் காதல் கடிதங்கள்.

'பார்பரா எங்' என்பவர் 1924-ஆம் ஆண்டு முதல் 1931-ஆம் ஆண்டுவரை ஜிப்ரானுடன் இரவும் பகலும் உடனிருந்து அவரைப் போற்றி புகழ்ந்து, நேசித்து, ஆதரித்து, பக்தியுடன் ஜிப்ரானின் புகழ் பரப்பினார்.

1923-ஆம் ஆண்டில் முதல் முறையாக ஜிப்ரானின் 'தீர்க்கதரிசி'யைப் (The Prophet) படிக்கக் கேட்டு ஜிப்ரானுடன் தொடர்பு கொண்டு ஏழு ஆண்டு உடன் இருந்தார். பார்பரா ஓர் ஆங்கில மாது. உயரம், அழகு, நிறம் எல்லாம் நிறைந்த ஆங்கில ஆசிரியை.

பார்பரா ஜிப்ரான் உயிர்விடும்போதுகூட இருந்தவர். 18 ஆண்டுகளாய் அவர் பாதுகாத்து வரைந்த, எழுதிய எல்லா ஓவியங்களையும், உடைமைகளையும் சேர்த்து 'பெசிரி' என்ற ஜிப்ரானின் பிறந்த ஊருக்கு லெபனான் நாட்டிற்கு அனுப்பி வைத்தவர் இவர்தான்.

ஜிப்ரான் நியூயார்க் நகரில் பழைய மேற்கு பத்தாவது தெருவில் ஒரு பல மாடிக் கட்டடத்தில் நான்காம் மாடியில் வாழ்ந்தார். பார்பரா அவருடன் தங்கி இருந்து அவர் கதை, கட்டுரை, கவிதைகளைச் சொல்லும்போது, எழுதி அதை முறைப்படுத்தி வெளியிட்டார்.

Sand and Foam. Jesus-The Son of Man எல்லாம் அப்படி

எழுதப்பட்டவையே. ஒருமுறை ஜிப்ரானிடம் நீங்கள் ஏழே வார்த்தைகளை நினைவுகொள்ள வேண்டும், மற்ற எல்லாவற்றையும் மறக்க வேண்டும் என்ற நிர்ப்பந்தம் ஏற்பட்டால் எந்த ஏழு வார்த்தைகளைத் தேர்ந்தெடுப்பீர்கள் என்ற போது ஜிப்ரான் கூறினார் "God, Life, Love, Beauty. Earth... என்றார். இன்னும் இரண்டு வார்த்தைகள் என்ன என்று பார்பரா கேட்டபோது ஜிப்ரான் You and I என்று கூறிவிட்டு "நாம் இருவரும் இல்லாமல் இந்த வார்த்தைகளே இல்லை" என்றார். "கடவுள், வாழ்க்கை, காதல், அழகு, பூமி, நீ, நான். இவையே அந்த ஏழு வார்த்தைகள்."

ஒரு சமயம் ஒரு பெண் நீங்கள் ஏன் திருமணம் செய்து கொள்ளவில்லை என்று கேட்டபோது ஜிப்ரான் கூறினார். "நான், நாள்கணக்காய் என்னையே மறந்து ஓவியம் எழுதுவதிலோ, காவியம் புனைவதிலோ லயித்து இருந்து விடுவேன். எந் மனைவியும் இதை சகித்துக்கொள்ள மாட்டாள்" என்றார்.

நீங்கள் காதலித்ததே இல்லையா? என்று கேட்ட போது கூறினார். "உலகத்திலேயே மிகவும் காதல் வயப்பட்டவர்கள் யார் தெரியுமா? 'கவிஞர்கள், சிற்பிகள், ஓவியர்கள், பாடகர்கள், இசை வல்லுநர்கள், புதியன தோற்றுவிப்போர்... என்றும் "இனக்கவர்ச்சி (Sex) மிகவும் அழகானது; மிகப் பெரிய கொடை, பரிசு, மிக வெட்கமுடையது" என்றும் கூறினார்.

இன்னும் பல எழுத பெருகும். நிற்போம். மரியானா என்ற தங்கை ஜிப்ரானின் ஓவிய காவியப் பணிகள் தடைப்படாமல் இருக்க இரவும் பகலும் உழைத்து பொருள் சேர்த்து உதவினாள்.

'மே செய்டா' என்ற லெபனான் நாட்டுப் பெண் எகிப்தில் குடியேறி, பத்திரிகை ஆசிரியராய் வாழ்ந்தாள்.

ஜிப்ரானைப் பார்க்காமலேயே அவர் எழுத்துக்களின் வேகத்தைக் காதலித்தாள். அவருடைய இலக்கியத் தோழி இவள். மத்திய கிழக்கு நாடுகளில் பெண்களின் விடுதலைக்காக போராடி, எழுதி, விழிப்பைடயச் செய்தவர் 'மே செய்டா,'

முறிந்த சிறகுகள் முதல் பிரதியை 'மே செய்டா' விற்கே ஜிப்ரான் அனுப்பி வைத்து அதைப் பற்றியே விமர்சனத்தை எழுதும்படி கேட்டுக்கொண்டார்.

மே செய்டா, ஜிப்ரானை மத்திய கிழக்கு நாடுகளுக்கு வரும்படி வேண்டினாள். ஜிப்ரான் அவளை அமெரிக்கா வரும்படி கேட்டுக்கொண்டார். 19 ஆண்டு இருவரும் ஒருவரையொருவர் பார்க்காமலே, காதல் கொண்டு, கடிதங்களில் தங்கள் காதலை விவரித்துக் கொண்டிருந்தனர்.

''மே செய்டா, நான் உன்னைக் காதலிக்கின்றேன். காதலியிடம் எனக்குப் பயம் அதிகம். ஏன் தெரியுமா? நான் காதலியிடம் மிக அதிகமாக எதிர்பார்க்கின்றேன்; ஆனால் எதிர்பார்ப்பதெல்லாம் கிடைப்பதில்லை; நிறைவேறுவதில்லை. சரியோ தவறோ, என் இதயமெல்லாம் உன்னிடமே இருக்கிறது..'' என்று எழுதினார்.

'சல்மா கராமி' : இவர்தான் ஜிப்ரானின் காதல் கண்களைத் திறந்த முதல் காதலி; ஜிப்ரானின் இதயத்திலே அன்பை, நேசத்தை, பாசத்தை, ஆசையை மலரச் செய்த முதல் பெண்ணரசி. சல்மாவை முதன் முதலில் 'மார்சர்சீஸ்' என்ற மடாலயத்திலேதான் சந்தித்தார். சல்மாவையும், 'மார்சர்சீஸ்' மடத்தையும் ஜிப்ரான் தன் வாழ்நாள் எல்லாம் மறக்கவில்லை.

ஜிப்ரானின் மறைவுக்குப் பிறகு 'மரியானா'

(ஜிப்ரானின் சகோதரி) இந்த 'மார்சர்சீஸ்' மடத்தை வாங்கினார். இது பெஸ்ஸிரியில் உள்ளது. லெபனான் நாடு மத்திய கிழக்கு நாடுகளில் உள்ளது. இந்த 'மார்சர்சிஸ்'தான் இப்போது ஜிப்ரானின் பூதவுடல் உறங்கும் சொர்க்கம். கலீல் ஜிப்ரானை நேசிப்பவர்கள் சென்று ஜிப்ரானுக்கு அஞ்சலி செலுத்தும் அழகுச் சோலை.

ஜிப்ரான் தன் கடைசி காலத்தை 'மார்சர்சீஸ்'ஸில்தான் கழிக்க விரும்பினார். ''இயற்கையின் இதயத்திலே, மலைக் குன்றுகளுக்கு இடையே ஓர் சிகரத்தில் உள்ளது. அங்கிருந்து பார்த்தால் பச்சைப் பசும்புல் நிறைந்த சமவெளியும், பொன்னைப் போனற் கோதுமை வயல்வெளிகளும், மந்தை மந்தையாய் புல்வெளியெங்கும் மேயும் ஆடுகளும், சீறி கர்ஜிக்கும் நீர்வீழ்ச்சிகளும், உதயமாகும் சூரியனின் ஒளிக்கதிர் களை பிரதிபலிக்கும் பனித்திரையும்...'' என்று வர்ணிக்கும் அழகு நீளுகிறது.

ஜிப்ரான் போற்றிப் பின்பற்றிய ஞானிகள், அறிஞர்கள் பலப்பலர். அவர்களில் சிலர்.

'அல்பரீட்', கவிஞர் (1119-1220)இல் வாழ்ந்தவர். 'அல்கசாலி' மிகப்பெரிய தத்துவஞானி, துறவி, புத்தரின் சிந்தனைகள் பிரதிபலிக்கும்.

'அவிசின்னா'வின் ஆத்மா, ஞானம், மிகவும் ஆழ்ந்த தாக்கத்தை ஜிப்ரானில் ஏற்படுத்தியது.

ஜான் F. கென்னடி ''நீ நாட்டிற்கு என்ன செய்தாய் என்று பார்; நாடு எனக்கென்ன செய்தது என்று கேட்காதே!'' என்பதை 1960-ஆம் ஆண்டில் அமெரிக்க மக்களை துடித்தெழச் செய்ய அடிக்கடி கூட்டங்களில்

கூறினார். ஆனால் இந்தக் கரு ஜிப்ரானின் சிந்தனை. அவர் 1925-ஆம் ஆண்டில் "Ask not What your Country can do for you" ''உன் நாடு உனக்கென்ன செய்தது என்று கேட்காதே'' என்று அமெரிக்காவில் குரல் எழுப்பினார்.

ஔவையார் ''கற்றது கைம்மண்ணளவு, கல்லாதது உலகளவு'' என்றார் இல்லையா.

கலீல் ஜிப்ரானின் "Hand ful of Beach Sand" என்ற கவிதை 'கடற்கரையிலே கைப்பிடி மணல்' ஔவையின் எண்ணங் களைப் பிரதிபலிக்கிறது.

கலீல் ஜிப்ரானை முழுமையாக அறிந்து உணர வேண்டுமென்றால் அவர் நூல்கள் அனைத்தையும் படிக்க வேண்டும். அப்போதுதான் நாம் திருப்தி பெற முடியும்.

மார்க்ஸிஸம், லெனினிஸம், சோசலிஸம், கம்யூனிஸம் என்பது போல் 'ஜிப்ரானிஸம்' என்பதும் ஒரு தத்துவமாய், கொள்கையாய், நடைமுறையாய் அறிஞர்களிடம் பரவியுள்ளது.

ஜிப்ரான் இரண்டு மொழிகளில் எழுதினார் 'அரபிக்' மொழியில் எழுதி லெபனான், சிரியா மற்றும் அரபிய உலகம் அறியவும், ஆங்கிலத்தில் எழுதி மேற்கு நாட்டு மக்களும் உலக மக்களும் அறியவும் எழுதினார். அவரை வியந்து, பின்பற்றுவோர் அவருடைய அரபிக் மொழி நூல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தனர்; அவரின் ஆங்கில நூல்களை அரபிக் மொழியில் பெயர்த்தனர். பெரும்பாலும் மொழி பெயர்ப்பு என்பது எப்படிப்பட்டது தெரியுமா? பாதைகள் அற்ற ஒரு நாட்டிற்கு புதிய மோட்டார் வாகனங்களை ஏற்றுமதி செய்து அனுப்புவது போலவும், மிக வேகமாக செல்லும் வாகனங்களின் பாதையிலே செல்ல குதிரைகளைப் பழக்குவது

போலவும்தான் ஆகிறது. ஜிப்ரானின் நூல்களை, எழுத்துக்களை நன்றாகப் புரிந்துகொள்ளவும் நீதி வழங்கவும் வாசகர்கள் அவருடைய சூழ்நிலைகளும், சுற்றச் சார்புகளும் சாதாரணமாக இல்லாமல் மிகவும் பிரச்சினை மிக்கதாய் இருந்து, இரட்டைத் தோற்றத்தை இரட்டை உருவங்களை ஜிப்ரானில் உருவாக்கியது என்று அறிய வேண்டும். உதாரணத்திற்கு சொல்ல முனைந்தால் அவர் வாழ்க்கையின் வரலாற்று ஆசிரியர்கள் அவர் நாடுகடத்தப் பட்டார் என்று கூறுவர். ஆனால் அவர்களால் லெபனான் அரசாங்கம் அவரை நாடு கடத்தியது என்பதை விளக்க முடியவில்லை. துருக்கிய நாட்டு சுல்தான்தான் ஜிப்ரானின் புரட்சிக்கருத்துகளை கண்டு பயமடைந்தவன்; நவீன மேற்கு எண்ணங்கள், மேற்கு நாட்டு அரசியல் முறைகள், அரபு நாட்டில் நுழைந்துவிடக் கூடாது என்றும், அப்படி நுழைந்தால் அது கிழக்கு நாடுகளில் துருக்கி நாட்டிற்கு எதிராக புரட்சியை உண்டாக்கும் என்றும் பயந்தார். கலீல் ஜிப்ரான் 10-4-1931 அன்று காசநோயால் 48 வயதில் இயற்கையெய்தினார். உலகத்தின் 'தீர்க்கதரிசி' கலீல் ஜிப்ரான்.

காந்தி நகர்
வேலூர்-632 006.
31-7-2015

ஆ.மா. சகதீசன்
செல் : 9486691034